உ

ஸ்ரீமகா கணபதயே நம:

பரப்ரஹ்மணே நம:

# *குரு லிங்க சங்கம விளக்கம்

---

## திரு நாவுக்கரசு நாயனர்.

### கோயில் திருக்குறுந்தொகை.

'பனைக்கை மும்மத வேழ முரித்தவன்
நினைப்ப வர்மனங் கோயிலாக் கொண்டவன்
அனைத்து வேடமா மம்பலக் கூத்தனைத்
தினைத் தனைப்பொழு தும்மறந் துய்வனே',

'கோதகத்தின் முலையிலிங்கங் குருவா மேனி கூறியசங் கமமுகமாங் குலவுங் சீரம், போதமுலை பொழிந்திடுமென் றதற்கன் பாகப் புல்லளிக்கி லருந்தியிடா வுடலங் கொள்ளா, நீதியினு லருந்துமுகத் தளித்தா லெங்கு நிறைவாகு முத்தி சிவ லிங்கத் தேனும், ஏதமில்சங் கமத்தைவழி படுவோர்க் கன்றி யெண்ணரிய சிவாநுபவ மெய்தொ ணதே'

---

* குரு-சிவாசாரியர் — லிங்கம்-சிவலிங்கம்— சங்கமம்-சிவனடியார்.

என்னும் பரம ரஹஸ்ய சடுஸ்தல திருவிருத்தத்திற் கூறியவாறு பசுமுகரூப சங்கம வழிபாடாகிய 'மண்ணினிற் பிறந்தார் பயன் மதி சூடு மண்ணவார் அடியார்களது' மாஹேசுவர பூஜையாதி மகா கைங்கிரியங்களே சிவ குருவின் றிருவருளீந்து சிவாநந்தப் பெருவாழ்வை எளிதளிக்கத் தகுந்த வன்மையுடையதும், மற்றைக் குரு லிங்கங்கட்கு இன்பளித்துத் தாமே முத்தியின்ப மளிப்பதுமாம்; பரசிவனே சுந்தர மூர்த்தி நாயனர் முதலிய அடியார்களுக்கு உபசரித்தன் முதலியனவும் இதனை விளக்சற் பொருட்டே யென்க.

இதனையே மேலும் விளக்குவாம்;—பசுவினுடலே குரு, அதனுடைய முலையே லிங்கம், அதன் முகமே சங்கமம்: பசுவினை யோம்பிப் பால் கறந்துண்ண விரும்புவோர் அப்பசுவிற்குப் புன் முதலிய வுணவுகளை உசிதமா யுணர்ந்து அதனுடைய முகத்தில் அளித் துண்பித்துத் தேகத்தைப் போற்றுதல் செய்ய, அது செழித்து உளங் களிகூர்ந்து அன்பினுன் முலைக்காம்பு வழியாற் பொழிதராநின்ற பாலைக் கறந் துண்டு பசிப்பிணி தீர்ந்து முசுப்பின்றி வாழ்வர்; அதுபோல முற்றவ மிகுந்த நற்றவக் கல்விக் காட்சி அறிவுடைய மக்களும் சங்கமங்களாகிய திருமுகத்தைத் திருவருளா லுணர்ந்து அதிற் றம்மா லீட்டிய அரும் பெரும் பொருள்களை யெல்லாம் உள்ளப் பேரன்போடு மளித்துக் குருவாகிய திருமேனியை மிகப் போற்றி அது களிக்க முலையாகிய சிவலிங்கத்தினின்றும் பேரன்பாற் பொழிதராநின்ற பாலாகிய முத்தி யின்பத்தினை யுண்டு பவப்பிணி தீர்ந்து நித்தியாநந்தமயராய் வாழ்வார்கள்.

அவ்வாறின்றிச் சிலர் "சங்கமத்தை வழிபடுவோர்க்கன்றி எண்ணரிய சிவா நுபவ மெய்தொணுதே" என்ற பரம ரகசியத்தை உணராது பரவசராய்க் குரு சங்கமங்களைத் தம்மைப்போன்ற நரவடிவமாக் கரு

திப் பராமரித்துத் தம்மை மதித்து மூலரூப சிவலிங்கத்திற்குச் சில வற்றை மாத்திரம் விநியோகித்து முத்தியின்பப் பேறுவிரும்ப, அச் சிவலிங்கம் தாம் கருதிய பயனை யளியாது புறக்கணித்தலால் ஈட்டிய பொருள் வியர்த்தமா யொழியத்தாங் கருதிய பயனை யடைகிறார்களில்லை. மற்றும், பரசிவனுக்கு மன வாக்குக் காயங்களை குரு லிங்க சங்கமம் என்னும் திரிகரணங்களாகச் சொல்லல் தகும். ஆணவம், மாயை, கன்மம் என்னும் மும்மல மொழிக்கக் கருதியவர், அவை யொழிக்க வன்மையுடைய திரிகரண ரூப அக் குரு லிங்க சங்கமங்களை வழிபட லுரிமையாம்; அம்மூன்ற னுள்ளும், மனம்வாக்கு என்னும் இரண்டும் அடங்கிநின்று நிராமய பரசிவனை "ஊக்க முற்றுணர் தற்கிட னுதலினுக்கை யுங்குரு வாயது" என்ற யேன்பாடுடைய காயரூப சங்கம வழிபாடே முன்னர் இன்றியமையாத வுரிமையாம். கூறிப்போந்த மூறைமை யன்றி மற் றெம்மார்க்கத்தினின் றும் முத்தி யின்பம் விரும்புதல் கருங் கல மன்றிக் கரங்கொடு பெருங்கட னீந்த வெண்ணும் பேதையர் செய்கையோ டொக்கும். நுட்பமா யாராயில் குரு சங்கமம் இரண்டும் ஒற்றுமை யுடையன. மற்றைய லிங்கமோ, அவற்றுள் இடையுருது விளங்கும் உயிர்போன் றூந்தரமாம்.

ஆகையால், அச்சிவலிங்கப் பெருமானையே இருதய குகையில் தங்கவைத்துப், பராநந்த பரிதர்களான குரு சங்கமங்கள் வசிக்கும் திருமடாலயாதிகளே, சிவலிங்க வழிபாடு மாத்திரையான சிவாலயங்களினும் மிகச் சிறப்புற் றிலங்குவனவாம்; இதனானே, அன்பர்கள் திரு ஞாந சம்பந்த மூர்த்தி சுவாமிகள், திரு நாவுக்கரசு நாயனார் முதலிய பெரியோர்களுடைய திருமடாலயாதித் தொடர்பினங்களைத் தொன்று தொட்டுப் பாதுகாத்ததும், பாதுகாப்பதுமாய் ஊக்க முயற்சியோடு வழங்கிவருந் தன்மை காண்கூடாம்;

இதற்கு உதாரணம்; திரு மூலட்டானம், "புலம்பலம் பாவரு தொண்டர்க்குத் தொண்டராம் புண்ணியமே" மாணிக்க வாசக சுவாமிகள், "அடியே னுன்னடியார் நடுவு ளிருக்கு மருளைப் புரியாய்" திருமூலர், "சிவயோகி வாசமப் பூமி காசி, சிவயோகி வாக்கு நான் மறை வேதம், சிவயோகி யங்கம் புசிக்கி லமிர்தம், சிவயோகி சேவை சிவன் சேவை யாமே" "வித்தகமாகிய வேடத்த ருண்டவூண், அத்த னயன்மா லருந்திய வண்ணமாஞ், சித்தந் தெளிந்தவர் சேடம் பருகிடின், முத்தியா மென்றுநம் மூலன் மொழிந்ததே" பிரபுலிங்கலீலை "உலகி லொருவன் சிவயோகி யுண்ட தம்ம சராசரமா, மலகி லுயிர்களெலாமுண்ட தாகு மென்ன மறை கூறு, மிலகு முறைமையைக் காட்சியா னின்றிங் குணர வுணர்த்தினான், சலக வினைக டீர்க்குமருட் கண்ணன் றிகழல் லமதேவன்" பட்டினத்தடிகள், "அடியா ருறவு மரன் பூசை நேசமு மன்பு மன்றிப், படிமீதில் வேறு பயனுளதோ," "ஆய்ந்துவிட்டோ, ரில்லினு மன்ப ரிடத்திலுமீச னிருப்பதன்றிக், கல்வி லுஞ் செம்பிலு மோவிருப் பானெங்கள் கண்ணுதலே" [இவர் "அடியா ருறவும்" "என முற்படக் கூறியதை யூகிக்கற்பாலது] வள்ளலார்; "ஒருகண மிருப்பன் றெய்வ வுருவி லீசன் ரூன்மற், றிருகணஞ் செங்கோ லோச்சு மிறையவர் பாலி ருப்பன், அருமறை யவர்கு ழாத்து ளம்புவீ ழளவி ருப்பன், துரியயோ கிகளு ளத்திற் றூங்குவ னிருந்தெப் போதும்" மடாலயச் சிறப்புங் கூறிய ஆன்றோர் வாக்கு, "திடம்பெற்ற ஞானிகள் சேர்கையி னாற்பசி தீர்கையினால், உடம்புற்ற வுண்மை யுறுகையி னுலுப தேசிக்கையால், இடம்பெற்ற மங்கைபங் காளராடிய ரிருக்கையினால், மடம்பெற்ற பேறு திருக்கோ யிலுக்கில்லை வையகத்தே" என வரும், மற்றும் வருவன வற்றுற் காண்க.

இனிப் புருஷார்த்த சம்பந்தமாய நல் லொழுக்க வாராய்ச்சி செய்வாம். ஆன்மாக்களுக்கு ஆணவமாகிய மூல மல காரணத்தினாலே கன்

மாநுசாரமாக வுண்டாகும் பிறப்பு; ஆயினும் "தண்டுலத் தோலுஞ் செம்பினிற் களிம்புஞ் சகசமாய்த் தொழில்விசே டத்தால், விண்டு போ மதுபோற் புருடனு மலத்தை மேவியே போக்குத லியல்பாம்" என்றதற் கியைய உபாய பூதமான ஆராய்ச்சித் தொழிலால் யாவரும் அப்பிறப்பை நிவிர்த்தித்துக் கோடல் தகுதியாம. அப்பிறப்பு, அண்டஜம், உத்பிஜ்ஜம், சுவேதஜம், சராயுஜம்என நான்குபகுதியன. அவற்றுள்ளும், "ஊர்வ பதினொன்று மொன்பானு மாநுடவர், நீர்பறவை நாற்காலி நேர்பத்தாஞ்,சேர்திகழு-மூவாருந் தாபரங்கண் முப்பத்து மும்மையோர், ஆவா ரொருபதா ரும்" எனப் பிரிவினங்களாய் எண்பத்து நான் கிலக்ஷம் யோநி பேதங்க ளுள; இவற்றுள், "புன்மர நெளி புழுப் புள்வி லங்கெனும், பன்மைய துயர்செயும் பவங்க டப்பியே, வன்மைகொ ணிலமிசை மக்க ளாகுதல், நன்மைகொ ளுயிர்க்கலா லரிது நந்தியே" என்ற வண்ணம் இதர யோநிக ளியாவையும் போகத்தினாலும், பிராயச்சித்தாதிகளாலும் நீக்கி, மநுடஜந்மத்திலும் விவேகமுடன் பிறத்தல், "எறியுங் கடலி னுகத்துளையி லாமைக் கழுத்துப் புகுவதுபோற், பொறிவெம் பிறவி யநேகத்தாற் புருடன் விவேகியெனப்பிறந்து," "அடையவேண் டியதடைந்து மேற்றுயர மற்றின்பமளவி லாதாய்க், கடையதாந் தருவிலந்த பறவைகள்போல் வீணுட்கள் கழிபா தாகித், தடையிலா மநநத்தால் வாழ்வதே யுயர்வாணுள் சநநந் தீர்ந்தோ, ருடையபிறப் புயர்ந்ததாங் கிழவே சரிப்பிறப்பா மொழிந்த வெல்லாம்" என்ற நுளியபடி மிகவு மருமையாம்.

பாகவதம், "மடல்வி ரிந்த மரைமலர் வைகுவோன், சடம னைத்தையுந் தந்துமு வந்திலன், இடா றுக்குமென் றெண்ணிநன் மாநுட, வுடல்ப டைத்தபி னேகையுற் றனரோ. "லப்த்வா சுதுர்லபமிதம் பஹுசம்பவாந்தே மாநுஷ்ய மர்த்தமநித்யமபீஹதீர: தூர்ணம் யதேத நபதேதநுமிருத்யுயாவந் நிசிரேயசாய விஷயக் கலு சர்வத ஸ்யாத்."

இ-ள் (அதனால்) இவ்வதி துர்லப மநுடதேகம் அநந்த ஜநநப் பிரவாகங்களின் பின்னர்ப் பொருந்துவதாம், புருஷார்த்தத்தைக் கொடுப்பதாயினும் அநித்யமாயுள்ளதாமென்பதை யறிந்து சீக்கிரம் மிருத்தியு வசமாகாமல் மோட்சலாபத்தின் பொருட்டு யத்தநஞ்செய்க; என்னை; விஷயமோ இவனுக்குச் சர்வ யோநிகளிலும் (பந்திப்பிக்கும்படி உண்டாகுமென்பதனால்):—எ-று. இம்மேற்கோள் கொண்டும் இவ்வருமை கடலைக் கையினால் நீந்திக் கரையேறுதற் கிணையுமாகும்.

மேலும், இவ்வருமையை ஆதியந்தமாக வாராய்வுழி கூன் குருடு செவிடு முதலிய அங்க வீந மின்றிப் பிறத்தல் புண்ணியம். அதனினும், சாஸ்திர மணமும் வீசாத மலைகளினும், வநங்களினும் குறவர், மறவர் முதலியோராய்ப் பிறவாது, சாஸ்திரமாகிற செங்கூழ் வளப்பந் தங்கிய தேசங்களிற் பிறப்பது புண்ணியம்; அதனினும், பரசிவன் இயற்றிய வேதாகமங்கள் வழங்காத மிலேச்ச தேசத்தை விட்டு அவை வழங்கும் "தேவரு மனித்தராய் வரவிரும்புவர்" என்னும் பாதகண்டமாகிற ஆரிய தேசத்திற் பிறத்தல் மிகு புண்ணியம்; அதனினும், மதுமாம்ச பக்ஷணங்களின்றிய சுத்த குலத்திற் பிறத்தல் மிகுதக புண்ணியம்: "நரர்வடி வாயினு நன்மை யாற்றரு, மரபினி லுலகினில் வருத றப்புத, லரிதுநல் லறம்புரி வழிய டுப்பினும், மருவுத லரிதறம் வளர்க்கு மங்கமே." "அறத்து றுப் பெய்தினு மன்பி னுலறஞ், சிறப்புறச் செய்தலிங் கரிது செய்யினும், புறச்சம யங்களைப் போக்கி யாகம, நெறிச்சம யங்களை யரிது நேர்தலே" என்னும் இப்பிறப்பு மிகுதக புண்ணியதமமாம்.

ஆதலால், "இறக்கு முடல மியானெனப்பட் டிறந்து போய வித்துணைநாட், பிறப்பின் மக்கட் பிறப்பம்ம பெறுதற் கரிதா லினிப் பிறவாச், சிறப்பு நெறிதந் திடல்வேண்டுந் தெவிட்டா வமுதே யருட்

கடலே, திறக்கு முனிவ ருளக்கமலந் திறவாத் தெய்வச் சுடரொளி யே'' என்னும் பரமேசுவரப் பிரார்த்தனையை நிரந்தரம் வருந்திச் செய்து புருஷார்த்தப் பேருண முயற்சியில் நிற்றலே அத்தகு புண் ணியதம பலமாகும்; அம்முயற்சியும், அதனு லுறும் பலனும் எங்ஙனமா மெனின்? சற்குரு லக்ஷணம் வாய்ந்த ஆசாரியரைத் தேடி யடைதல், ஈசுவர ஸ்வரூபத்தை யுள்ளபடி காமணி யெனக் காண்பிக்கும் வே தாகம சாஸ்திர ஞாந பாகங்களை அவ்வாசிரியர் முகமாகக் கற்றல், கேட் டலாதிகளை நிரந்தரம், நெடுங்காலம், நேயத்தோடு செய்தல், சாதுக்க ளான பழவடியார் திவ்ய சரித்திரங்களைக் கேட்டும், தரிசித்தும், அவர் கள் மந முவக்கத் தொண்டு செய்தும் மகிழ்தல் முதலிய முயற்சி யுபாயத்தால் ஜநந மரண சம்சார துன்பரூப ஊஞ்சலின் வட மறுப ட்டுச் சாசுவத பரமாநந்த ரூப மோக்ஷ சாம்பிராச்சிய பட்டாபிஷேகஞ் சூடி நிலைத்தலாம் என வறிக.

அங்ஙனம் முயற்சித்துப் பயனை அறியாது, ''மாநுட வாக் கை யென்னு மருவருந் தோணி பெற்று, மூனமில் குரவன் சொல்லா மோடமுய்ப் பவனே டென்சீ, ராணதோ ரநுகூ லக்கா லனு பிற வி வேலை, தானெழி தரவெண் ணுதான் றன்னையே கொல்கின் ரு னும்'' என்பதற்கியைய வியவகார பாகுள்யத்தால் புத்தி மயங்கி மகா பாதகத்துக்காளாய் ''விள்ள ரும்பொய் விளம்பி விருப்பொடு, கள்ள ருந் துங் கசடர்சம் வாய்வயின், ஒள்ள ழல்வைத் துருக்குசெம் பூற்றிடத் தள்ளு வெந்நர கத்திடைச் சார்வரால்'' ''வந்ததோர் முறைபிற் றம் பால் வழங்குவான் வேண்டு கர்க்குப், புந்தியோ டுதவார் கீட போஜந நரகிற் போவார், நைந்திட வுபிணப் பாந்த ளாதியா னலிவித் தோர் தாங், தந்தகு காப்பே ருற்ற தனிநர கெய்து கிற்பார்.'' ''உற்றிடு நிதி யின் குப்பை பொழியுமென் றுதவா லுத்தர், அற்றமில் துயர்செய்

சூசி முகநர கழுந்து வாரால்.'' "நெஞ்சம் வைத்து நிதிமுத லாகவே, வஞ்ச மற்ற பிறர்பொருள் வவ்விஞேர், நஞ்ச மொத்த நமன்படர் தள்ளவோர், தஞ்ச மற்றதா மிச்சிரஞ் சார்குவார்'' என்னும் பாவச் செய்கைக் குற்றபடி தாமிச்சிராதி யளவற்ற நரகங்களில் வீழ்வதோடு, "பெண்டிர் மக்கள் கிளைஞரிவர் பின்னுக் குதவி யென்றெண்ணிக், கண்டி ரறத்தை விட்டவராற் கடன்பட் டிறுத்தோ மென்பர்சிலர், உண்டி ருடுத்தீர் சுற்றத்தி ருற்ற வேளைக் கொருவரும்வந், தண்டிரந்தோ வும்மைநம்பி யான திதுவோ வென்பர்சிலர்'' "தேடிப் பொருளைச் சிறுதொழிற்கே செலுத்தி யுணர்ச்சி தெரியாமற், பாடிப் பதருக் கிறைத்ததெல்லாம் பலித்த தெமக்கிங் கென்பர்சிலர், கேடிப் படிவந் தெமைச்சூழக் கெடுத்த பாவி யுலகிலின்னம்,நாடிப் பிறக்க விடினுமங்கு ஞடோ மென்று சிலர்சொல்வார்.'' "என்று மிறவோ மென்றிருந்தோ மிறந்து படுவ தீதறிந்தா, லன்று படைத்த பொருளையன்றேயருள்வோ மறையோர்க் கென்பர்சிலர், சென்று வரவாங் கெமையின்னஞ் செலுத்திற் புதைத்த திரவியத்தை, யொன்று மொழியா தறம்புரிந்திங் கோடி வருவோ மென்பர்சிலர்'' என வாங்குத் துன்புற்றலறுவது சுருதிப் பிரசித்தமாம்.

இவ்வாருன சுருதி சம்மத வபிப்பிராயங்களை இவ்வுலகிற் சீவித்திருக்கும்போதே சதாசார சாதுக்கள் முன்னிலையால் நன் கறிந்து "வம்புலாங் கூந்தன்மனைவியைத் துறந்து பிறர்பொரு டாரமென்றிவ்ர்றை, நம்பினு ரிறந்தா னமன்றமர் பற்றி யேற்றிவைத் தெரியெழுகின்ற,செம்பினு லியன்ற பாவையைப் பாவீ தழுவென மொழிவதற்கஞ்சி,நம்பனே வந்துன் திருவடி யடைந்தே னைமிசா ரணியத்து ளெந்தாய்'' என்று பிரார்த்தனு பூர்வகம் ஈசுவர சரணுர விந்தத்தில் மனம்பற்றும் சன்மார்க்கப் பிரவிர்த்தி வருதல் ஏகதேசமானதால், அப்பிர

சித்தமாம்; பிற்செய்கையோ வென்னெனின் ? நாரியர் வலையிற் சிக்கி மநந் தளர்ந்து முதுதுயர் விலங்கு மாகித் தமது புருஷார்த்தங்க ளியாவையுங் கையிழந்து "காரிகை தன்னை நீங்கிற் கருத்துறு சகத்து நீங்கும், பேரியற் சகத்து நீங்கிற் பிரிவில்பே ரின்ப முண்டாம்" என்றதற்கு வியதிரேக முகமாகச் சிற்றின்ப நோக்கிற் குரியாராய்த் தம் வாணாளை வீணாளாச் செலுத்தி முடிவில் மகா கோரரூபங் கொண்டெழும் அந்தகராற் பீடிக்கப்பட்டுப் பாசக்கயிற்றாற் கட்டுண்டு சின்னபின்னமாக அவர்கள் இழுத்துச் சென்று பயங்கரமான ரௌரவாதி நரகங்களில் வீழ்த்த வமிழ்ந்து வெகுகாலம் கர்மாநுசாரம் அவ்வவற்றில் வசித்து மிகத் துக்கிதராய், பின் பிறக்கிறதும், இறக்கிறது மாகிற சம்சார சாகரச் சுழலி லகப்பட்டு இவ்வாறு வருந்துதற் கேதுவாக முயல்கின்றவராவ ரநேகர்;

"அந்தோ வம்மின்? ஆன்றோர்-உலகத்தீரே உலகத்தீரே, நாக்கடிப் பாக வாய்ப்பறை யறைந்து, சாற்றக் கேண்மின் சாற்றக் கேண்மின், மனிதற்கு வயது நூறல்ல தில்லை, ஐம்ப திரவி லகலுந் துயிலினால், ஒட்டிய விளமையால் ஓரைந்து நீங்கும், ஆக்கை யிளமையில் ஐம்மூன்று நீங்கும்,எழுபது போகநீக் கிருப்பன முப்பதே,அவற்றுள், இன்புறு நாளுஞ் சிலவே யதான்று,துன்புறு நாளுஞ் சிலவே யாதலால், பெருக்கா றொத்தது செல்வம் பெருக்காற்,றிடிகரை யொத்த திளமை யிடிகரை, வாழ்மா மொத்தது வாழ்நா ளாதலால்,ஒன்றே செய்யவும் வேண்டு மொன்றும், நன்றே செய்யவும் வேண்டு நன்றும், இன்றே செய்யவும் வேண்டு மின்றும், இன்னே செய்யவும் வேண்டு மின்னும், நாளை நாளை யென்பீ ராகில், நமனுடை முறைநா ளாவது மறியீர்,நம்முடை முறைநா ளாவது மறியீர்,எப்போ தாயினுங் கூற்றுவன் வருவான், அப்போ தந்தக் கூற்றுவன் றன்னைப், போற்றவும்

போகான் பொருளொடும் போகான், சாற்றவும் போகான் றமரொடும் போகான், நல்லா ரென்னுன் நல்குர வறியான், தீயா ரென்னுன் செல்வரென் றுன்னுன், றரியா னொருகணந் தறுக ணாளன்.'' எனவும்,

''அம்புவி மாந்தர்க் கெல்லா மாயுளோ சிறித தற்குள்,வெம்பிணி யிளமை மூப்பு விழிதுயில் சோம்பு காதற், கம்பலே யிவற்றை நீக்கிக் கற்பதெங் ஙனங்கற் றூலுந், தம்புலஞ் சிறிது ஞான சாகரம் பெரிதென் றுன்னி,'' ''மதலே யாகிய நற்குணஞ் சார்ந்துநல் வாய்மை,சிதைவிலாவடி யாரினஞ் சேர்ந்திடா தவன்கண், ணுதலி னுனேயுஞ் சேர்ந்திடானென்பவெந் நூலும், முதலிலான்பெறு மூதியம் யாதுகொன் மொழியில்,'' ''இழிப்பினும் வெறுப்பினு மில்லி னுள்ளன, வழிப்பினு முடம்பினே யரிந்து கொல்லினும், பழிப்பறு சங்கம பத்தி செய்பவன், ஒழிப்பது பிறவியென் றுலக மோதுமே'' ''தானுறு முடன்மநந் தாமென் றுள்ளவை, மீனமில் குருசிவ சரங்கட் கீந்துதான்,யானென தென்குத லின்றி வைகுவோன்,மேனிகழ் சிவமொடு வேற லானரோ,'' ''குருசிவ சரங் கொளக் கொடுத்த மெய்மநம், பொருளிவை நமவெனப் புந்தி செய்து கொள், ஒருவனில் வழிமறுத் தொறுத்துக் கொள்வன, சரனனி நல்லன்மெய் தவறி லாமையால்,'' ''சங்கமந் தனக்கொரு சாதி யுன்னினு, னங்கையி னமர்தரு மாற்கு முன்னினுன், சங்கரனொடுசரந் தம்மில் வேறெனு, மங்கவ னறிவரு மளற்ற ழுந்துவான்''

''பூசனே செயாதகை புராந்த கன்புகழ்,பேசுத லிலாதவாய் பெற்று ழன்றிடு,நீசரா னவர்தமி னெடுவ னத்திடைக்,கூசுத லிலாதபுன் குரங்கு நன்றரோ,'' ''ஈசனே யிருத்துறு மிதயத்தோர்பொரு, ளாசையை யிருத்தி தலந்த ணளர்தாம்,வாசமுற் றிடுமொரு மனேயிற் புன்செயல்,நீசரை யிருத்துத லிகர்க்கு மென்பரால்,'' ''சினமுத லியமய றீர மாற்றுபு, வினேதபு வாய்மையா மெழுக்கை யன்பெனும், புனலொடு விரவியே

பூசினல்லது, மநமெனு மனையிடை வாதி லிங்கமே," "தூய்தா கியநெஞ் சுடையார்க்குத் தாமே சிவமாத் தோன்றுமால், தீதா கியநெஞ்சுடையார்க்குத் தெளிய வபேத மிகலின்றி, வேதா கமங்கள் விளம்பிடினும் விளங்கா தென்றும் வேறென்னும், வாதா லழிவ ரவர்மாயை மயக்க மயங்கு மதியினர்," "காலமுங் கருமமுங் கடந்த காரணன், பாலு றும் பரிசறப் பார்ம டந்தையர், கோலமும் பொருளையுங் குறித்து நச்சுநர், சீலமும் விரதமுந் தீய வென்பரால்" "வெங்கொலை களவு பொய்வெகுளி யாசையென், றிங்கிவை யொடுமரீஇ யிருக்கின் றோர் தமக்கங்கையி னெல்லிபோ லவிர்ச டைப்பிரான், செங்கையி லிருப்பினுஞ் சேயன் சேயனே." எனவும்,

"எறிகட னெடும்புவியி லேதுமில ரேனும், அறிவுடைய ரேயுடையரியாதும்மறி வில்லார், செறிவுடைய செல்வமொடு சீருடையரேனும், வறிதுடைய ரல்லதவர் மற்றுடைய ரன்றே" எனவும்,

இனி மனோசாதகம்; —"தாவி லாத மநமொடு சார்தரா, தோவு மாயி னுலகிற் புனலுமொண், பூவு நாடொறும் போக்குறு பூசனை, யாவி போகிய வாக நிகர்க்குமால்," "புறம்பு காண்குவன் புல்லிய னீசனை, யறிந்த ஞாநி யகமுறக் காண்பனால், எறும்பு காணுறி லின்கரும் பேகொளுஞ், செறிந்த வாடிலை தின்பன வென்பவே," "துயிலை யின்பெனச் சொல்லுத லிந்தியத், தியலு நெஞ்சமிலாமையி னலன்றே, பயிலு நெஞ்சம் பரந்து திரிதருஞ், செயலி லில்லைச் சிறிதுஞ் சுகமரோ," "நல்ல செய்து நரரை யுயர்த்தவு, மல்ல செய்தங் களற்றிடை யாழ்ப்பவும், வல்ல திந்த மநமல தையனே, யில்லை யென்ன வியம்பு மறையெலாம்," "மக்கண் மாநுட ரென்று மநத்தினன் மிக்க மேன்மை விளங்கின ரில்லெனிற், பொக்க மேவும் பொறிகளொ ரைந்தினல், ஒக்கு மாவினை யொத்துயர் வுற்றிடார்," "கெடு

க்க வல்லதுங் கெட்டவர் தங்களை, யெடுக்க வல்லது மிம்மந மென்றதை, யடக்க வல்லவ னைய பவக்கடல், கடக்க வல்லவ னுவன் சடிதரோ,'' ''ஆயின் மிக்கோ ரரிய செயலெலா, நேய மிக்க மநத்தை நிறுத்தல்காண்,'' ''ஓடும் பொன்னு முறவும் பகையுமோர், கேடுஞ் செல்வமுங் கீர்த்தியு நிந்தையும், வீடுங் கானமும் வேறற நோக்குதல், கூடுந் தன்மை கொளுமநம் நன்மநம்,'' ''காணுத லொழிக நல்லார்க் காணினங் கவர்பா னட்புப், பேணுத லொழிக பேணிற் பிரிவுற லொழிக வுற்றால், மாணுயி ருடம்பில் வாழும் வாழ்க்கைபோ யொழிக வென்று, ஆணிடு மொருதாய் நீத்த பார்ப்பென வுளங்கு லைந்தார்,
எனவும்,

''பாம்பழல் வாயினுற் பற்று மண்டுகந், தேம்பிடுந் துயருறுஞ் சீவன் றேயுநாள், ஓம்பிட வல்லரோ வுற்ற மற்றையார், போம்பொழு தருந்துணை புரிந்த புண்ணியம்,'' ''அத்தமும் வாழ்வு மகத்துமட் டேவிழி யம்பொழுக, மெத்திய மாதரும் வீதிமட் டேவிம்மி விம்மியிரு, கைத்தலை மேல்வைத் தழுமைந் தருஞ்சுடு காடுமட்டே, பற்றித் தொடரு மிருவினைப் புண்ணிய பாவமுமே,'' ''புன்னுனிமே னீர்போல் நிலையாமை யென்றெண்ணி, யின்னினியே செய்க வறவினை - யின்னினியே, நின்றா னிருந்தான் கிடந்தான் றன் கேளலறச், சென்றா னெனப்படுதலால்,'' ''உற்றா ரருளரோ வுயிர் கொண்டு போம்பொழுது, குற்றா லத்துறை கூத்தனல் லால்நமக், குற்றா ரருளரோ,'' ''விட்டுவிடப் போகுதுயிர் விட்டவுட னேயுடலைச், சுட்டுவிடப் போகின்றார் சுற்றத்தார்— பட்டதுபட், டென்னே ர முஞ்சிவனை யேத்துங்கள் போற்றுங்கள், சொன்னே னதுவே சுகம்'' எனவும் வரும், மற்றும் வருவனவற்றாற் காண்க.

இவ்வாறு, குரு லிங்க சங்கம விளக்க சாதகமான சுருதிப் பிரமா ணத்தாலும்,முன்னும் பின்னும் எப்பதார்த்த மின்றி மத்தியில் மாத்தி ரம் சொப்பன மனோராச்சியம் போலத் தோன்றிடுமோ,அப்பதார்த்தம் முக்காலத்து மின்மையதேயாம் என்னும் யுத்தியினாலும்,“நெருந லுள னொருவ னின்றில்லை யென்னும், பெருமை யுடைத்திவ் வுலகு” என் னும் நாயனார் திருவாக்கின்படி உலகப் பிரசித்த வநுபவத்தாலும் நன் கறிந்து அவத்தொழில் விடுத்துத் தவத்தொழிலான சன்மார்க்கத்தி னின்று குரு லிங்க சங்கமங்களைக் கூறு முறைமைப்படி வழிபட்டுத் துரிதமாய்ப் புருஷார்த்தப் பேறடைதல் மநுடஜன்ம மெடுத்தவர்க ளின் பெரிய கடமையாம்.

இனி, இப் பிறப் பிறப்பாகிற சம்சாரம்“மடிவறு பிறவி யென்னு மாத்திர ளொணக்கீ தென்னும், நெடியபல் பணைக ணீட்டிநிரயமாங் கா ய்கள் காய்க்கும்,முடிவறு துயராங் கார முளையாக விளையா நிற்கும்”எ ன்னும்படி பரவும் வகையையும்,அஃதெவ்வாறு நீங்குமோ வென்னும் ஐயப்பா டொழிக்கும் விவேக வைராக்கிய வகைகளையுங் காண்பிக்கு மாறு:—தநம், ஆயுள், அகங்காரம், மநம், ஆசை, சரீரம், பாலியம் யௌவநம், மாதர்,ஜரை,காலம் என்னும் இப்பதினொன்றும் அவிசார பூர்வகம் சம்சாரம் பரவற்குச் சகாயங்களாம்: அவற்றின் யதார்த்த சுருதி யநுசார விசாரமோ, அஃதத்தியந்த மொழிந்துபோவதாய்ச் சொப்பன துல்லிய மாக்குஞ் சாதகங்களாம்; அவற்றில், தநமூலத்தி னால் சம்சார சம்பந்தமான சர்வப் பிரயோஜநமுஞ் சித்தித்தலின்,மநம் தூலித்தற்கு முக்கியம் தநம் என்று கருதி முதலில் தநவிசாரஞ் செய் யப்படுகின்றது. “ஈன்ற மாதர் தநமுதலா மாபத்தோர்க் கெனச்சிந்தா விளஞ்சுழலுந் தானமாகும்” என்றது, உக்கிரமான ஆபத்தையுடைய குடும்பிகட்கு ஈன்ற மாதர் போலத் தநம் துக்க நிமித்தமே யன்றிச்

சுகநிமித்தமாகாமல் ஆர்ச்சன ரட்சண தரிசனாதி விடய சிந்தா சமூகஞ் சுற்றுதற்கு நிர்ப்பய நிவாச ஸ்தாநமாமாதலின், "செல்வ மெல்லாமாபத்துக்கிடமாம்" என்றபடி யறிக. பின்னும் அத்தநம், விதிவிலக்சென்னுங் கர்மங்களினால் பெருகி விஷவேகமுடைய சர்ப்பத்திற்கு க்ஷீரமும் விஷமேயாவது போல இராகாதி தோஷ முடைய செல்வானான அங்கனுக்கு க்ஷீரம்போன்றிதமான ஆப்த வாக்கியமும் உருசிபெறச் செய்வியாதென்பதனால் வரும் அநர்த்தமு மறிக. (1)

தநமிருக்கின் வெகு கால போக நிமித்தஞ் சிரஞ்சீவித்வம் அபேட்சிக்கப்படுதலின் அதன் பின் ஆயுள் தூஷண விசாரமாம்:—

மேகம் போன்று நசிக்கும் மோக மென்னுந் தேசத்தில் மின்போன்று க்ஷணத்தி னசிக்கும் ஆயுளிற் சந்தோஷிக்கலாகா தென்பது; என்னை? ஆன்மாவிற்கு இத்தேகத்தில் விபரீத ஞாநம் விளைதற்கு மோக மேதுவாதலின் என்க. பின்னும் ஆன்ம சொரூபத்தில் விசிராந்தி யற்ற மந முடைய தேக விராமனான மூடன் புருஷார்த்த சூநியமேனும் ஆயுளை இச்சிப்ப னென்பார், "சிறிதுமிலாப் பாருத சிந்தைத் தாகிப் பரப்புடைய சேட்டையதாய்ச் சூநியமாம்" என்றார்; எனவே, அந்த "வாணாளின் பயனை நாடிற் றுரப்பரிய துயராக்கும்" என்பது மறிக (2).

தநமும், ஆயுளும் உறின் நான் கர்த்தா, போக்தா என்று வெகுவித கருத்திருத்வ, போக்திருத்வாதி அபிமாநப் பிரவிர்த்தி வருதலின் அதன்பின்அகங்கார தூஷண விசாரமாம்:—விபரீத புத்தி யுடையோர்க்கு அபிமாநரூப வகங்கா வசத்தால் சௌந்தரியமான தேகம், சிரஜீவநம், சங்கற்ப விகற்பான்மகமான அந்தக்கரணம், நிச்சயான்மகமான புத்தி இவை யாவும் துக்க நிமித்தமேயாய் முடிவு பெறு மென்பது: பின்னும், "மநத்துயரு மாபத்தும் வளர்தொழிலு மகங்காரத்

தால் வருமித் தைப்போற், கனத்தபகை யிலது" என்றதால், அகம் கர்த்தா, அகம் போக்தா என்னும் அபிமான மூலத்தால் சம்சார சம்பந் தமான துக்கம் வருதலின், அகங்காரமே முக்கிய வைரியாய் அநர்த்த வேது வாதல்பற்றி அதனைப் பரம சத்துருவே யென நிச்சயித்தும் எப்படி எவர் அதை யநுசரித்துப் பிரவிர்த்தி மார்க்கத்தில் நிற்பரென் னுங் கருத்தையு மறிக (3).

தநம், ஆயுள், அகங்காரம் இம்மூன்றுஞ் சேர்வுழி விவித சங்கற்ப விகற்பான்மகமாக மநமுதித்தலின் அவற்றின் பின் மந தூஷண விசா ரமாம்:—இராகாதி தோஷ வேதுக்களால் பிரக்ஞா ஹீநமாய்க் கடுங் காற்றுற்ற மாமயிலின் பீலி போன்றுச் சாது புருஷர்கள் அநுஷ்டிக் குஞ் சற்கருமத்தினின்று நீங்கிச் சண்டாநிலத்தாற் றிரணந் தூரச் செல்லுதலால் மத்தியில் வீழ்தலாவது, சூநியாம்பரத்திற் சுழலுவதா வது அதற்குப் பிரயோஜந மன்றி மற்றொன்று மின்மை போல் மந தால் மநோரதமார்க்கத்திற் றூரஞ் சென்ற போதிலும் நிஷ்பிரயோ ஜந மென்ப தாயிற்று: இன்னும் உரோகநிவிர்த்தி நிவிர்த்தியி னிமித்தம் பய வேதுவாக வந்த பசாசு, பாலனை அவிசாரத்தால் அநேக தொழி லிற்சேர்த்து வருத்தஞ் செய்கின்றது, விசாரிக்கின் இன்மையாவது போல மநமுமாம்; அங்ஙனம் அவிசார சித்த மாயினும், அம்மநதால், கூ வத்திற் கிடக்குங் காட்டந் தான்நிஷ்கிரிய மாயினுங் குடில விரச்சுவால் பந்திக்கப்பட்டு மாறி மாறி மேல் வருதலும், கீழ்ப்போதலும் போல ஆன்மா நிஷ்கிரிய மாயினும், மாறி மாறி ஊர்த்துவாதோ கமந கதியை யடைவ னென்பதாம் (4).

பின் நிரந்தர போகேச்சாரூபமான ஆசா தூஷண விசாரமாம்:— "ஆதரித்த நற்குணங்க ளாகுவினுற் றந்திரிபோ லாசை யாலே, சேத மூறும்," "முதிர்பருவத் தளர்ச்சியான் முடியாத நடநகதி முயல்வா

ளாகி, மதிமகிழ்ச்சி யறநடிக்கு மாடுங்கூத் தியைப்போல வருத்து மாசை" என்று கூறியிருத்தலின், இவ்வாருன ஆசையே மீட்டு மீட்டும் பிரவிர்த்தி யேது வாதலின் விடேசிகா வியாதிக் கொப்பனவாம்: சிந்தாத் தியாகமே அதனது நிவிர்த்தி யேதுவாதலின், அவ்விடேசிகா பரிகார மந்திர துல்லியமாம் என்க. மற்றும், சிந்தாத் தியாக மின்றுழி, அவ்வாசையானது தாக்ஷண்ய கெம்பீர தைரிய சௌரியாதி குணகணங்களைச் சேதித்துமேரு வொத்த நரோத்தமராதி சகலரையும் இமைப்பிற் றுரும்பு செய்யும் என வறிக. (5)

பின் விசித்திரமான போக ஸ்தாநமாகிய சரீர தூஷண விசாரமாம்:—பயங்கரமும், அநர்த்தமு மாதலின் மசாந துல்லியமான தேகரூபக் கிரகத்தில் அக மமதாபிமாந முடைய அந்தக்கரண விசேஷமே அகங்காரன்: அவனே தேகரூப கிரகத்தில் வசிக்கும் யஜமாநன், களேபர நிமித்த சுக துக்க போகி, அவனுக்குப் பராதீநப் பிரவிர்த்தியுடையதாதலின், இந்திரியங்கள் பசுக்கள், பரவச முடையதாதலின் சித்தம் பரிசாரகன், பாதந்திர முடையதாதலின் ஆசை பாரியாம்; இவ்வித அந்நியனது கிரக சிந்தையால் இவை யாவும் தனது ஏகதேசத்தில் விளங்கப் பாவாபாவ சாக்ஷித்வங் கொண்டுநிற்கும் ஆத்மரூபமான நமக்கு நற்பயன் யாதுளது எனக் கூறியிருத்தலின், அத்தேகமாத்திரத்தில் இஷ்டம் வைப்பது புருஷார்த்தப் பேறின் றெனக் கொள்க. "மின்னிடத்திற் சரற்கால மேகத்திற் கந்தர்வ வியன்மூதூரில், நன்னிலைமை யெண்ணுவோ னெவனவனே யுடனிலைமை நாடுகிற்போன்" என்பதையும் யூகிக்கற்பாலது. (6)

அதன்பின் அத னவஸ்தா விசேஷரூபமான பாலியம், யௌவநம் இவ்விரண்டின் விசாரமாம்:—இளமையில் அற்ப வுபகாரத்தாற் சந்தோஷிப்பதும், அற்ப அபகாரத்தாற் கிலேசிப்பதும், பத்துத் திங்கள்

தாயார் கர்ப்பக் குகை மலச்சேற்றில் அமிழ்ந்து கிடந்து கருப்பாசய ப்பை யுறுத்தல், ஜலம் பூரித்தல், உதராக்நியால் வேவுதல், பின் பிர சூத வாயு முறித்துத் தள்ளல், யோநித்துவாரத்தில் நெருக்குண்ணல் என்னும் இவ்வைம்பெருந் துன்பங்கள் தங்கப் பிறத்தலால், "திங்க ளேழி லறிவு சிறந்தெழ,வங்கை கூப்பி யமலனை யேத்தும்" என்னும் புருஷார்த்தப் பிரக்ஞை சூநியமாய் மலபங்காதிக்கண் கிரீடித்தலுமாம்; ஆதலால்,நாய்போல் துச்சசுபாவமும், அறியாமையும் குடிகொண்ட இப் பாலியம் எப்படிச் சுகநிமித்தமாகும். "இப்பருவத் தநர்த்தமகன் றிட ரில்வீ ழெவ்வநத்தி லேறி நெஞ்சா, மொப்பரிய பொந்திலுறை காம னெனும் பேயறைய வுள்ளம் வாடுஞ், செப்பரிய விரிவுடைத்தாய்த் தெ ளிந்துபரி சுத்தமாய்ச் சிறந்த தேனு, மைப்புயனு ணதிநீர்போன் மதி கலங்கு மெவ்வநத்தின் மயங்கு நாளில்," "எத்திறத்தோ ரெவ்வநமா மிடையூற்றைக் கடந்தெளிதி னேற வல்லோ, ரத்திறத்தோ ரேபுரு டரவர்களே தொழற்குரியோ ரவரே சான்றோர்". என்பது யௌவந சுபாவம்; கூறிப்போந்த பாலியம்,யௌவநம் இவ்விரண்டும் பயன்படா வகை காண்க. (7-8)

அவற்றின் பின் யௌவநத்தில் முக்கிய போகத்துக்குரிய சர்வ விடய சமட்டிரூபமான மாதர் தூஷண விசாரமாம்:— "சந்துறு நர ம்போ டென்பு தசைசெறி பாவை யொப்பா, ரெந்திரத் தியங்கு மங்க பஞ்சரத் தினிமை யென்னே" என்றபடி மேலும் நன்காராயின் தோல் முதலியன வசுத்தமாதலினானும், அவற்றிற்கு வேறாய் அம்மாதர்க ளது கண் இன்மையினானும், ஸ்தநமோ தேக பதனாநந்தரம் நாய்களாற் புசிக்கப்பட்ட மாமிசக் கிரந்தியாய்விடுதலினானும், நாரதுபாவ கன்மங் களே நாரி ரூபமாகச் சொலித்து அதிதாபப்படுத்தலினானும், தாதுக்க ளின் கூட்டத்தால் மாதர் மேனி குளிர்ந்ததாய், மோகிக்கவரினும்

அவர்கள் சித்தத்தின் நிர்த்தயையால் பசையிலா விறகு போன்றதாமாதலினும், மாமடஞ் செறிந்த நெஞ்சின் மனிதராம்புட்பிடிக்கக் காமனும் வேடன் வீசும் வலையும், சம்சாரமென்னுஞ் சொற்ப சரசில் மச்சம் போன்று மூழ்கிக் கிடக்கும் மச்சரூப மநிதர்க்குத் துர்வாசனை யென்னுங் கயிற்றுத் தூண்டிலின் மாம்ச கண்டமும், மற்றோர் சற்காரியங்களிலும் பிரவிர்த்திக்க வொண்ணாத முதுதுயர் விலங்கும் போன்றவராதலினும் அம்மாதர்களின் மேலெழும் காதலையும் காதலினாலுறுஞ் சிற்றின்பத்தையும் உபேட்சிக்கற்பாலது. அங்ஙனம் உபேட்சிக்கில், "பாரியை யுடையோ னியாவ னவனுக்கே பற்றும் போகம், நாரியை யில்லாதார்க்குப் போகத்தி னலமெங் குண்டாம், காரிகை தன்னை நீங்கிற் கருத்துறு சகத்து நீங்கும், பேரியற் சகத்து நீங்கிற் பிரிவில் பேரின்ப முண்டாம்" என்னும் அங்வய வியதிரேக முகசோபானப்படி வந்துறும் புருஷார்த்தத்தைக் கவனித்தறிக. (9)

அதன்பின் போகத்துக்குரிய தன்றுயினும் போகேச்சை மிகுந்த ஜரை தூஷண விசாரமாம்:—"ஈறறு சைசவத்தை யெளவநம் விழுங்கு மித்தை, மஃறுறு சரைவி ழுங்கு மயக்கநோய் வருத்த மிக்க, பேறுறு சரைகைக் கொண்டாற் பேரறி வகன்றிட் டோடும்" என்னும்படி ஒன்றற் கொன்று வைரியும், குரூரமு முடையதாயினும், ஒரு பருவமும் போக விச்சையில் முடிவு பெறுததாய்ச் சரையில் பிரக்ஞையும் அதிதூரத்தகலு மென்பதை யூகித்தறிக. "குற்றமு மிளைப்பு மேவிக் குறிதன்றி யுளத்தைச் சுட்டுத், துற்றவா பத்துக் கெல்லாந் தோழியா மாசை தன்னு, மூற்றதோர் பரலோ கத்துக் குறுதியே தென்று மூப்பிற், பற்றுறு பரிகா ரந்தீர் பயமிகப் படருமன்றே" என்றபடி ஜராவஸ்தாநர்த்தத்தைச் சிந்தித்துப் பிரக்ஞா லாபவழி முயல்க. (10)

அதன்பின் சர்வ சிருட்டி, ஸ்திதி, சம்மார நிமித்தமான கால தூஷண விசாரமாம்:—"மகரநீர் கடல்குடிக்கும் வடமுகக் கனலேபோலச், சகலமும் விழுங்குங் காலன் சகத்திடை விழுங்கா தில்லைப், புகலரும் பெரியோ ரேனும் பொழுதொரு கணமுந் தாழான், அகிலமும் விழுங்கித் தானே யகிலமாய் நிற்கு மன்றே" விழுங்காதில்லை என்றதனுல், பிரமாண்டங்க ளநந்தமாதலின் அளவற்ற சகச் சாலங்களுள; அவையனைத்தும் அநித்திய யெனச் சொன்னதாயிற்று. தாழான் கற்பமுடிவின் பின் க்ஷணஜீவநமுஞ் சகியான், அகிலம்-விசுவம்—அகிலமாய்-விசுவரூபமாயிருப்பன்—காலன் ஈசுவரசக்திரூப மாதலின் ஈசுவரனோடு அபேத மாரோபித்து இங்ஙனங் கூறியதாம். "பின்னுறத்தாழ்ந் தலைந்திலங்கு முருகன்வா கனமயிலின் பீலி சூடும், முன்னயனப் பெருங்குழிகள் பயஞ்செய்யு மதிச்சடைதாழ் முடிகள் பூணுங், கன்னியுமை குழற்கவரி மலைநிகர்பை ரவராடுங் கவந்த மேவும், பன்னயனக் குழிவிளங்கு மிந்திரன்றன் மேனியெனும் பலியோ டேந்தும்" மகத்துவ முடைய காலாதியரும் இத்தன்மையராகின், இச்சம்சாரத்தில் சாமானியர்க்கோ யாது கதியிருக்கின்ற தென்பது கருத்து. அந்தரங்கமாக விசுவசிக்கப்பட்ட இந்திரியங்க ளனைத்துமோ விஷயத்தில் விழுமேதுவாதலின் சத்துருக்களாம். மநமோ பாரமார்த்திகமான ஆன்ம சொரூபத்தை அபாமார்த்தமான தேகாதிரூப தாதாத்மியஞ் செய்து தேகாதி விலக்ஷணமான பிரத்தியக்ஷான்ம தத்வ சொரூபத்தை அப்பிரத்தியக்ஷமாக நிச்சயித்துத் தனக்குத் தானே சத்துருவாய்த் தன்னுற் றன்னை நசிப்பித்தலின் கொடியதாய் அகங்காரத்தையே அநுசந்திக்கின்றது அன்றி, ஆன்ம தத்துவத்தை யநுசந்தியாது: திருசிய பதார்த்தங்க ளியாவுமோ திருஷ்ட நஷ்ட சுபாவமாம்: ஆயினும், சம்சாரசாகர பாரமோ தெரியவாராது. புத்தியோ ஆகுலத்தால் நிரர்த்தமா

கவே மயங்கும். இராக நோய் வளரும். இருண் மயல் தீர்பவ ரரியர், யௌவநம் புருஷார்த சாதன பலமுடைத்தேனும் அதன் நிமித்தம் விதித்த யத்தநமு மின்றிக் கழிகின்றது. சர்வ புருஷார்த்த சாதநமான சற்சந சங்கமோ துர்லபம். மற்றையர்கட்பு உயர்மார்க்க மன்ருதலின் சத்துருபான்ம தத்துவோதய மாகாது. சித்தப்பிரசாத வேதுக்களான மைத்திரியாதிகளு மின்று. என்னை? மநம் மச்சர பாவத்தால் பிறரது சுகத்திற் பாவிக்கவேண்டு மைத்திரியைப் பாவியாது மூர்ச்சை யடைந்தது போலாம். மநம் அசூயையால், பிறரது புண்ய கருமத்திற் சந்தோஷிக்கு முதிதை யென்னு மனோ விருத்தி தூரத்திற் செல்லும். மனோதுவேஷத்தால் பிறரது துக்கத்தில் துக்கிக்கும் நிருபாதிகமான கருணையுதியாது. பரநிந்தையாற் பாவஞ் சம்பவித்தலின் பிறரது பாவ கன்மத்தில் உபேட்சை பிறவாது நிந்தித்தற்குச் சந்தோஷிக்குந் துற்சநத்வந் தூரத்திருப்பினும் வந்து பொருந்தும். ஆனதால், சித்தந் தெளியாது; ஆகவே, தைரியங் கெட்டு அதைரியமாம், அதனுல், சர்வஜநங்களும் மாறி மாறி ஊர்த்துவாதோகதி யடைபவராவர், அவர்கட்குச் சற்சங்க அருமையானும், சிறியவர் சங்க எளிமையானும் மோக்ஷ வாஞ்சை ஓர்போதும் உதியா தென்பதாம். "சித்தர் பொன்றுவர் திருவனுஞ் சிதைகுவன் சிவனயன் றிருமார்பன், றத்து வந்தனி லொன்றுவர் காலமுந் தருமமு முடிவாகும், மத்த வானம்போ மயக்கமே தருவதாய் வாக்கொடு செவிக்கெட்டாச், சுத்த மாம்பொரு ளொன்றினு விகழ்வுறத் தொல்லுல கிழிவாகும்" ஆகலின், காலாதிகளும் ஈசுவர பரதந்திரமாதலின், மகாப் பிரளயத்தில் ஓர்பொழுது நிவர்த்தியாமென்பது கருத்து; இங்ஙனம் அநித்தியமே யாவு மாயின் மநுட தேகத்தின்கண் அடைய வேண்டிய புருஷார்த்தத்தை விடுத்து மற்றியாதின்பொருட்டு எதை விசுவசித்து எதை யடையற்பாலதாம். (11)

"பகையெலாந் துரந்து தள்ளிப் பாக்கியம் பலவந் தெய்த, விகல றத் துய்க்கு நாளி லெவ்விடத் திருந்தோ வந்து, மிகையறு காலன் கொல்லும் விவிதமா மிடத்தி னின்று, வகுந்தின்வந் தொன்று வார் போன் மனைவிசேய் முதலா மாயை," "சுற்றவ ரரியர் சாலக் கரும முந் துயரி னாலே, யுற்றகு நியமா மெல்லா முயிர்தரித் துழல்வ தெங்ஙன், அற்றவத் தினமு மேலாஞ் செல்வமு மந்தச் செய்கை, முற்று மூய்ந் துளத்தே தோன்று மியாமுமம் முறையிற் செல்வோம்", "தெரிவுறு வயதில் வந்த புந்தியாற் சித்தந் தன்னைப், பரிகரி யாது விட்டாற் பரிகரிப் பதுமற் றெந்நாள், விரிவிடம் விடம தன்று விடயமே விடமாந் துன்பம், புரிவிடங் கொல்வ தோர்மெய் புலன்மறு பிறப்புங் கொல்லும்" எனல் அந்தம் தநமாதியாகச் சம்சார திசையில் மனோ பாவச மாகாமைக்கு உபாயமாக விவேக வைராக்கிய பூர்வகம் இரகுநந்தனர் வாசிட்ட வாரம்பத்தில் "மைம் மலமா மோகத்தை மாய்த்திடும் புதுமைத் தான" தூஷணசகித ஆராய்ச்சி பதினொரு வகைத்தாய்ப் பிரித்து விநயத்துடன் அருளிச் செய்திருக்கின்றதைச் சங்கிரகித்து எழுதப்பட்டது காண்க. இங்ஙனம் தோஷத்தை நாடி விசாரித்துக் குருலிங்க சங்கம வழிபாட்டில் நிற்பதன்றி, "பாடுபட்டுத் தேடிப் பணத்தைப் புதைத்து வைத்துக், கேடுகெட்ட மானிடரே கேளுங்கள்——கூடுவிட்டு, ஆவிதான் போயினபின் யாரே யனுபவிப்பார், பாவிகாளந்தப் பணம்" எனவும் (தாயுமானவர்) இமையளவு போதையொரு கற்பகா லம்பண்ணு மிவ்வுலக மெவ்வு லகமோ வென்றெண்ணம் வருவிக்கும் அந்தச்சிற்றின்பமோ வென்னின்மக மேருவாக்கிச், சுமையெடுமினென் றுதான் சும்மாடுமோயெமைச் சுமையாளு மாக்கி நாளுந்துர்ப் புத்தி பண்ணியுள நற்புத்தி யாவையுஞ் சூறையிட் டிந்திர சால, மமையவொரு கூத்துஞ் சமைந்தாடு மநமாயை யம்மம்ம வெல்லணவெப்பு,

ளிதோ'' எனவும், ''மநமாயை மாயை மாயை மயக்க, மநமாயை தான் மாய மற்றொன்று மில்லை, பிணைமாய வேண்டாம் பிதற்றவும் வேண்டாம், தனையாய்த் திருப்பது தத்துவந் தானே'' எனவும் ''மையாடு கண்ணியு மைந்தரும் வாழ்வும் மனையுஞ் செந்தீ, யையாநின் மாயை யுருவெளித் தோற்ற மகிலத் துள்ளே, மெய்யா யிருந்தது நாட்செல நாட்செல வெட்ட வெறும் *பொய்யாய்ப் பழங்கதை யாய்க்கன வாய் மெல்லப் போனதுவே'' எனவும், ''கடத்தைமண் ணெனலுடைந்த போதோ இந்தக்கருமச், சடத்தைப் பொய் யெனவிறந்த போதோ சொலத்தரும்'' ''சகம் பொய் யெனத் தம்பட்ட மடியே'' எனவும், ''பொருந்துசக மத்தனையும் பொய்பொய் யென்று புகன்றபடி, பொய் யெல்லா மொன்ருய்ப் பொருத்திவைத்த பொய்யுடலை, மெய்யென் ருல் மெய்யாய் விடுமோ' எனவும், இப்பொய்யுடலையே தானென்று நம்பி உலகத்தவர் ''துஞ்சல் பிறத்தல் தோயம் விஞ்சிய - பெருமிதம் பெருமை பேரவா வாழும் - வருமிட ரின்ப மறிதிரை விரவு - குற்றம் வெண்ணுரை சுற்றந் திராஅன் - மம்மர் நோய்கண் மறுக்கும் புலவு - கொம்மை முலையார் கொடுஞ்சுழி வெம்மை - கோபம் வடவை தாப மமிர்தம் - போக நஞ்சு நாகங் காமம் - அழுக்கு முதலை புழுக்கண் மைந்தர் — மீனம் புலன்கண் மான மகரம் - உணர்வில் கல்வி யொலியா மேழ்பவப் - புணரி தன்னுட் பிணியு டற்கலத் - தரந்தைப் பொருள்பெறும் பெரும்பொய்ச் சரக்கு - நிரம்ப வேற்றித் திரம்பெறு கூம்பு - யானென நாட்டி யெனதெனும் பாச - மான விட்டத்து வலியுறக்

---

* கானல் ஜலம் போலத்தோன்றுஞ் சொருப முள்ளதும், பொய் யென்று நிச்சயிக்கப் படுவதும் மித்தை என்னும் சப்தத்தின் இலக்கணார்த்தம்.

கட்டி - நேய மென்னும் பாயது விரித்து - மேலை வல்வினை மாலுமி யாகி - யீரறு நூறு யிரவே ழியோனிப் - பேரது பெற்ற வூர்தொ றுஞ்சென் - றேற்றிய சரக்கி னிரட்டியு முற்றியு - முறுதி யின்றி யோடுங் காலை - யிறுதி யெய்த வெண்ண மொன்றறக் - கருத்தது கலங்க மிருத்தியு வென்னும் - வரைபட் டுடைந்துறு வங்க நிரய - வளற்றின் வீழா முன்ன மொளித்தகும் - அறிவு மரக்கல னமை த்துத் துறவின் - நாமக் கூம்பு நாட்டி யேம - வருளாங் கயிற் றிற் புரள்பறக் கட்டிப் - பத்தி யென்னும் பாய்பூ ரித்து - முத்தி யூரிற் றம்மை யுய்த்தருள் - சொரூப னென்னு மொருமீ காமன் - அருந்தவர்க் கரசின் பாதந் - திருந்தவைக் கிலர்தஞ் சென்னியின் மிசையே'' எனவும், 'ஊரு ளெழுந்த வுருகெழுசெந் தீக்கு, நீருட் குளித்து முயலாகு - நீருட், குளிப்பினுங் காமஞ் சுடுமேகுன் றேறி, யொளிப்பினுங் காமஞ் சுடும்'', ''ஊரு ரெனும்வனத்தி னுள் வேற்கண் மாதரெனுங், கூரூர் விடமுட் குழாமுண்டு - சீரூர், விரத்தி வைராகி விவேகத் தொடுஞ்சோ, டரத்தணி யாதேக லெவனோ'' என வும், ''வகுத்தான் வகுத்த வகையல்லாற் கோடி, தொகுத்தார்க்குந் து ய்த்த லரிது'' ''பரியினு மாகாவாம் பாலல்ல வுய்த்துச், சொரியினும் போகாதம'' எனவும்; ''ஆழ வமுக்கி முகக்கினு மாழ்கடனீர், நாழிமுக வாது நானாழி—தோழி, நிதியுங் கணவனு நேர்படினுந் தந்தம், விதி யின் பயனே பயன்'' எனவும், ''எழுதியவா றுமென் றிரமட நெஞ் சே, கருதியவா றுமோ கருமங் - கருதிப்போய்க், கற்பகத்தைச் சேர் ந்தோர்க்குக் காஞ்சிரங்கா யீந்ததேன், முற்பவத்திற் செய்த வினை'' எனவும், ஆகக் கருதும் சம்சார விரசத்துடன், ''ஓர்த்துள்ள முள்ள துணரின் ஒருதலையாப், பேர்த்துள்ள வேண்டா பிறப்பு'' எனவும், 'ஆலால முண்டு கண்டங், கறுத்தானைக் கருதாதே கரும்பிருக்கவிரு ம்புகடித் தெய்த்தவாறே'' எனவும்,

"பொய்யஞ்சி வாய்மைகள் பேசிப் புகழ்புரிந்தார்க் கருள் செய்யு மையஞ்சி னப்புறத்தானு மாரூ ரமர்ந்த வம்மானே" எனவும், "மந மெனுந் தோணி பற்றி மதியெனுங் கோலை யூன்றிச், சினமெனுஞ் சரக்கை யேற்றிச் செறிகட லோடும் போது, மதனெனும் பாறை தாக்கி மறியும்போ தறிய வொண்ணு, துணையுனு முணர்வை நல்கா யொற்றியூ ருடைய கோவே" எனவும், "தந்தையார் தாயரா ருடன் பிறந்தார் தாரமார் புத்திரரார் தாந்தாமாரே, வந்தவா றெங்ஙனே போமாறேதோ மாயமா மிதற்கேது மகிழவேண்டா, சிந்தையீ ருமக் கொன்று சொல்லக் கேண்மின் றிகழரவும் வளர்மதியுந் திளைக்குஞ் சென்னி, யெந்தையார் திருநாம நமச்சிவாய வென்றெழுவார்க் கிரு விசும்பி லிருக்கலாமே" எனவும், "பொய்ம்மாயப் பெருங்கடலிற் புலம்பாநின்ற புண்ணியங்காள் தீவினைகாள் திருவேநீங்க, ளிம்மா யப் பெருங்கடலை யரித்துத்தின்பீர்க் கில்லையே கிடந்ததுதான் யானேல் வானோர், தம்மானைத் தலைமகனைத் தண்ணலாரூர்த் தடங் கடலைத் தொடர்ந்தோரை யடங்கச்செய்யு, மெம்மான்ற னடித்தொ டர்வா னுளதாகின்றே னிடையிலேன் கெடுவீர்கா ளிடறேன் மின்னே" எனவும், "இன்றுநன் றுநாளைநன் றென்றுநின்ற விச்சை யாற், பொன்றுகின்ற வாழ்க்கையைப் போகவிட்டுப் போதுமின் கோடிகாவு சேர்மினே" எனவும், "புலனைந்தும் பொறிகலங்கி நெறி மயங்கி யறிவழிந்திட் டைமே லுந்தி, யலமந்த போதாவி யஞ்சேலென் றருள்செய்வா னமருங் கோயில்" எனவும், "காதலாகிக் கசிந்துகண் ணீர்மல்கி, யோது வார்தமை நன்னெறிக் குய்ப்பதும், வேத நான்கினு மெய்ப்பொரு ளாவதும், நாத நாம நமச்சி வாயவே" எனவும், "கூறும் நாவே முதலாகக் கூறுங் கரண மெல்லாநீ, தேறும் வகைநீ திகைப்புநீ தீமைநன்மை முழுதுநீ, வேறோர் பரிசிங் கொன்றில்லை மெய்ம்மை

யுன்னை விரித்துரைக்கிற், றேறும் வகையென் சிவலோகா திகைத் தாற் றேற்ற வேண்டாவோ,'' எனவும், "தீயவை தீய பயத்தலாற் றீயவை, தீயினு மஞ்சப் படும்,'' எனவும் வரும், மற்றும் வருவன வற்றால், ஆசைவன் பாசத் திரளினாற் கட்டுண் டரும்பிணி யீக்கடிக் கணுக்கி, யேசுறு போகக் கதைகளான் மொத்துண் டிச்சைமுட் கோலினா லுலைந்து, காசுறு கருமச் சேற்றிலே யழுந்திக் கடுஞ்ச கக் காட்டிலே சுழன்று, வீசுமா மோகத் தளிர்நிழலில் சிற்சிறிது துயின்று உடன் விழித்து, மேவுறு துன்பப் பெருஞ்சுமை சுமந்து மீட்சிபோக் கிவையுடற் புண்ணுப், ஈவறு பிறவிக் குழியில் வீழ் எருது ரூப தேகியோடு பிரியாது இதசத்துருவாய் இந்நாள் வரைநின்று இங் ஙன மநர்த்த பரம்பரை விளைத்த மநதைச் சாமபேத தாந வுபாயங்க ளான நயவஞ்சக விவேக வழித்தாய்ச் சத்துவமாக ஈசுவரப் பிரா ர்த்தனையில் உடன்படுத்தித் தீய வாசனைகளைக் கழித்துத் தனக் கதி ஷ்டாநமான பரசிவனிடத்தில் அநந்யப் பிரேமாஸ்பத பரவசாநந்த பரர்களாயிருக்கிற சங்கமர்களிடத்தில் தற்பரமாக்கும் விவேகி முறை மையினை யூகித்துணர்க.

## இனிப் * போதுப் படவிரித்தல்.

"நீருக்குமிழியதுபோல நிலையில்லா வாக்கைக்கு நேசித்திருந்தே,
யாருக்கு நன்மை செய்தோநா மறிவே யகண்டமு மாவறி யாதே.''

---

* குருலிங்கங்களைத் தம் திருமேனியோ டொன்றுபட ஈசுவர பக்தி, பாச வைராக்கியம், ஜீவ காருண்யம், பிரம ஞாநம் என்னும் இந் நான்குமே ஒருருப்புனைந் தெழுந்தருளிய சங்கமர்களின் சாத்திய பாவ மான ஈசுவர பக்திமுதலிய நான்கினையும் சாதகர்களான அதிகாரிகள் அநுஷ்டித்துச் சாத்தியமாக்குதற் குரியன.

"ஏழைத்த னந்தனி னூலே யென்னில்வே றில்லையென் றேநெடு நாளாய்ப், பாழுக்கி றைத்தோமு நாமே பண்டை யறிவை யறியாதிருந்தே", "ஊனிலே யொன்பது வாசல்விட்டங், கொருவனைக் காவலிருத்திவைத்தவ், வூனிலொ ருவனும் போனவாறே, யொன்பது வாசலுநாய்புகுங் காணே." "நெஞ்சிலே கட்டை யடுக்கவிட்டு நீட்டி நிமிர்ந்து கிடப்பதன்முன், னஞ்சையு முள்ளே யடக்கிக்கொண்டே, யாநந்தமாயறிவாகவல்லீரே," "அம்மையு மப்பனுங் கண்டிருக்க, வந்தக னுருயிர் கொள்வதன்முன்ன, மும்மையு முனையும் வேறதாக, வுள்ள பொழுதே யுணரவல்லீரே." "மக்களுங் சுத்த மனைவிசுத்த, மாய வுடலெரி கொள்வதன் முன்ன, நிட்களமான வறிவுதன்னை, நும்வடி வாக நினையவல்லீரே." "இருவினைப் பாசங் கழுத்தினிலிட், டேற விறங்க விழுப்பதன் முன்னங், குருவினைச் சென்று பணிவீராகிற், கோதிலறிவோ டேகூடலாமே." "போது புலர்ந்து புகுந்தனையும், புத்தியையெங்கேனும் போகவிட்டுத், தூதுவர் வந்து புகுந்தவாறே, துடைகள் பறக்கத் தொடங்கினரே." "குப்பையா மிந்தக் குரம்பையைத் தாமென்று கோலங்கள் செய்திடாதே, யிப்பையை நீத்தறி வானவரன்றோ விருபிறப் பாளராவார்" "பருக்கு மெலியுமிப் பாழுடற்காகப் பரந்து திரிந்திடாதே, இருக்கின் முடிமே லிருப்பவரன்றோ விருபிறப் பாளராவார்" "இமைத்து விழிப்பதற் கில்லைவாணு ளிதிலுள்ள துன்பங்களெண்ணில்கோடி, யமைத்துனைப் பார்த்தல்ல லறுநெஞ்சே யாண்டவனென்றென் றாற்றவாரீர்." "பொன்ற முடம்பு பொருந்து மின்பம் புன்னுனை நீராகும் புன்மை நெஞ்சே, யென்றபி னெல்லாம் வீழவிட்டே யிருந்தபடியேயிருக்கவாரீர்." "ஒன்றெனிலாயிர கோடி துன்பமோய்வின்றி யேவரு மோரினெஞ்சே, யொன்று மற்றுள்ளநா மாயிருந்தே யுளநாள் கழிக்க வொருப்படீரே." "தேறி யுலக மனைத்தினையுஞ் சிற்பர மாகநாஞ் செப்பினலு, மாறி யிருக்கை யரிதுகாணு மவி

ரோத மாகை யரிதுகாணும்." "ஆறு சமயப் பொருளுங்கற்றே யங்குள்ள தர்க்கங்கள் சாற்றினுலு, மாறி யிருக்கை யரிதுகாணு மதுவிதுவாகை யரிதுகாணும்," "இந்த வுடலம் விடுவதன்முன் விரைந் திப்பவந் தீராவிடின், வந்து வந்துபல ஞகிப்பி றந்தெய்த்து மாண்டே விடுவர்கிடீர்." "ஊனே வடிவென்றல் விட்டுத்தன் னுண்மையை யுள்ளவா காணுவிடின், மானு மழுவுமாய் வந்தாலும் வன்பவ மாளாதிருக்குங்கிடீர்" "இப்பிறப் பில்லே தமையுணர்ந் தெல்லாப் பிறப்பு மொழியாவிடில், தப்பி யுடல்கொண்டு கொண்டு சதங்கையுங் காலுமாய் நிற்பர்கிடீர்." "மேலா லறிவோ மெனுதே விரைந்தும்மை மெய் கண்டு கொள்ளாவிடிற், கோலா கலஞ்செய்து வந்தும்மை யாசாபை சாசங்குமைக்குங்கிடீர்" "நாடிக் குரவன் கழறலே வைத்துண ராதூனே நானெனன்றிடிற், கூடிப் பெருஞ்சுற்ற மத்தின் றலேயிலே கொள்ளியை வைக்குங்கிடீர்."

"பொய்க்கனவும் பேய்த்தேரும் போலுமுடல் போமளவுஞ், சிக்கெனவே நாதன் றிருவடியை—நெக்குருகிப், பூண்டுவிடா தேகிடந்து போற்றியிடு நெஞ்சேநீ, மீண்டுபிற வாதே விட." "ஆர்வமொடு செற்றத்தை யாரிடத்துங் கொள்ளாதே, சார்முள தெவ்விடத்துந் தான்கொண்டு—தீரவுணர், நல்லோர்தஞ் சொல்லே நழுவாமை நீகொண்டு, நில்லா யிதுவே நெறி." "இங்கேதன் னுனுயிரை யேதமறக் கண்டவிடத், தங்கேயெ லாமமைய லாயிருக்க—வெங்கேனுங், காடு மலேயுங் கடந்துடம்புக் காய்வருந்தி, யோடுவதெ னெஞ்சே யுரை." "அமைதற்குபாய மறிந்திடநீ வேண்டிற், கமையுற்ற ஞானக் கரும்பைத்—தமையுற்ற, வாரியர்பாற் பெற்றங் கவரடிக்கே யேவலினே, யோரியல்பாற் செய்நெஞ்சே யுற்று." "நீடுந் தலேகீழ்கான் மேலாகி நின்ருலுங், கூடும்படியொழியக் கூடாதா—லோடி, வருந்தாம லுள்ளபடி வந்திடக்கண்

டாறி, யிருந்தாலோ நெஞ்சே யினிது.'' "நல்ல வறுசுவைதா னுக்கினுனி மாத்திரமே, யெல்லை யிருவிரலே யல்லதில்லை—மெல்ல, விருவிரலைத் தான்கடக்க மாட்டாதே நெஞ்சே, பொருகடலைத் தான்கடப்பாய் போய்'' "நீயா யமையாய் நினைந்தோடிக் கிட்டாமை, யேயாவமைந்தா யிடர்நெஞ்சே, சாயோ, கடையானுர் காய்பசிக்கே கால்குலைவர் கற்ருே, ரடையாரோ வாங்கமைவின் பால்.'' "அமையாதே பெற்றதனு லாங்காங்கு நன்றென், றிமையா தெழுந்தோடு கின்ருய்—சமையாய்ச்,சிறுமைக்கு வித்ததுவாந் தேருய் மநனே, மறுமைக்கு மஃதே மறைப்பு'' "முக்கனியும் பாற்சோறு முன்பிருக்க நாயருந்திக், கக்கியசோற் றுக்குக் கருதுவார்—எக்கலைக்கு, மெல்லாப் பொருட்கு மிரும்பொருளியா மென்னுமல், வல்லார்க் கடிமைபுகு வார்.'' "செம்மையதயார் செகத்தோற் றரவறியார், தம்மையறி யார்வினையுந் தாழ்வறியார், தம்மிலே, யந்தராய் வீணே யவமதிப்பார் நல்லோரை, யெந்தவழி போவா ரிவர்.'' "ஐங்கணையும் பூவா மறுகா லளிநாணு, மென். கரும்பாம் வில்லனங்கன் வீரனும் - வன்காத, லேற்றுவனு மெல்லாம் பொய் யிப்படியே பாழுலகத், தோற்றமெலா மெய்தானு சொல்.'' "தன்னைத்தான் றேடாச் சதிகார ரேன்பிறந்தா, ரந்தத்தால் வந்தவுட லார்தாமார் - முன்னம், விடுத்தவுட லெத்தனையோ மீண்டுமீண்டின்பா, லெடுத்தவுட னூரு யிரம்.'' "தன்னை யறியாமற் ருனே தனைத்தேட, லென்ன புதுமையிதை யென்சொல்வேன் - மன்னுலகில், தண்ணீரி னின் றுகொண்டு தாகந் தணியார்போ, லெண்ணீர்மற் றேதுரைப்போம் யாம்.'' "எச்சாத் திரம்வேண்டு மெச்சா தனைவேண்டும், பிச்சாட்டல் லோகெடுவாய் பேதையர்க்குப் - புச்சாண்டி, காட்டுவார் போலவந்த கற்பனையை மெய்யெனப்பா, ராட்டுவார் தம்மைக்காணுர்.'' "எவ்வா றெவரிருந்தெ னெவ்வா றெவர்போயென், னெவ்வாக்

கூட் டிற்றனிமை யொத்ததே - யெவ்விதமு, நீங்குவார் நீங்கா நிலையி லனு பூதிகண்டு, தூங்குவார்க் கன்றே சுகம்." (வள்ளலார்.) "சைவசித் தாந்த மெல்லாந் தானவ னாகி நிற்றல், மையறு வேத சித்த மற்றது நானே யென்னல், உய்வகைக் கிரண்டு மொன்றென் றேதியென் னு யிர்க்கி லாபஞ், செய்தசற் குரவ னீயே திருப்புலி வனத்து ளானே." (ஷை-சிந்தனை வெண்பா.) "அதுவேநீ யாமென் றருமறைகள் சொல் லும், எதிர்சிவனே நீயாநு யென்னு - முதுசைவம், வேறேவே றன் றேசொல் வேதியனே விண்விசும்பும், வேறேவே றன்றே விளம்பு" (ஷை நிராமய வந்தாதி) "உற்றுணரி னீயே யுயிர்பிரம மென்பதுவும், மற்ற சிவனாய் வகுப்பதுவு - முற்றும், இறந்தவிடத் திரண்டு மேகமே யென்றான், சிறந்தசீ காழிவரு தேவே" இனி, (குருப்பிரசாத முன்னி ட்ட சிந்தனம்) "ஆகியு மழிந்தும் போகு முற்பவத், துன்பந் துடைத் திங் கின்பங் கொடுக்கத், திருவுருப் புனைந்த குரவன் சொரூபன், பொ ற்பதஞ் சூடிச் சிற்பத வீடு, கையிற் கனியெனக் காணு ரையோ, தர் க்க நெறியிற் சார்வர் தர்க்கஞ், சொலவல தில்லை யாகுஞ் சொலவு, மநனல தில்லை யாகு மநனுங், கனவஞ் ஞாநக் காரிய மாகு, மஞ்ஞாந த்தா லாகிய விருணெறி, மெய்ஞ்ஞா நத்தை விளக்கு மாறென் இலதுள தேக மநேக மென்ப, தலதிலை தர்க்க மறைவ திலதெனி, விலது முத்தி யெய்துத லின்ப, மலடி மைந்த னெய்துத னிலையா, யுள்ளது முன்னே யுள்ள தாதலி, னுள்ள று முத்தி யென்செய வுள்ள, தன்னின் மாசு தானொழித் திடுத,லென்னி லேறிய மாசோ முன்னே, யுள்ள மாசோ வொழிப்ப தென்னின், விள்ளா முன்னே யுள்ள தாகி, னிடையோர் காலத் தென்னின் முத்தி, யடைவார் திறத்தி னடையும் பின்னு, மொழிவறு பரம்பொரு ளொன்றே யாகி, னிழவு பேற தில்லை விழைய, வேறே யொருவ னுண்டெனில் வேறு, கூறின் முத்தியிற்

கூடா ஞாது, மிங்ஙன மான பின்ன, ரெங்ஙனஞ் சேர்வ ரிசுற்சம யிக ளே." "விளம்ப வேண்டு மெந்தை களங்கப், பிறவி செய்த பெற்றி யறவ, நீசெய் தனையெனி னின்பே ரருளுக், காசெய் தவதே யன்றி யுந் தேச, னவிகா ரதையு மழியு மென் றுஞ், செய்ய மாயை யுண்டெ னிற் சிதையு, மையநின் பெருமை யன்றியு மெய்யே, யுள்ள மாயை யொழியா பொய்யே, யில்லது தோன்று தாகு மென் றுஞ், செய்வினை, செய் மெனிற் செய்வினைசெய்வோ னொழிய வில்லை செய்வோ, னி ன்னில் வேறு மென்னின்மற்றவ,னுன்னரும் வீட்டி னென்று ஞகு, மொன்றி னென் றுகெட்டொன்ற வேண்டும், பொன் றுத லன்றியின் றே யென் றும்,பின்னஞகியி ருக் கினின் னபரிச், சின்னதை சிதையு மென் றும் பன் னும்,விழியின் மாந்தர்க்கு மொழிவகை முதனு, னுடம் பெடுத் துற்ற வா றுமுள்ள, நடுங்கிய பரிசுமென் னடுக்கங் கெடும்படி, யுருநா மில்லா வொளியா நீயே,சொரூபா நந்தனென் றிருநா மத்து,மா நுட வேடஞ் சாத்தி வந்தெ, யூ னுட லாவியு னுடைமை யானவை, முன்னர்க்கொண்டுன் முளரியங் கழலென்,சென்னியிற் சேர்த்து நின் னைத் தந்த,பின்னர் நின்னை யல்லான் முன்னை,யாதுங் காணு திருந்த நாத, வெனதறு பவமே யிரண்டுங் கனையிரு,ளிரவி முன்ன ரெஃகிய பரிசெனின், வரவு போக்குளன் மற்ற வனிருண், மீண்டும் வருதலு முண்டா,மாண்டகை யென் றுந் தூண்டாச் சுடரே.""மதிகே டென் னே மனிதர் விதியான்,முக்குணந் தன்னி னற்குணந் தன்னல்,வானி னேறி மாத ராருடன், வேனில் வேளின் விழாக்கொண் டாடியுந் தாழ்ந்தவர்க் கண்டு சாலவும் வியந்தும், வாழ்ந்தவர்க் கண்டு மனன்வ ழுக் குற்றுங், காயத் துற்ற நோயது தணிக்க, வைத்தியர்த் தேடியும் வலியா லடர்த், தெயித்தியர்க் கஞ்சியுஞ் செற்ற மார்வங், கோப மே முதல் குற்றம் பெருகிப், பாவ மெய்திப் படுகா குற்று, மத்திம குணத்

தான் மானுட வடிவாய், நித்த முத்தியி னன்றிச் சித்தந், தந்தைதாய் தாரஞ் சுற்ற மற்று, மைந்தர் மாதுலர் மருகர் மாற்றலர், கள்ளர் மன்னர் கடிய மிருகம், புள்ளு நரகம் பொல்லாப் புழுக்கள், வாதஞ் சீத மயக்குறு பித்த, மாதி நோய்க ளாவஞ் செற்ற, மதமாற் சரிய மானந் தம்பங், கதனுர் கோபங் காம மாசை, பைம்புல னைருநான் கந்தக் கரணங், கம்ப முறக்கங் களிப்புக் கவர்பு, கல்வி செல்வ நல்குர வாதி, யெல்லையில் துயரா லல்ல லெய்தித், தீக்கிரை யாகித் தேகங் கூற்றின், வாய்க்கிரை யாகி வாணுள் போக்கி, யறிவ தெல்லா மழித்துச் செறிவினை, யொக்கி னுயிரிற் குறையின் மக்களிற், றேவரில் விலங்கிற் செனித்துப் பாவந், தீக்குணந் தன்னுற் போக்கிட வொண்ணு. விலங்குச்சாதியிற் பிறந்து மலங்க, வொன்றை யொன்று கொன்ற றின்ன, றுஞ்ச லஞ்சன்மை துணித்த லெஞ்சா, நெறியில் பிறப்பி னிரய நன்றே, பாவப் பெருமைத் தாபர மாகிக், காற்று மழையுங் கதிரவன் வெயிலு, மேற்று மெல்லையில் கால மாற்றும், படியுணர் வில்லாச் சடவடிவாகி, முக்குண வினையின் மூழ்கி நிற்குண, வெந்தை பொன்னம் பலவ னிணையடி, சிந்தை செய்யார் செய்வாரு வினையே.'

## மேலும் வாதியர்களான பண்டிதர்கள் நோக்கும் அடையும் பலனும் கூறுதல்.

''தாவுரி யவர்வே றில்லை யிச்சகத், தானமைத் தனனே யென்பார் கரிய, செங்க ணெடுமால் செய்தன னென்பார், பங்கயத் தவனே படைத்தன னென்பார், இந்திரன் முதலா விமையவ ராலே, வந்ததிச் சகத்தென மதிப்பார் சிந்தை, யாயி னிலதா மல்ல துண்டா, மாயையிச் சகத்து வந்த தென்பார், முக்குண வடிவா மூலப் பகுதி, யிக்கட லுலக மீன்ற தென்பார், ஒலியே தந்ததிவ் வுலக மென்பார், மலியும் வினை

யான் வந்த தென்பார், அணுவிவ் வுலகை யாக்கிய தென்பார், கணிகர் புத்தியின் கற்பனை யென்பார், சூனியத்துலகு தோன்றிய தென்பார், ஆன்றவ ரொருவரா லு மன்று, பூதந் தன்னின் புணர்ச்சியா லென்பர். ஏது மியல்ப தில்லை யென்பார், இப்பரி சளவி லாத வாதிகள், சொற் பொருளறிந்துமெய்ப் பொருளறி யாது, கற்ற வளவிற் றர்க்கஞ் சொல்லிக், கூவற் பூட்டைக் குண்டிகை போல,ஓவற் றுறப்பவத் துழல்பவ ராவர், ஓமெனும் பதத்தி னுட்பொரு ளென்று, தூமறை பரவும் பொன் னம்பல தயாநிதி,மையற் பிறவி வன்பகை யறுக்குஞ், செய்ய சேவகன் சிதம்பர தேசிகன், மனக்கணக் கிடாமல் வந்திப் பவர்க் குத், தனைக் கணத் தருள்முத்து ராமலிங் கேசன்,ஞானந் தன்னிற் றோன்றி, மோனந் தன்னின் முடியமுற் றும்மே."

ஈசுவரபக்தி இன்றியமையாதாதலின் எத்தன்மையரும் அதனைச் சர்வ விதத்தும் சம்பாதித்தற்குரிய நியாய முகம் முன்தேரியக்காட்டி வியதிரேக பலமுங்கூறல்.

"தர்க்கே சாப்தே பெகுபரிசயே வே'தவேதாங்கயோர்வா மீமாம்ஸாயாம் ஶ்ருதிஸ்மிருதிஸகலேச்சாகமே வைத்யசாஸ்த்ரே, கிம்வா லாபே பெகுவிதசதுர்சஷ்டிகலாவித்யாஸ~, ஸர்வம் வ்யர்த்தம் மரண ஸமயே ஸாம்ப ஏகஸ்ஸஹாய:," "தாராபுத்ரௌ நராணும் பரிஜந ஸஹிதௌ பந்துவர்க்கப்ரியோவா மாதாப்ராதபிதாச்சாஸகல ஸகிஜநை:, வ்யர்த்தம் ஐஶ்வரியம் போகபோக்யம் ஸர்வம் வ்யர்த்தம் மரணசமயே ஸாம்ப ஏகஸ்ஸகாயம், "ஜாத: பிரம்ம குலாக்ரஜோத்தந பதே யத்கும்பகர்ணு[illegible]ஜோ புத்ரஸ்சக்ரதசோஸ்வயம் தெசசிரோ பூர்ணுபுஜாவிமும்சதி, [illegible]த்ய: காமசரோரத்தாச்ச விஜயிமே மத்யே ஸமுத்ரம் க்ரகம் யாவத்[illegible]தந்நிஷ்ப்பலிதம் ததைவ விதிநா தெய்வே

பெலே துர்பெலே" இம்மூன்று ஸ்லோகங்களின் திரண்டபொருள்:- தர்க்கம், வியாகரணம், வேதாந்தம், மீமாம்சையாதி சாஸ்திரங்கள், சுருதி ஸ்மிருதி புராண இதிகாசாதி சோடச வித்தைகளுங் கற்றுத் தேர்ச்சியுடைத்தாயிருப்பினும் மரண சமயம் இவைகள் உதவி புரியா வியர்த்தமாயொழியும்; பின்னரோ, சாம்பசிவ சரணாரவிந்த மொன்றுமே சகாயமாம்:—தார புத்திர மாதா பிதாதி சகித பந்துவர்க்கத்தவர்கள், சிநேகிதர்கள், மற்றைய பரிஜநங்கள், ரத கஜ துரக பதாதி சைந்யங்கள் தம்மைச்சூழ ஏகசக்கிராதி பதியாய்ச் செங்கோலோச்சி வாழினும் அவ்வொன்றும் மரண சமயம் உதவிபுரியா:—அச்சமயம் உதவிபுரிவது சாம்பசிவ சரணாரவிந்த மொன்றுமேயாம் :—இராவணன் பிரமகுலத்துதித்தவன், குபேரன்சகோதரன், தனக்கு அநுஜனானகும்பகர்ணன் அதிபலாவ்ஷ்டியன் புத்திரனும் பலாவ்ஷ்டியன், தனக்கோசிரசு பத்து, புஜபலபராக்கிரமசாலி, மன்மத ஜயன், புவ்ஷ்ப விமானமுடையவன், சமுத்திர மத்தியில் கிரக முடையவன், திரிலோகவிஜயி, சிவபூஜா துரந்தரன், நாலு வேதம், ஆறுசாஸ்திரம், அஷ்டாதச புராணம், இதிகாசாதி அறுபத்துநாலு கலைக்ஞானங்களும் வந்தவன்; இவை யாவும் நிரர்த்தமாக அந்தத்தில் அகம்பாவசகித இராக குணவசப்பட்டுத் தைவீகபெலந் துர்ப்பலமாகவே சகாய மின்றிப்போயின. ஆனதால், மரண சமயம் சேஷபூத சாம்பசிவ சரணாரவிந்தம் மறவாது மநதிலிருக்கத்தக்க நிரந்தரமுயற்சி ஜீவிதகாலத்திற் செய்துநிற்பதே புருஷத்தன்மைக்குரிமை: அவர்களே புருஷசிம்மம், அல்லாதார் புருஷாதம பசுவாவர் என்பதாம்.

[ஈசுவரசிந்தனையின்றிய பண்டிதத்திறமையினர்கதியாதெனில்]

"சப்தப்ரம்மணி நிஷ்ணாதோ ந நிஷ்ணயாத் பரே யதி சிரமஸ்தஸ்ய சிரமப்பலே ஹ்யதேநு மிவ ரக்ஷத:, தாம் கற்ற சாஸ்தி

ரங்களில் சாரபூதமாயுள்ள சர்வாந்தரியாமித்வ சேஷபூத பரசிவ பக்தி யின்றிய பண்டிதர்கள் வரட்டுப் பசுவினைக் காத்தவனுக் கொப்பாவர் என்பது இதன் கருத்து ; ஆதலால் ஈசுவர பக்தி யாவர்க்கும் இன்றி யமையாதென்பதை வற்புறுத்தப்பட்டது. [அபிமானம், கௌரவம், பிரதிஷ்டை இம்மூன்றும் மகாநிக்ருஷ்டம் எனல்] "அபிமானம் சுரா பானம் கௌரவம் மஹாரௌரவம் பிரதிஷ்டா சூகரிவிஷ்டா, [இவ்வி டுதிபலன்] த்ரயம் த்யக்த்வா சுகீப்பவேத்" [அங்ஙனமே, வைராக்கியத் தினவதிபலம்] போசனுந்தத்தும் புக்கிடா மயாநத்தி னீற்றும், நேச மாதினை நினைந்தவா புணர்ந்ததன் பின்னும், எசிடாமதி யெம்மதி யஃதென்று மிருக்கின், ஈசனேயென விலகுவ னன்னர னிய ம்பில்" என்க.

[அதிதுச்சமான இத்தேகத்தில் அபிமானித்து நிற்கும் ஜீவன் அசுதந்திரனுயினும் இவ்வளவு சுதந்தர புருடத்வவல்லபத்தினும் வல் லப மூண்டென்பதைப் பலசகிதங்காட்டல்:—] "வல்லமை யதனில் வல்லமை சிவனை மறந்திடா திருக்கை வல்லமையாம் மாசறத் தரு மந் தேடுதற் குபாய மநமழுக் கற்றவர்க் கீய்தல், இல்லற மதனி லெவபர்பசித் தெய்திடினும் மிரக்கமா யந்ந மொன் றீய்த லெழுபிறப் பாதியைக் கடப்பதற் குபாய மியானெனு மிடும்பையை மாற்றல், தொல்லுலக ளநந்தந் தொடர வந்தெய்தினுந் தொந்தமென் றூடிடுந் துணிவுந் துதிப்பது மிகழ்வு மிரண்டும்வந் தாலுஞ் சொல்லள வெனச் சம மாக்கல், எல்லையாம் பெரிய கல்விகற் றூலு மிடைவிடா மநத்தி டையீசனை யிருத்தலீ தெல்லா மொருவனுக் கெய்திடி லிறைவ னுகு மென் றியம்பிடும் வேதம்" என்பதால், இதுகாறும் வகுத்துக்கூறிவ ந்த ஈசுவரபக்தியாதியைத் தொகுத்துக் கூறினமையுமறிக.

[இனிச் சம்சார தெசையில் அகோராத்திரி புருஷார்த்த தாதாவான சங்கம வழிபாட்டில் மநம் பற்றிநிற்றற்கு அதி ஜாக்கிரதை வேண்டும்என வேதுக்களைக் குறிப்பித்து வற்புறுத்தல்.]

"ஆசாயாம் * பெத்ததே லோகே-கர்மணா பெகுசிந்தயெத் ।
ஆயுக்ஷீணம் நஜாநாதி-தஸ்மாத் ஜாக்ருத ஜாக்ருதஃ" ॥ 1 ॥

"மாதா நாஸ்தி பிதா நாஸ்தி-நாஸ்தி பந்து ஸகோதர:
அர்த்தம் நாஸ்தி க்ருஹம் நாஸ்தி-தஸ்மாத் ஜாக்ருத ஜாக்ருதஃ" ॥

"ஜந்மதுஃகம் ஜராதுஃகம்-ஜாயாதுஃகம் புநஃபுநஃ ।
ஸம்ஸார ஸாகரந் துஃகம் -தஸ்மாத் ஜாக்ருத ஜாக்ருதஃ" ॥3॥

"காமஃக்ரோதஸ்ச லோபஸ்ச-தேகே திஷ்டந்தி தஸ்கர: ।
ஞாநரத்நாபஹாரேண-தஸ்மாத் ஜாக்ருத ஜாக்ருதஃ." ॥ 4 ॥

இவ்வாறு விவேகிகள் சம்சாரதெசையில் யாவும் அநித்யத்வாதி நிலைமையோடு கூடியுள்ளன வென்பதை விவேகித்து நன்கறிந்து அதிஜாக்கிரதைப்பட்டுச் சிவகாயம், சிவ காரணங்களே கொண்டு தம் செயல் சிவச்செயலாக யாவரும் வியக்கச் சிறக்கும் எந்த உயர்ந்தவர் கூட்டம் அறக் குறைவை நிறைவாக்குமோ ஆபத்தைச் சம்பத்தாக்குமோ? அசுபந்தன்னைச் சுபமாக்குமோ? அன்றியும், அச்சங்கரூபக் கங்கைச் சிதநீராடிநர்க்குச் செந்தீ வேள்வி யிறக்கரிய தவந் தாநந் தீர்த்தம் வேண்டாவோ? இடர்பந்த மறுத்தெவர்க்கு மினியோராகிப் பிறப்பெனும் வேலைப் புணையா முணர்வுசான்ற அப்பெரியோரை யெவ்வகையும் பேணல்வேண்டும்; இஃதன்றி எவர்க்கும் ஏனைய எவ்வுபா

* வர்த்ததே எனவும் பாடம்.

யங்களாலும் சம்சார சாகரபாரத்திற் சென்றிளைப்பாறிச் சாசுவத சுகரூபமாகச் சேஷித்தற்குச் கூடாவனவாம் என்பது வேதாகம புராணேதிகாசாதிகளின் முதிர்ந்த துணிபு.

## குருலிங்க * சங்கம விளக்கம்.

முற்றிற்று.

சுபமஸ்து.



---

* ஜங்கமம் என்பதில்—ஜம் என்பதினுல் ஸத்ரூபம், நாதரூபம், குருரூபம், அபேத்யம், பிரம்மா, ஈஸ்வன், ருக், என்றும், க—என்பதினுல் சித்ரூபம், பிந்துரூபம், லிங்கரூபம், அகோசரம், விஷ்ணு, சதாசிவன், எஜுர் என்றும், ம—என்பதினுல் ஆநந்தரூபம், கலாரூபம், ஜங்கமரூபம், மகத்தரம், ருத்திரன், பரசிவன், ஸாமம் என்றும் பொருள்படும்; இவ்விபரம் சித்தாந்த சிகாமணி முதலிய நூலிற்காண்க.

உ

ஸ்ரீ-சற்குருவே நம:

# * அதிஷ்டானுதி பஞ்சகாரக விவேகம்.

வேதமே பொதுநூ லெனவிரி யுலகில்
விளங்கவவ் வந்தத்தை விளக்கும்,
நாதனே ஆமென் றியாவரு மொருங்கே
நவில்வதை நடுநிலை நிறுத்தும்,
போதமே யுருவாய்ப் புவனியில் வந்த
பொன்னம் பலக்குருவினைப் போற்றிப்,
பாதமே கண்டு பரவச மடைவார்
பாசமதகலுதல் பண்பே. (1)

பண்ணுதல் வேதப் பாகுபாட் டனைத்தும்
பகுத்தறி வோடுடன் பகரும்,
எண்ணுதற் கரிய வெங்குரு வாகி
யிசைந்தபொன் னம்பலமணியே,
ஒண்ணுதலுமையா ளோர்புடை நிற்க
வுவப்புடன் மன்றினு ளாடுங்,
கண்ணுதற் பெம்மான் கண்மணி யென்றன்
களமெலிந் தியவருள் குணையே. (2)

---

* குருலிங்க சங்கம சிரத்தாபத்தி வழிபாட்டின் பின் புருஷார்த்த சித்திக்குரியவை.

உலகெலா முய்தற் கொருகுரு வாகி
யோங்குபொன் னம்பல மணியை,
அலகிலா நலத்தோ டூர்த்ததா யடைந்த
வற்புதக் காட்சியை யறிவான்,
நலமிலாக் கொடிய நாயனு மடிமை
நணுகிடாக் காரண நவிலிற்,
றலைதடு மாறும் வறுமையூழ் வினையே
தடுத்ததென் றறைகுத லழகே. (3)

[விவேகாரம்பம்.]

"அத்துவிதம் வாசாம கோசர மனோதீத மசல மூலந்
தத்துவமப் பிரமேயஞ் சர்வசமஞ் சச்சிதா நந்தஞ் சாந்தஞ்
சுத்தமவி யக்தமவி காரமனு பவந்துரியஞ் சுயம்பிரகாசம்
நித்தியநிர்க் குணமனந்த நிரதிசயம் பிரமமென நின்ற தொன்றே."

[நிற்பக்

"போந்துவிகா ரஞ்சிறிதும் பொருந்தாது தன்னியல்பிற் பொருந்தி
காந்தமசை யாதிருந்து மக்காந்தத் தெதிருசி கம்பித்தாற் போல்
வாய்ந்தவதன் சந்நிதியின் மாயைவிகா ரம்புரிந்து மணிச்சூன் முற்றி
யேய்ந்தபெயர் மானதனென் றெடுத்தோத வொருமகவை யீன்றுண்
[மன்னே."

என்றதற்றொடர்புக்கியைய "பரம மாமறிவின் முன்னே புறப்படும் பொய்யா முள்ளம் புவனவிகற் பங்களெனும் பொய்யைக்காட்டும்" என்றபடிக் காரகம் மனதினின்றமை யூகிக்க;

[இங்ஙனம் காரக விவேகத்தைத் தொகுத்தமுறை வகுக்குமுறைமை வருமாறு:—]

அநாதி அநந்தமான சுத்தப்பிரமத்தைக் கிரகாசிரித விருள்போல ஆசிரயித்து விஷயம் பண்ணும் அநாதி ஸாந்தமான சத்தியுண்டு; அச்சத்தியானது சராசராத்மகமான சர்வ ஜகத்தையும்விரித்தொடுக்கும் அளவற்ற சாமர்த்திய முடையது. பகிர்முக மாகும்போது சக்திமானிடத்தில் பின்னே, மூலப்பிரகிருதி,அவித்தை எனவும் அந்தர்முக மாகும்போது அபின்னே, வித்தை, பரை எனவும் இரண்டு பாகுபாடான கற்பனு நாமங்கள் தரித்துஅது வியவகார துல்லிய பலமாய் நிற்கின்றது: அவ்விரண்டனுள், சுத்தியில் இரஜதம்போன்ற பிந்நரூப மூலப் பிரகிருதியானது வெண்மை, செம்மை கருமை நூற்கள்ஒன்றுபட முறுக்கிய கயிறுபோலச் சத்துவாதி குணரூபங்களாகப் பரிணமியாதபோது குணசாமியாவஸ்தை பெற்றுள்ளது. அம்முக்குணரூபப் பிரகிருதியினின்றும் சத்துவாதி குணங்கள் அங்காங்கி பாவமாகவும், விஷமத்தன்மையாகவும் பரிணம மடைகின்றன. (க) இரஜோ தமோகுணங்களை யமிழ்த்திச் சுத்த சத்துவப்பிரதாநமாய்ப் பரிணமிக்கின்ற மாயையில் சேதனம்பிரதிபலிப்பதை ஈசுவரன் எனப்படும்; இவ்வீசுர சப்தத்துக்குப்பிரம சேதனரூப அதிஷ்டானம், மாயாரூப ஆசிரயம், சேதநப்பிரதிபிம்பரூப ஆபாசம் இம்மூன்றையுங் கூட்டிப் * பொருள்கொள்க.

(2) இராஜ தமங்களா லமிழ்த்தப்பட்ட மலிந சத்துவப் பிரதாநஅவித்தையில்சேதநம் பிரதிபலிப்பதைச் சீவன் எனப்படும்; இந்தச்சீவ சப்தத்துக்குக் கூடஸ்த சேதநரூப அதிஷ்டாநம், அவித்தை, ஆபாசம் என்னும் இம்மூன்றுங்கூட்டிப் பொருள்கொள்க

---

* இது வேதாந்தடிண்டிமி. எம்மதஸ்தர்களாலும் அசைக்கப்படாதது.

(3) சேதநப் பிரதிபிம்பந் தோன்றுஞ் சுபாவ மில்லாத தமோகுணப் பிரதாநப் பிரகிருதி ஆவரணம், விட்சேபம் என இரண்டு சக்தியுடையன.

அவற்றில், (க) ஆவரணம் "மூன்றமாம் பிரமத் துக்கும் புறத்துள விகாரங் கட்கும், ஆன்றகூடஸ்த னுக்கு மகத்துள விகாரங்கட்குந், தோன்றிய பேதஞ் சற்றுந் தோன்றுமன் மறைத்து," "தானிகர் தனக்கா மீசன் றனையுந்தங் களைத்தாங் கண்ட, ஞானிக டமையு மன்றி நாஸ்திக பாதி யென்னு, மூனிடை யுயிர்க ளுள்ளத் துணர்விழி குருடாம் வண்ண மூடும்" யானுளன் என்னும் சாமான்யாம் சத்தை மறைப்பதின்றிச் சேதந வாநந்தாதியான தனது விசேஷரூபத்தை மறைத்துக் கொழுத்த வாவரண முத்திகூடாமற் கெடுத்த கேடேயாம்.

(2) விட்சேபம் என்னும் "தோற்றமாஞ் சக்தி தானுந் துன்ப மாம் பவமானுலு, மாற்றலான் முத்தி சேர்வார்க் கனுகூல மாகும்." மகாவாக்கிய சிரவணத்தால் "நான் பிரம மாகிறேன்" என்னும் அந்தக்கரண விருத்திரூப தத்துவ ஞானேதய மாகுஞ்சமயம் நான் கர்த்தா போக்தா வென்னும் விட்சேபத் தோற்றப் பிரபஞ்ச சகித அஞ்ஞாநம் நிவிர்த்தியாம்; அந்த நிவிர்த்திஞாதத்வ வுபலட்சித வதிஷ்டாந ரூபமாம்; ஏனெனின்;— உபலட்சணமானது தனது பாவ அபாவ (வர்த்தமானபவிஷியத்) இரண்டுகாலத்திலும் தனது சம்பந்தியை அந்நியத்தினின்றும் வேறுபிரித் தறிவிப்பதாம். ஆதலால், எப்படித் தேவதத்தனது கிரகத்தின் உபலட்சணமாகக் காகம் இருப்பதும், இல்லாததுமாக "இதுதேவதத்தனது கிரகம்" என்னும் வியவகார முண்டாகிறதோ அப்படிச் சீவன்முத்தி விதேகமுத்தித்தசை யிரண்டிலும் ஞாதத்வத்தின் இருப்பும், இன்மையும் ஆக விட்சேபகாரிய சகித அஞ்ஞாந நிவிர்த்திரூப அதிஷ்டாநம் ஞாதத்வவுபலட்சிதமாம் என்னும் வியவகார

முண்டாகிறது.மற்றும், கற்பித நிவிர்த்தி அதிஷ்டானத்தினும் வேறும் என்னும் பட்சத்தில் ஆக்கிரக முளதாவ தென்னினும் அநிர்வசநீயத்தி னிவிர்த்தி அநிர்வசநீயரூபமாம். பஞ்சமபிரகாரரூபமாக வின்று. நிவி ர்த்தி என்பது துவம்சம்; அந்தத் துவம்சம் நியாய மதத்திலோ அநந்த வபாவ ரூபமாம்: ஆயினும்,சித்தாந்தத்தில் க்ஷணிகபாவ விகார ரூபமாம்.

ஏனெனின்:—யாஸ்கமுனிவர் ஜந்மாதி ஷட்பாவ (அநிர்வசநீய) விகாரம் என்றனர். அவற்றில், துவம்ச சப்தத்துக்குப்பரியாயம்நாசம் க்ஷணிகரூபமாகக் கணித்திருக்கிறது. ஆனதால், அந்தத் துவம்சம் க்ஷ ணிகபாவரூபமாம். அதுஞானத்தின் உத்தரகாலம் ஏக க்ஷணமிருப்பது. பின்னர், அந்த நிவிர்த்திக் கத்தியந்தாபாவ முண்டாகிறது. அந்த வத் தியந்தாபாவம் பிரமரூபமானதால், துவைதத்தின் சங்கையின்று. மற் றும், கற்பிதத்தி னிவர்த்தி ஞாந ஜந்நியமானதால், ஸாதியும், பிரம ரூபமானதால் அநந்தமுமாம். ஆகையால், சித்தாந்தத்தில் மோட்சம் ஸாதியும், அநந்தமு மெனப்படும். இந்த ரீதியால் சொரூபத்தால் ஸ்திதி ரூபமோட்சம் விட்சேப சத்தி நிவிர்த்தியாம்.

அவ்விட்சேப சத்தி உபகிதசேதநத்தினின்றும் "உவப்புறு மீச னேக்க மாத்திரத்தால்" சப்த ஸ்பரிச ரூப ரச கந்தம்என்னும் பஞ்ச தன்மாத்திரைகள்முறையேபிறந்தன. இவைகள் முன்னம் தாமாத்தி ரமாய்ச் சூட்சுமமாய் முக்குணசகிதமா யுள்ளன. இந்தச்சூட்சும பூதங் களின் சத்துவாம்ச சமஷ்டிவியஷ்டிஉபகித சேதனத்தினின்றும் அந் தக்கரண விருத்தி பேதமானஉள்ளம், மநம், புத்தி, சித்தம், அகங்கா ரம் என்னும் ஐந்தும், சுரோத்திரம், துவக்கு, சட்சு, சிங்குவை, கிராணம் என்னும் ஞாநேந்திரியம் ஐந்தும், இராஜதாம்ச சமஷ்டி வியஷ்டி உப கிதசேதநத்தினின்றும்வியானன், பிராணன், அபானன், சமானன்,

உதானன் எனும்வாயு வைந்தும், வாக்கு, பாணி, பாதம், பாயுரு, உபஸ்தம் எனும் கருமேந்திரியம் ஐந்தும்ஆகச் சூட்சும சரீரதத்துவம் 20ம் உண்டாயின. "ஏக ஏந பூதமே பாந்சபாந்ச பூதமிலாயிகே பஞ்சீகரணகஹே" என்றபடி மிஞ்சின தாமதகுண சூட்சுமபூதவுபகித *சேதனத்தினின்றும் பஞ்சீகரண ஸ்தூலபூதமான ஆகாசம், வாய, அக்கினி, ஜலம், பிருதிவிஐந்தும், இந்தத்தூலபூதவுபகி தசேதநத்தினின்றும் சராசராத்மக தூல சரீரங்களான சர்மம், உதிரம், மாம்சம், சனுயு, அத்தி, மச்சைஎனும் ஆறுதத்துவங்களுமுண்டாயின. பூதங்கள், மாதா பிதாக்களுடைய வீரியத்துவாராவாகவும், அஞ்ஞானமே பூதத்வாராவாகவும் ஆறுதத்துவதேகபரிணுமமாவது முறையே சாதாரணம், முக்கியம் எனப்படும். இவ்வாறு சித்தித்த-௩௬-தத்துவங்களும் லயசிந்தனுரூப வியவகார திருஷ்டியை யனுசரித்தமுறைமையாம்.

பரமார்த்த திருஷ்டி இதுவாம்—"ஆற்றும தத்துவஞ்சகல சத்திமா ணுமவற்றினட னத்தாலே, தோற்றுகின்ற பந்தம்வீ டெல்லாஞ் செய்திடும்"

"சடபாவந் தனையொழுங்காற் பாவிக்க நினைவுநில சாரும்பின்னை
யிடனேடு காலமுதற் சத்திகளின் மிளிர்ச்சிசூழ்ந் தெய்தப்பட்டு
மடமேவு சீவனும் புந்தியா மகங்கரமா மனமாமிந்த [பற்றும்"
நடமாடு மனத்தன்மை யையடைந்துபிறப் பிறப்பெல்லா நயந்து
திடஞான சத்திதொழிற் சத்திதொழிற் செய்கிற்போன் செய்யாதோனு
மிடமான சத்தியிவை முதற்பரம சத்திகளுக் கெல்லேயில்லை

---

*எங்குமிடையின்றி நிற்றல்பற்றி ஆம்; இதுவும் சைவசித்தாந்தியால் மறுக்கற்பாற்றன்று.

மடமான மிளிர்சத்தி சனனமர ணங்கடரும் வைய மெங்குந்
தடமான மீட்சியெனுஞ் சத்தியாற் பிறப்பிறப்புத் தவிருமன்றே"

"தீவினையெல் லாமறுத்து மங்கலமெல் லாமுதவுந் தேவபூசை
யாவதெனக் கேட்டலுமே யருள்செய்வான் றெய்வந்தா னியா
தென் றோதிற்,

கேவலமே யரியல்ல வரனல்ல பூதவுடற் கிடைத்த தல்ல
வோவுமன மன்றடியு முடிவுமிலாச் செயப்படா வுணர்வே தெய்
வம்"

என்னும் வசிட்ட பரசிவ சம்வாதத்தாற் றெய்வபாவ நிர்ணயிக்கப் பட்டு மிருக்கிறது; இத்தெய்வத்தில் "எண்ணில் கோடி பிரமாண்ட மிதயத் தொருபா லிளைப்பாறும், கண்ணன் பிரமன் சிவன் மகவான் முதல்வா ணவரார் கவின்பெறும், இவ்வண்ணல் வடிவி லுரோம நிரையாகு மிந்தவனைத் துயிரும்."

"விவிதாரம்பம் புரிவனவா யுலகாம் பொறியின் வினைக்கயிரு ய்த், தவிரா விச்சை முதற்பலவாஞ் சத்தி யவன்மே னியிற்றங்கும், அவிரா நின்ற விவன் பரம தேவென் றறிந்தோ ரருச்சிப்போர்" "எங்கு முறைவோ னெவராலுமெய்தப் படுவோ னெல்லையறத், தங்கு பதங்கட் காதார மாவோன் சத்தா மாத்திரமே யங்க மாவோன்" "நயன மூக்குச் செவிதொக்கு நாக்கு மனமாஞ் சத்திகளால், இயல்பி லெங்கும் விடயங்க ளருந்தி யெண்ணங் களுக்கெல்லாமயல தாகு மெவ்விடத்தும் பரம சிவமென் றகத்தெண்ணி, யுயர்தெய் வத்தை விதிநெறியே யோங்கு பூசை செயவேண்டும்."

"பிரமத் தினவா யொளியுருவாய்ப் பிறந்து பிறங்குஞ் சத்திகடாம்
விரவிப் பிரமாண் டத்தினது மேனியாகி நின்றசில

வுரவு பலபூ தத்திரளி னுருவ மாகி நின்றசில
சுரர்பொற் பதியாய் நின்றசில தோன்று சகத்தி னிலேயிதுவே''
என வருபவற்ருற் காண்க.

லயசிந்தனுக் கிரமமாக முற்கூறிய -௩௬- தத்துவத்தின் ஸ்தாநம், தொழில், அதிதெய்வ முதலியன வருமாறு:—

(௧-௨) அவித்தை, வித்தைகள் பாதயோக்கியசொரூப முடைய தென்னும் சதசத் விலட்சண வநிர்வசநீயபாவ அநாதிசாந்த முள்ள பதார்த்தம் சேதனுசிரிதமாய் அதையே விஷயம் பண்ணுவது.

(௩-௪-௫) சீவன், ஈசுவரன், பிரமம் மூன்றின் றன்மை முற்கூறப்பட்டன. (௬-௧௦ல்) ஆகாசாதி பஞ்சபூதம் முற்கூறியபடி பஞ்சீகரணம் பண்ணப்பட்டுப் பிரமாண்ட பிண்ட முதலாய் வுலசத்தோற்றமாய்ப் பகிர்ந்து நிற்பதாம். பிண்டத்தில் ஆக்ஞை, விசுத்தி, அனுகதம், மணிபூரகம், சுவாதிஷ்டாநம் ஸ்தாநங்கள், அண்ட பிண்டங்களில் அதிதெய்வம், சதாசிவன், மகேசுரன், ருத்திரன், விஷ்ணு, பிரமா முறையே கொள்ளத்தக்கனவாம். அவைகட்கு வியாபாரம் இடங்கொடை, விரகம், (விடுதல்) பாகம், பிண்டிகாணம், பொறையாம். தருமம்-வெளி, பரி, (விரைவு,) அழற்சி, நெகிழ்வு, திண்மையாம். குணங்கள் ''ககனத்திற் கொலியொன்றே வளிக்கிரண்டு றடனே, யந்தழலுக் கொளியொடுமூன்ற ற்கிரத மொடுநான், கைந்துமண மொடுபுவிக்கென் றறிக'' (௧௧. ௧௬.) சர்மாதிஆறுதத்துவம் பிரத்தியட்சமாய்ச் சடமான வைம்பூத வுருவங்க டாமே (௧௭-௩௬) சூட்சும சரீர தத்துவத்துள், ௧௭-ஆகாயத்தைப்போலச் சூட்சுமமாய் நிலைத்து நிற்பது உள்ளம்; இதுபுருவமத்தியி லிருந்து சதாசிவனுற் பிரேரிக்கப்பட்டுச் சகல கர்மவாசனைகளையு மடக்கி இடங்கொடுத்து நிற்பது.

கஅ—வாயுவைப்போலச் சலிப்பது மனம்- இதற்குக் கண்ட ஸ்தானம், சந்திர அதிதேவதையாற் பிரேரிக்கப்பட்டுச் சதா சங்கற்ப விகற்பாத்மகமா யுள்ளது. கக—அக்கினியைப்போல இஃதின்னது எனநிச்சயித்து விளக்குவது புத்தி, இதற்குஸ்தானம்முகம், அதிதெய்வம்பிரமா, நிச்சயாத்மகமா யுள்ளது. உ0-அப்புவைப்போலச் சிவனை விடயங்களிற் சிந்தனு பரவசமாயிழுப்பது சித்தம், இதற்கு ஸ்தானம் நாபி, அதிதெய்வம் விஷ்ணு, விஷய வாசனு தாரணை யுள்ளது. உக-பிருதிவியைப்போலத் தேகாதி அனுத்ம பதார்த்தங்களில் திடாபிமானஞ் செய்வது அகங்காரம், ஸ்தானம் இருதயம், அதிதெய்வம் ருத்திரன், அகந்தா, மமதாத்மகமா யுள்ளது.

இவ்வளவு விருத்திக்கும் ஏதுவான அந்தக்கரண மொன்றே அரக்குச் சுவர்ணம் மெழுகு முதலியவை போல அநேகவித பரிணும யோக்கியத் திரவியமாம். தன்மாத்திரையின் சத்துவாம்ச சமஷ்டியினின்றும் உற்பத்தியாதலின், உள்ளே யிருந்துகொண்டு அறியுங்கருவியாய்ச் சுரோத்திராதி ஐந்திந்திரிய வழித்தாலும் சத்தாதி ஐந்து விஷயங்களையுங் கிரகிப்பது குறியாம்.

உஉ—சுரோத்திரேந்திரியம் சப்த மாத்திரத்தை யறியும்; அந்தச் சப்தம் தொனி ரூபம்,வர்ண ரூபம் என இரண்டாம்; அவற்றில், பிராகிருத ரூபமாகிய பதினெண் பாஷை லௌகிகம் எனவும், சமஸ்கிருத ரூபமாகியவேத சாஸ்திரங்கள் வைதீகம் எனவும் வர்ண ரூபம் இருவிதமாம். இவ்விரண்டி னுள்ளும், அநந்தவிதமாம்; இஃதன்றிப் பஞ்சீகிருத பேதத்தில் சப்தம் இருபத்தைந்து விதமாம்; இவ்வளவு சப்த பேதங்களையும் கிரகிக்கும் ஆற்ற லுடையதாய்ச் செவி நடுவிலிருக்கிற வெளியை ஆசிரயித்துச் சுழுத்தி மரண மூர்ச்சா சமயம்

அவ்வாற்ற லின்மையின் அவ்வெளிக்கு மந்நியமாய்ச் சூட்சும வஸ்து ரூபமா யுள்ளது. தனது அதிதெய்வதித்திஞல் பிரேரிக்கப்பட்டுமுற் கூறிய சப்தக் கிராகிய வன்மை யுடையது.

உ௩—துவக் கிந்திரியமானது, ஸ்பரிச மாத்திரத்தை யறியும். அந்த ஸ்பரிசம்—சீதம், உஷ்ணம், சீதோஷ்ணம், மிருது, கடினம் என ஐந்துவிதமாம். இவற்றில், ஒவ்வொன்று அநந்தவிதமாம். இவ்வ ளவையும் கிரகிப்பதற் கேதுவாய்ச் சிரசினடுவெளியி லிருந்து இர ண்டு கவராய்த் துவக்கைச் சர்வத்திரா வியாபித்துச் சுழுத்தியாதிகளி லுள்ள துவக்கிஞல் அவ்வாற்ற லின்மையின் அதற்கு மந்நியமாய் ஸ்பரிசக் கிரகண சாமர்த்திய சூட்சும வஸ்துரூபமா யுள்ளது. தனது அதிதெய்வவாயுவிஞல் பிரேரிக்கப்பட்டு முற்கூறிய ஸ்பரிச பேதங் கள் பஞ்சீகிருத பேதமிருபது ஆகியவைகளை யறியும் வன்மை யுடை யது.

உச—சட்சிந்திரியமானது வெள்ளை, சிவப்பு, பச்சை, மஞ்சள், கறுப்பு, ஊதா, மிசிரம், அகலம், நீளம், உயர்வு, தாழ்வு, எனப்பலவித மாம். ஒவ்வொன்றில் அநந்தவிதமாம், இவ்வளவுரூபத்தையுங் கிரகித் தற் கேதுவாய்ச்சிரசி னடு வெளியி லிருந்து இரண்டு கவராய் இரு கண் குவளை முன்னிலையில் கறுப்பு விழியை ஆசிரயித்துச் சுழுத்தி யாதிகளி லுள்ள கருவிழியால் அவ்வாற்ற லின்மையின் அதற்கு மந் நியமாய் ரூபக்கிரகண சாமர்த்திய முள்ள சூட்சும வஸ்துவா யிருப் பது. தனது அதிதெய்வ சூரியனுற் பிரேரிக்கப்பட்டு முற்கூறிய ரூப பேதம், பஞ்சீகிருத பேதம்-கரு. ஆகியவற்றைக் கிரகித் தறியும் வன்மை யுடையது.

உரு—சிங்கு வேந்திரியமானது ஏனையஇந்திரிய ஞான மின்றித் தனது விஷயமான கைப்பு, புளிப்பு, கார்ப்பு, உவர்ப்பு, துவர்ப்பு,

தித்திப்பு என்பவற்றில் ஒன்றொன்றநந்தபேதமாம். இவ்வனைத்தையும் கிரகிப்பதற் கேதுவாய்க் கபால நடுவிலிருந்து இரண்டு கவராய்த் தாலுவோஷ்டத்தைப் பற்றி நுனிநாவை ஆசிரயித்துச் சுழுத்தியாதிகளி லுள்ள நுனிநாவால் அவ்வாற்ற லின்மையின் அதற்கு மந்நியமாய் ரசக்கிரகண சாமர்த்திய சூட்சும வஸ்துவாய்த் தனது அதிதெய்வ வருணனாற் பிரேரிக்கப்பட்டு முற்கூறிய ரசபேதம், பஞ்சீகிருத ரசபேதம்-௩0.ஆகியவைகளை அறியும் வன்மை யுடையது.



உசு—கிராணேந்திரியமானது, ஏனைய இந்திரிய ஞாந மின்றித் தனது விஷயமான சுகந்தம், துர்க்கந்தம், மிசிரகந்தம் எனமூன்று: இவற் றொன்றொன்று அநந்தபேதமாம். இவ்வனைத்தையுங் கிரகிப்பதற் கேதுவாய்க் கபாலத்தி லிருந்துமுக கமல வழி இரண்டு கவராய்ப் பிரிந்து மூக்குத் தண்டின் எலும்பைக் கிட்டி நாசிகாக்கிரத்தை யாசிரயித்துச் சுழுத்தியாதிகளி லுள்ள நாசிகாக்கிரத்தினால் அவ்வாற்ற லின்மையின் அதற்கு மந்நியமாய்க் கந்தக் கிரகண சாமர்த்திய சூட்சும வஸ்துவாய்த் தனது அதிஷ்டானதெய்வ அசுவினியால் பிரேரிக்கப்பட்டு முற்கூறிய கந்தங்கள், பஞ்சீகிருதபேத வாசனைகள் ஆகிய வனைத்தையும் அறிந்துகொண் டிருக்கும் வன்மை யுடையது.

சத்தாதி விஷயங்க ளனைத்தையும் அறிதலின், சுரோத்திராதி பஞ்சேந்திரியங்களுக்கும் ஞானேந்திரிய மெனப் பெயர். தன்மாத்திரா வியஷ்டி சாத்துவிககுணத்திலுற்பத்தியானபடியால் பகிரிந்திரிய மாய் அந்தக்கரணத்தை முன்னிட்டு தத்தம் விஷயங்களைமாத்திரம் விசேஷித் தறிந்து கிரகித்து அகவாசனைக் கேதுவாய் நிற்பது அவற்றின் குறியாம்.

உஎ—வியான வாயுவானது, சர்வாங்கமும் தனக்கு ஸ்தானமாய் வியாபித்து நின்று விசுவயோனி யென்னும் அதிதெய்வத்தாற் பிரே

ரிக்கப்பட்டுச் சரீரத்தை நிலைநிறுத்தி இந்திரிய புஷ்டித்தொழிலைச் செய்யும்.



உஅ—பிராண வாயுவானது, இருதய ஸ்தானமாய் நின்று விசிட்ட னென்னும் அதிதெய்வத்தாற் பிரேரிக்கப்பட்டு நாசிகாதி பரியந்தஞ்செல்லும் உசுவாசரூபதொழிலை யுடையதாம்.

உகூ—அபானவாயுவானது, குத ஸ்தானத்தை யாசிரயித்து நின்று விசுவ கர்த்தா வென்னும் அதிதெய்வத்தாற் பிரேரிக்கப்பட்டு உண்ட அந்நபானுதிகளைச் சாடராக்கினியாய்ப் பாகஞ்செய்து மலஜலாம்சங்களையொழித்து நிசுவாசரூபதொழிலை யுடையது.

நட—சமானவாயு, நாபிஸ்தானமாய்நின்று சயனென்னும் அதிதெய்வத்தாற் பிரேரிக்கப்பட்டுப் பிராணிகளால் உண்ணல், தின்றல், உறுஞ்சுதல், நக்குதல் என்னும் சதுர்விதஆகார ரசங்களையும் சகல நாடிகளிலும் அப்புவைப்போல் இழுத்துச் சென்று சரீரபுஷ்டியான தொழிலைச்செய்து கொண்டிருக்கும்.

நக—உதானவாயு, கண்ட ஸ்தானத்தைப்பற்றிநின்று அஜனென்னும் அதிதெய்வத்தாற் பிரேரிக்கப்பட்டுச் சுழுத்திசமயம் சர்வேந்திரியங்களையும் காரணமான அஞ்ஞானத்தில் லயிக்கப்பண்ணுவதும், சாக்கிரசமயம் அவ்வவ் விந்திரியங்களை அவ்வ ஸ்தானத்தில் நிலைபெறச் செய்வதும், மரண சமயம் சர்வேந்திரியங்களையுங் கிரகித்துக்கொண்டு லோகாந்தரஞ் செல்வதுமான தொழிலை யுடையது.

"குன்றுதலி னுகன்சோம் பாவித்தல் விளக்குங்கூர்மனுல் விக்கலொடு தேக்குளவா மன்றே" "தும்மலுட னிருமல்வருங் கிரிகரனுனகுதல் சொல்லுதலாந் தேவதத்த னுற்சோக ராக, மிம்மைதருந் தனஞ்செயனத் தனஞ்செயனும் வாயு விறந்தவைந்து நாள்காறு மிருந்து

நனி வீங்கி, மெய்ம்முழுதாம் வெடித்திடச்செய் தகலுநாகாதி விளம்பு புறவாயுக்க டாங்கருமேந் தியங்க, டம்மைமிக வியக்கலுறும் பிராணாதி வாயுத் தாமியக்கும் விடாமன்ஞா னேந்திரியங் களையே" "சாற்றின் வயி ரம்பன்முக் கியன்பிரபஞ் சன்னந் தரியாமியொடுமேகாப் பிராண னெனும் பெயர் கொள், ஆற்றிவைகள் சீவசம் பந்தமாயேயுட்கரணங்க ளியக்கியிடும்" என்று இவ்வாறுள்ள புறவாயுக்களுந் தொழில் வேறு பாட்டால் சித்திப்பனவாம். ஆயினும் ஸ்தானமும், அதிதேவதைகளு மொன்றே எனவறிக. இந்த வாயுக்கள் தன்மாத்திரா சமஷ்டி இராஜ தாம்ச காரியமானதால் சர்வ வியவகாராஸ்பதமாய் நிற்பனவாகுறியாம்.

(கஉ) வாக் கிந்திரியமானது, ஆகாசத்தி னம்சமான படியால் சூட்சும வஸ்துவாய் முககமலத்திலிருந்து பிரிந்துநுனி நாக்கு, தாலு மூலம், மேலுதடு, கீழுதடு, கண்டம், பல்லு, இருதயம், பிரமரந்திரமா கிய எட்டுஸ்தான வெளியை ஆசிரயித்து வசனிக்கும், சுழுத்தியாதிகளி லுள்ள அந்தஸ்தானங்களில் அவ்வாற்ற லின்மையின் அவ்வஷ்ட ஸ்தா னங்கட்கு மந்நியமாய் அக்கினி என்னும் அதிதேவதையாற் பிரேரிக்கப் பட்ட வாக்கு முற்கூறிய லௌகிக, வைதிக சப்தங்களனைத்தையும் வசநிக்கு மாற்ற லுடையது. சூக்குமை, பைசந்தி, மத்திமை, வைகரி என இவ்வாக்கு நான்காம்; அவை விந்துதத்துவத்திலுற்பத்தியாம்; அவற்றுள்ளும் சூக்குமை, விந்துவினுள்ளே அரும்பி, பைசந்தி இதய த்துள் மயின்முட்டையுட் சலம்போன்று மலர்ந்து, மத்திமை கண் டத்துள் சவிகற்பமா யுணரத்தக்க வொலியாய்க்காய்த்து, வைகரி வாயி னின்றுஞ் செவியிற் கேட்கப் பொருள்தரு மொலியாக் கனிந்து வெளிப்படும்; இவை வாக்கி னுற்பத்தியாம்.

ஈண்டு, இஃதிரகசியமாம்:— உள்ளேநின்று சங்கற்ப விகற்பங்க ளைச் செய்வதால் சலமும், இந்திரியங்களைப் புறத்தே விஷயங்களிற்

செலுத்துவதால் அசலமும் எனக் கூறப்பட்ட மனம் பிரகிருதியில் தோற்றமாம். ஆனதால், இம்மனமும், முற்கூறிய வாக்கும் அவிசார தசையில் இயங்கி விசாரதசையில் கீழ்ப்பட்டு அடங்கும்; இத்துரிய நிலையின்கண் மனச் செயல், வாக்கின் காரியங்கள் இல்லையாய் நிற்க, மேலவற்றோடு சிறிதுந் தாக்கற்றதாய்ப் பிரமம் அதீதமாகி நிற்கும் என்பதறிக.

(௩௩) பாணிந்திரியமானது, வாயுவி னம்சமானபடியால் சூட்சும வஸ்துவாய் முக கமலத்திலிருந்து இரண்டு கவராய்ப்பிரிந்துஉள்ளங்கையை ஆசிரயித்துச்சுழுத்தியாதிகளிலுள்ள அந்த ஸ்தாநக் கிரியை காண்டலின்மையின் அதற்கு மந்யமாய் அதிதேவதையான இந்திரனுற்பிரேரிக்கப்பட்டுக் கொடுத்தல், வாங்கல் முதலிய தனதுகிரியை மாத்திரஞ் செய்யும் வன்மை யுடையது.

(௩௪) பாதேந்திரியமானது, அக்நியி னம்சமாதலின் சூட்சும வஸ்துவாய் முக கமலத்திலிருந்து இருகவராய்ப் பிரிந்து உள்ளங்காலை யாசிரயித்துச் சுழுத்தியாதிகளிலுள்ள அந்தஸ்தானக் கிரியை காணப்படாமையின் அதற்குமன்னியமாய்த் தனது அதிதேவதையான, உபேந்திரனுற் பிரேரிக்கப் பட்டுக் கமனு கமனஞ் செய்யும் வன்மை யுடையது.

(௩௫) பாயுரு விந்திரியமானது, அப்புவி னம்சமானபடியால் சூட்சும வஸ்துவாய் முக கமலத்தி லிருந்து பிரிந்து குதஸ்தானத்தை யாசிரயித்துச் சுழுத்தியாதிகளிலுள்ள அந்தஸ்தானக் கிரியை காண்டலின்மையின் அதற்கு மன்னியமாய்த்தனது அதிதேவதையான் மிருத்தியுவினுற்பிரேரிக்கப்பட்டு உண்டவன்னாதி ஸ்தூலபாக மலஜலங்களை வெளியிலிழுத்து விசர்ச்சனுதிக்கிரியைசெய்யும் வன்மையுடையது.

(௩௬) உபஸ்தேந்திரியமானது, பிருதுவியி னம்சமானபடி யால் சூட்சுமவஸ்துவாய் முககமலத்திலிருந்து பிரிந்து யோநிலிங்கங் களை ஆசிரயித்துச் சுழுத்தியாதிகளிலுள்ள அந்த ஸ்தாநக்கிரியை காண் டலின்மையின் அதற்கு மந்நியமாய்த் தனது அதிதேவதையான பிர ஜாபதியாற் பிரேரிக்கப்பட்டுச் சுக்கில சுரோணித மூத்திர விசர்ச்சனுதி சுகத்தைச் செய்யுங்கிரியா சாமர்த்திய முள்ளது.

வாக்கு முதல், உபஸ்த பரியந்தமாகிய ஐந்தும் தன் மாத்திரையின் வியட்டி இர்ாஜதாம்சத்தினின் றும் உற்பத்தியானமையின் கன்மேந் திரிய மென்னும் நாமம் பெற்றுச் சமட்டி இராஜதாம்ச பஞ்சவாயுக் களை முன்னிட்டுத் தத்தம் கிரியையை மாத்திரஞ் செய்யாநிற்பது அவற்றின் குறியாம்.

இப்போது கூறிவந்த தத்துவங்களுள், சீவர்களுக்குச் சர்மாதி ஆறு தத்துவமாகிய தூலதேகம் கருமத்துக்கீடாகச் சுக்கில வாயிலா ய்ப்பூத பரிணும போகாலயமாம். இத்தூலதேக தத்துவம் ஆறும் பிரத்தியட்ச விஷயமாதலின் கடத்தையறிகின்ற கடதிருஷ்டா எப்ப டிக் கடத்துக்கு வேருே அப்படி ஆத்மாவா லறியப் பட்டுள்ள ஆறு தத்துவமும் ஆத்மாவுக் கந்நியமேயாம். அநுபூதிருபமான அவ்வான் மாவே தான் என்றறியத் தக்கதாக இரச்சுசர்ப்பம்போல அதிருசிய மும், திருசியமுமாயுள்ள தேகத்தை ஆறுதத்துவமாகக் கற்பித்துக் கூறப்பட்டது. அப்படியே சூட்சும சரீரதத்துவம் இருபதாமம். அச்சூட்சும தேகம் சீவர்களுக்குச் சாமாந்யகருமத்தாலுண்டாய் மோ ட்சபரியந்தம் தூலசரீரத்தைப்போற் பற்பலவின்றி ஒன்ருய் நின்ற போக சாதனமாம். இதனைச் சுருதி ஒவ்வோரிடங்களில் அந்தக்காண மொன்றெனக் கொண்டு சோடசாத்மகம் எனவும், மனம், புத்தி இரண்டில் உள்ளம், சித்தம், அகங்காரம் எனும் மூன்றையு மடக்கிப் பதினேழெனவும், உள்ள மொன்றை நீக்கிப் பத்தொன்ப தெனவும் பிரதானம் பற்றி மற்றவற்றை நீக்கி மனது ஒன்று, ஞானேந்திரியம் ஐந்து ஆகஆறு எனவும் கூறினும் விரோதமின்ரும். இந்த லிங்க

சரீரம் தூலசரீரத்தைப் போலப் பிரத்தியட்ச மாகாததால் அவ்வத் தத்துவங்களின் காரியானுமானங்கொண் டநுபவித்தறியத்தக்க சூக்கும தத்துவங்களமைந்த சரீரமெனப்படும். இவ்விரண்டு சரீரமும் காரணத்தினின்றும் பிரகடமானதால் காரியமாம். ஆனதால், அஞ்ஞானம் காரண சரீரமாக, மூன்று தேகம், மூன்றவஸ்தை, அந்நமயாதி பஞ்ச கோசங்கள் அடங்கியன இருபத்தேழு தத்துவ அளவையாம்.

ஆறுதத்துவமான தூலசரீரத்துள் இருபதுதத்துவம் குடி புக்கிருக்கும் வகை தெரிவிப்பாம்:—(க) தன்மாத்திரா இராஜஸ வியஷ்டி ஆகாசாம்ச கன்மேந்திரியமான வாக்கும், ஷை சத்துவகுண வியஷ்டி அப்புவினம்ச சிங்குவையும் வாயிலிருக்கும்: (உ) சமஷ்டி இராஜஸ பிருதிவியம்ச உதானவாயுவும், சத்துவகுண சமஷ்டி வாயுவம்சமான மனதும் கண்டத்திலிருக்கும்: (ங) இராஜஸாம்ச சமஷ்டி வாயுவம்சமான பிராணனும், சத்துவகுண சமஷ்டி அக்கினியினம்சமான புத்தியும் இருதயத்திலிருக்கும்: (ச) இரஜோகுண சமஷ்டி அப்புவின் அம்சமான வாயுவும், சத்துவ சமஷ்டி அப்புவினம்ச சித்தமும் நாபியிலிருக்கும்: (ரு) இரஜோகுண சமஷ்டி அக்னியம்ச அபானவாயுவும், ஷை வியஷ்டி அப்புவினம்ச பாயுருவும் குதத்திலிருக்கும்: (சா) இரஜோகுண சமஷ்டி ஆகாசாம்ச வியான வாயுவும், சத்துவகுண வியஷ்டிவாயுவம்ச துவக்கும், ஷை சமஷ்டிபிருதிவியினம்சஅகங்காரமும் சர்வாங்கமும் வியாபித்திருக்கும்: (எ) சத்துவ சமஷ்டி ஆகாசாம்ச தேயுசு உச்சியிலும் (அ) ஷைவியஷ்டி அக்னியம்ச சட்சு கருவிழிநுனியிலும், (கூ) சத்துவகுண வியஷ்டி ஆகாசாம்ச சுரோத்திரம் காதுக்குள்ளும், (க0) ஷை வியஷ்டி பிருதுவியம்சகிராணம் மூக்கினுள்ளும் கழுத்துக்குமேல் தனித் தனியிருக்கும். கழுத்துக்குக் கீழே (கக) கை (கஉ) கால், (கங)குய்யங்களில் முறையே இராஜஸகுண வியஷ்டி வாயுவம்ச பாணி ஷை அக்கினியம்ச பாதம், ஷை பிருதுவி யம்ச உபத்தம் மூன்றுந் தனித் தனியிருக்கும்.

ஓர் நாற்சார்லாகட கட்டடம். அதன் உள்ளறைகள்போன்ற சர்மாதி ஆறுதத்துவ ரூப தூலசரீரத்துள்ளறைகள், அததிற்றங்கிய சூட்சுமசரீரதத்துவரூப தோழிலாளர் 20-பேர்களின் விபரங்கள்.

| அறை எண் | அறை நாமம் | தன்மாத்திரை சமட்டி வியட்டி நாமம் | குணநாமம் | அம்ச விபரம் | காரணம் | பெயர் | தத்துவத்துகை | |
|---|---|---|---|---|---|---|---|---|
| 1 | வாய் | வியஷ்டி | இராஜஸ௱ | ஆகாசம் | கர்மேந்தி | வாக்கு | 2 | அற்பமதா |
| | | ,, | சத்துவம் | அப்பு | ஞானேந் | சிங்குவை | | ஞ்சுகா சுகத் |
| 2 | கண்டம் | சமஷ்டி | இராஜஸ௱ | பிருதுவி | வியாஞுதி | உதானன் | 2 | திலழுந்து |
| | | ,, | சத்துவம் | வாயு | அந்தக்கர | மனது | | முடனிலவ |
| 3 | இருதயம் | சமஷ்டி | இராஜஸ௱ | வாயு | வியாஞுதி | பிராணன் | 2 | வெனினு ம |
| | | ,, | சத்துவம் | அக்கினி | அந்தக்கர | புத்தி | | ழி வென்று |
| 4 | நாபி | சமஷ்டி | இராஜஸ௱ | அப்பு | வியாஞு | சமானன் | 2 | லு, நற்பல |
| | | ,, | சத்துவம் | ,, | அந்தக் | சித்தம் | | மென்னகங் |
| 5 | குதம் | வியஷ்டி | இராஜஸ௱ | அக்கினி | வியாஞு | அபானன் | 2 | காரனுக் கக |
| | | ,, | ,, | அப்பு | கர்மேந் | பாயுரு | | மாகிப் பொ |
| 6 | சர்வாங்கம் | சமஷ்டி | ,, | ஆகாசம் | வியாஞுதி | வியானன் | | றிபசுக் கணு |
| | | வியஷ்டி | சத்துவம் | வாயு | ஞானே | துவக்கு | ௩ | லோடாறுவ |
| | | சமஷ்டி | ,, | பிருதுவி | அந்தக்க | அகங்காரம் | | கற்பனை |
| 7 | உச்சி | ,, | ,, | ஆகாசம் | ,, | [illegible]தயுசு | க | செய் மனத் |
| 8 | கருவிழி நுனி | வியஷ்டி | ,, | அக்கினி | ஞானே | சட்சுஸ௱ | க | தொழும்பு |
| | | | | | | | | மாசைமனை |

| அறை தொகை | அறை நாமம் | தன்மாத்திரை சமட்டி வியட்டி நாமம் | குணநாமம் | அம்ச விபரம் | கரணம் | பெயர் | தத்துவத்தொகை | |
|---|---|---|---|---|---|---|---|---|
| 9 | கர்ணஷட்குலி | ,, | ,, | ஆகாசம் | ,, | சுரோத்ரம் | க | வியும் ஓயா ங்கடையுமா |
| 10 | நாசிநுனி | ,, | ,, | பிருதுவி | ,, | கிராணம் | க | ங்கே,பற்பல |
| 11 | உள்ளங்கை | ,, | இராஜசு | வாயு | கர்மேந்திரி | பாணி | க | பல்லெலன்பு களாங் தோ |
| 12 | உள்ளங்கால் | ,, | ,, | அக்கினி | ,, | பாதம் | க | ரணமு நாக் குராங்கும் ப |
| 13 | குய்யம் | ,, | ,, | பிருதுவி | ,, | உபத்தம் | க | யின் றதோ ன் றம். |

இந்தத் தூலசரீர நுபக் கிரகத்திலுள்ளறை 13-லும் ஒண்டுக்குடியிருப்பவர் 20-பேர்.

சீவேசுவராரோபித தத்துவ ஒற்றுமைச் சமடநாமம், அவ்வச்சமய அபிமானுதிசேதன நாமமுதலிய விபரங்கள்.

| சீவேசுவர சரீரதத்துவவிபரம். | சமயநாமம் | அபிமானி நாமம் | வியஷ்டி சமஷ்டி சீவ ஈசர் | சாக்கிராதிசரீர தத்துவ வியாபாரம் |
|---|---|---|---|---|
| சீவன் கலத்தல்<br>காரணசரீரம்-க, காரிய சரீரம்-26 ஆக தத்துவம்-27<br>சூக்மசரீர தத்வம் 20 காரண சரீரதத்வம்-1 | சாக்கிரம்<br>சொப்னம்<br>சுழுத்தி | விசுவன், வியாவகாரிகன்<br>தைஜஸன், பிராதிபாசிக ஜீவன், சொப்ன கற்பிதன்.<br>பிராக்ஞன், பாரமார்த்த ஜீவன். | வியஷ்டி சீவனுன்னிலை. | சாக்கிரகத தூல சரீரத்துக்கு ஸ்தூல கூ, சூட்சும 20, சீவனுதி ரு ஆக நக. சொப்பனகத சூட்சுமத்துக்குச் சூட்சும-20, சீவனுதி ரு ஆக உரு<br>சுழுத்திகத காரணத்துக்குச் சீவனுதி-ரு துரியகத சீவனுக்குச் சீவ ஈச பிரமம் ங-துரியாதீதகத சாட்சிக்குச்சாட்சி-க. |
| வியஷ்டியில் பிரமம் சூட்சுமசரீரம், தூலம் காரணம் 27 தத்துவ சாட்சி<br>20-தத்வசாட்சி-1 காரணசரீரதத்வ ஷெ | சாக்கிரம்<br>சொப்னம்<br>சுழுத்தி | சீவாத்மா<br>அந்தராத்மா<br>பரமாத்மா | | |
| ஈசுவரன் கலத்தல்.<br>ஸ்தூலபூதம், சமஷ்டிஸ்தூல, சூக்ம, காரணம்-32 ஈச தூலசரீரம், விராட்டு | சிருஷ்டி | வைசுவாநரன்<br>இவ்வதிஷ்டானம் பிரமா | ஈசனுன்னிலை. | சிருட்டிகத ஸ்தூலத்துக்குச்சமட்டி ஸ்தூல, சூட்சும உகூ, ஷெசீவஅவித்தை-உ, ஈசவித்தை பிரமம் ங,பூதம் ரு ஆக நகூ-ஸ்திதி சூக்மத்துக்குச் சமட்டி சூட்சுமசீவ அவித்தை 22, சூட்சுமபூதம் ரு ஈசுர,வித்தை, பிரமம்-ங ஆக ந௦. சம்மாரகதகாரண |

| ஜீவேசுவர சரீர தத்வ விபரம். | சமயநாமம் | அபிமானி நாமம் | விஷ்டி சமஷ்டி ஜீவ ஈசு | சாக்ராதி சரீர தத்வ வியாபாரம் |
|---|---|---|---|---|
| சூட்சுமபூதம் 5, வ்ஷ்டி சமட்டிசரீரம் 20 ஆ 25ம் சூட்சும சரீரம், இரண்யகர்ப்பம் | ஸ்திதி, திரோ பாவம் | சூத்திராத்மா அதிஷ்டானம் விஷ்ணு. | சமட்டி ஈசுவரன் | க்துக்குஈசனுகி-டதுரியகத ஈசுரனுக்கு ஈச,பிரம ஆ உ துரியா திதகதபிரமத்துகுப் பிமம்-க இந்திரியத்துக்கு ஷ்டி-க, தூலசு, காரணடு-வாயு டு,சீவனுகி டு ஆ 32 மனுை ராச்சியத்துக்குக் கா ண-டு, சீவனுதி-டு ஆ ௪0 |
| இவ்விருசரீர வாசனு ரூபமாயை க-ம்காரண சரீரம், அவ்யாகிருதம் | சம்மாரம் | அந்தர்யாமி அதிஷ்டானம் ருத்திரன். | | |

இவைகட் கதிஷ்டான சுத்தப்பிரமம் அனுக்ரகார்த்தம் சீவேசவியட்டி சமட்டி தத்துவம் கரு-லும் கலந்து சாட்சியாய் நிறைந்தும் எல்லையற்றிருக்தும்.

பாமார்த்தம் நிரபிமானி, நிரதிஷ்டானம்.

| கூழிவந்த ஆரோபத் தோற்றப்படி அபவாதஞ்செய்யும் விபரம். | | | | | 36-ல் ஜீவர்கட்கு நிலைதத்தத்வ விபரம். | | | ஷடி தோற்ற விபரம். | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| ஸ்தூல சூட்சுமம். | காரிய தத்துவம். | தொகை | ஒடுங்கும் காரண தத்துவம் | தொகை | சமுதாய பிரதக்கு | தத்துவம் | தொகை | தனது அந்யம் தனதந் | தத்துவனுதுவோடுகூடியபெயர். | தொகை |
| சமட்டி ஸ்தூலசரீரம் | | 6 | ஸ்தூலபூதம் இரண்யகார்ப் பாவஸ்தை | 5 | சமுதாயம். | பூதம் மாயை [ம்ப மாயாப்ரதிபி பிரமம் | 5 1 1 1 | சதா ஞனது | ஏனைய தத்துவங்கள் போலன்றிச் சர்வாவஸ்தைகளிலுந் தானுக விளங்கும் பிரமம். | 1 |
| தூலபூதம் | | 5 | தாமதகுண சூட்சுமபூத | 5 | | ஆ- | 8 | | | |
| சூட்சுமசரீரம் | | 20 ல் | சத்துவ ரஜகுணசமட்டி வியட்டிஅகங்காரம் கிராணம், உதானன், உபத்தம் 4-ம் பிருதுவி | 1 | இதில் எது | ஆதாரம், சலம், பாகம், வாயுவியக்கர், அவகாசம், சமய தெய்வம், அறிவு, மண்ணுதி யின்றியவையமையாமையின் | 6 | சதா அந்யம். | வெட்டுக் கொத்துழவுமுதவிய தொழில்களால் எப்போதும் தனக்கந்நியமாக விளங்கும்பூதம். | 5 |
| ,, ஷடிசித்தம், சிங்குவைசமானன், பாயுருஷடிபுத்தி, சட்சு, அபானன், பாதம் ஷடி மனது, | | 4 | அப்பு | 1 | பிரதக்கு. | ஸ்தூலசரீரம் | 20 | | | |
| | | 4 | அக்கினி | 1 | | சூட்சுமசரீரம் | 1 | | | |
| | | | | | | அவித்தை | 1 | | | |
| துவக்கு, பிராணன், பாணி | | 4 | வாயு | 1 | | சீவன் | | | பஞ்சருகித்திய தசாவ | |
| | | | | | | ஆ- | 28 | | | |

| ஸ்தூல சூட்சுமம். | காரிய தத்துவம் | ஒடுங்கும் காரண தத்துவம். | தொகை | சமுதாய பிரதக்கு | தத்துவம் | தொகை | தனது அந்யம் தனதந் | தத்துவ ஏதிவொடுகூடிய பெயர் | தொகை |
|---|---|---|---|---|---|---|---|---|---|
| ஷிதேயுசு சுரோத்ர, வியாந, வாக்கு சூட்சுமமுச்சுணபூதங்களாயின 5-ல்பிருதவி | | 4 ஆகாசம் ஆ | 1 / 5 | | மரித்தல, அங்கவைகல்யம், அவித்தை, சீவன் இரண்டன பாவம் தனித்தனி பெத்தமுத்த சமயா நுபவமிருத்தலால், ஆ | | ஒவ்வோர் போது தனது, அந்நியம். | தாரமுதலிய தொழில்களால்தனக்கந்நியமாயை, ஷேபிரதிபிம்பர். | 2 |
| | | 1 கரைந்து அப்பு | 1 | இதில் எது | | | | | |
| அப்பு | | 1 சுவறி அக்னி | 1 | | | | | யுக்தி, அயுக்திபூர்வகவிவேகாவிவேகசமயம்பருத்தல் இளைத்தலாதிஸ்தூலசரீரம். | 6 |
| அக்கினி | | 1 அணைந்துவாயு | 1 | | | | | | |
| வாயு | | 1 ஒய்ந்து ஆகாசம் | 1 | | | | | | |
| ஆகாசம் | | 1 விட்சேபசத்தி | 1 | | | | | | |
| ஆவரணமும் விட்சேபமும் | | 1 மரம்வித்துட்போல மூலப்பிரகிருதி தமசுமாத்திரமாய்மாயை, அவித்தை | 2 | | | 36 | | | |
| மாயை, அவித்தை | | 2 மூலப்பிரகிருதியெனும் விந்து | 1 | | | | | காண்டலாதிய சூட்சுமசரீரம். | 20 |
| விந்து | | 1 அதிஷ்டானப்பிரமசைதந்நியம் | 1 | | | | | அறிவு, அறியாமையாதி அவித்தை சீவன். ஆ | 2 |
| | | | | | | | | | 28 |

| இவ்வாறு தோற்றி யொடுங்கின 36 தத்துவ விபரம் | |
|---|---|
| ஆகாசாதி பூதம் | 5 |
| ஸ்தூலசரீர தத்துவம் சர்மாதி | 6 |
| அந்தக்கரண,பிராண,ஞான,கர்மபஞ்சகங்கள் | 20 |
| காரண சரீரமாயை, அவித்தை | 2 |
| மாயாப்பிரதிபிம்ப ஈசுவரன், அவித்தியாப்பிரதிபிம்ப சீவன் | 2 |
| இவ்வதிஷ்டான சேதன பிரமம் | 1 |
| ஆக | 36 |

ஆ இப்படி நிலைத்த தத்துவம் 36. | சமயப்படி தோற்றிர் தத்துவம்-36

ஈண்டிஃது பாரமார்த்திகரகசியம்:—"மறையோனொருவன் றன்னுடைய மகிமைகடந்து சூத்திரனாய், முறைதீர்வது போற் சீவனென முளைத்தானீசன் சிருட்டிதொறு, நிறை ந்துயிர்க ளளவின்றி நிகழு மூலச்சித்துசைவாற், றுறைதோறவைதான் றேன்றுமொற்றெடர் காரணமிங்கிலதாகும், ஈசனிடைநின் றுற்பவமாயெழுந்தவுயிர்கடாஞ் செய்த, வீசுகருமங்களினுலே பேண் மேற்பிறவிகளைமேவுந், தேசமுடையாய் காரிய காரணத்தின் செய்தியிதுவாகு, மேசுபிறவிகருமமெனு மிரண்டினுக்குமிப்படியே"பரமமதனி"லகாரணத்தாற் பரந்தவுயிரெல்லா முண்டாம், விரவுமதற்பின் பவர்க்கெல்லா மிகத்தாஞ் செய்த கருமங்க, ளுரிய சுகதுக்கங்கட மக்குறு காரணமாந்தனையறியாப், பிரமைதனிற் சேர்சங்கற்பம் பேசுகருமங்களின் மூலம்" "பரமமேயெங்கு மென்று முண்டாகும் பயின் மனனத்தினுன் மனமாந்,தரமறுபந்த மூத்தி பேருலகாஞ் சத்திகளனைத்துமாய் நிற்குந், திரமறுதநயற்கன்னை சொற்கதைபோற் செப்பியவிவை யெலாந்திரமாங், கரமலர் முகிலே" என்றபடி பாரமார்த்திக, வியாவகாரிக ரீதிகளைத் தெளிந்த மேலோர், "கருங்கருவு பிறப்பினெடு வளர்தல் பருத்தல் குறைத, லொருங்கலு மெய்க்கென் றதனை யொறுத்திருப்பார், பார்ப்பதுவுங் கேட்பதுவும் பகவர்துவுஞ் செல்வதுவும், மேற்பதுவுங் கரணதன்மமெனத் துணிவார், பசிதாகமுயிர்க்கெனவே பயந் துக்கஞ் சுகங்காமம், வசிகோப மதிக்கெனவே மகிழ்ந்திருப்பாரென்றவரோ" என இங்ஙனம் வினையாகுபயன் விட்டமைதியா லின்பவுருவாய்க்கிரியை யொழியாதிருப்பதையு மறிக.

ஓர்மலையின்கண் ஐந்து கபாடத்துடன் கூடிய ஐந்து குகைக்குள் பிரசன்னமுற் றெழுந்தருளியிருக்கும் இரத்தினமய :தேவதா சர்வ வரப்பிரசாதகர திவ்விய மங்கள விக்கிரகத்தைப் பக்திமான்களால் பக்தியாதி யுபாயபூகத்திறவுகோல்கொடு அக்கபாடந்திறக்கப்பட்டுப் பிரசன்னப்படுத்திக் கொள்ளல் போல, அதிகாரிகள் தேகத்தின்கண் பஞ்ச கோசரூபக் குகையுள் அதிஷ்டானமாய்க் கோச பாவாபாவங்களை விளக்கி அதி சூட்சும நிரவயவமாய் நிற்கும் ஆன்மாவைப் பிரசன்னஞ் செய்து கொள்ளும் விசாரம்.

| கோசநாமம் | திருஷ்டாந்த பூர்வகம் கோச சப்தார்த்தம் | ஆத்மாவன்றென்பதற்கு | | | ஷரா |
|---|---|---|---|---|---|
| | | பிரதிக்ஞை | ஏது | திருஷ்டாந்தம் | |
| அந்நகாரிய மயம் ஆகலின் அந்நமயம். | புருஷனைச்சட்டை மறைத்தல் போல அகஞ்சத்தார்த்தவான்மாவைநான்பிராமணன், பிரமசாரி என்பனவாதி மித்தியாத்தியாசத்தால் மறைத்துச்சரித்தல். | சாக்கிரசமயந் தோன்றிச்சொப்பன சுழுத்திகவில் அபாவமாதும் இஃதான் மாவாகாமை. | ※ ஆன்மாவாமென்னின், அந்வயயுக்தியால் இருதநாசமும், வியதிரேகயுக்தியால் அகிருதஸ்பியாகமதோஷமுமாம். 6-தத்துவமாய், காஷ்டகுட்டியங்க | மண்ணின் விகாரமான | இது பரியக்கத்தால் ஆத்மா அவஸ்தாத்ரய சாட்சி, தேகத்திரய விலக்ஷணன், |

| | | | | | |
|---|---|---|---|---|---|
| பிராணனும், கருமேந்திரியமும் கூடி உசுவாச நிசுவாச ரூபமாதலின், பிராணமயம் | கத்தியை உறை மறைத்தாற் போல அகஞ்சத்தார்த்த வான்மாவை நான் பசிதாகமுடையவன் என்பனவாதி இதராத்தியாசங்களால் மறைத்துச் சர்வக்கிரியாஸ்பதமாய் நிற்றல் | சுழுத்திபரியந்த அவஸ்தைகளிலும் உசுவாசநிசுவாசஞ் செய்து தனக்கெனவோரறிவின்றி ஈசுவராக்ஞையால் உடல் காவல்மாத்திரமாய் நிற்கும் இஃதான்மாவாகாமை | ள்போல் பிரத்தியட்சசடமாய் மாதாபிதா சுக்கிலசோணித பரிணமமாய், பின்னரும் அந்நம்ஷை அதிகம் குறைவுகளால் ஜீவனவிருத்தி, நாசங்களாய் அந்நவிகாரியாதல். | கடசராவாதிகள். | அகஞ்சப்தாதித்தன், பஞ்சகோசவியதிரிக்தன் என்பது சித்திக்கப்பெற்றது. |
| மனதும், ஞானேந்திரியமுங்கூடி சங்கற்பவிகற்பாத்மக மனோமயம் | பசிக்காய்ப்பை புழுவை மறைத்தல் போல அகஞ்சத்தார்த்த ஆன்மாவை நான் இராகித்துவேஷி என்பனவாதி இதரேதராத்யாசங்களால் மறைத்துச் சமுசயாத்மகமாயிருத்தல், | சுழுத்தியிலபாவமாய்ச் சாக்கிர சொப்பனங்களிற் சங்கற்பவிகற்பாஸ்பத கரணரூபமாய் நிற்கும் இஃதான்மாவாகாமை. | விஷயமாய்ச் சடமாய்நிற்றல் | கடதிருஷ்டாவுக்கு விஷயமான கடம் | |
| | | | விபசாரியாய் விசாரரூப வஸ்துவாதல் | பாலியாதி அவஸ்தையுடைய தேகம் | |
| புத்தியும், ஞானேந்திரியமுங்கூடி விஞ்ஞானமயம் | வீணையைக் கௌசீனம் மறைத்தல் போல அகஞ்சத்தார்த்த ஆன்மாவை நான் நிச்சயவான் என்பனவாதி சோ | சாக்கிர சொப்பனங்களில் ஈதிஃது இப்படிப்பட்டதென நிஷ்கரிக்கும் விசேஷஞானாத்மகமா | லயாதியவஸ்தையுடைய வஸ்துவாதல். | மண், பொன்னாதிகளில் கடசராவாதிக | |

| தோசனர்மம் | திருஷ்டாந்த பூர்வகம் கோச சப்தார்த்தம் | ஆத்மாவன்றெனபதற்கு | | | ஷரா |
|---|---|---|---|---|---|
| | | பிரதிக்ஞை | எது | திருஷ்டாந்தம் | |
| யம் | பாதிகாத்தியாசத்தால். மறைத்து நிற்றல் | ய்க்கர்த்தா ரூப இது ஆன்மாவாகாமை. | | டகமகுடாதி வஸ்துக்கள் | |
| சுழுத்தி யில் சொரூபாந ந்தாநுபவ நு ண்காண அ வித்தியா வி ருத்தியும், சா க்கிர சொப்ப னங்களில் இ ஷ்ட வஸ்து தரிசனசாமீ ப்பியசை யோக ஜனி தபிரிய மோ தப் பிர மோ த அந்தக்கர ண விருத்தி யுங்கூடி ஆந ந்தமயம். | புளியம் பழத்தைத் தோடு மறைத்தல் போல அஞ்சத்தார்த்த ஆன்மாவை நான் பிரியமோதப் பிரமோதன் என்பனவாதி ஆன்மாஞன்மதர் மங்கள் அந்நியோந் நியமாய்ச் சோபாதிகாத்தியாசத்தால் மறைத்து நிற்றல். | பிம்பப்பிரதிபிம் பாகந்தான்மகமாய்ப் போக்தா ரூபஇஃதான் மாவாகாவை. | ஒருக்கால் உளதாவது. | மாரிகாலமேகம். | |

அற்றேல், உள்ளதாகிய அன்னமய முதலான யாவும் ஆன்மாவலவென்றகற்றின், மேல் ஆன்மா விலதென வருமாலோ வென்றையுறின்? புத்தியாதியிற் பிரதிவிம்பிதமாய்ப் பொருந்திய பிரியமுதலானவற்றின் சொற்பொருளான ஆனந்தமயத்தின் காரணமாகிய ஆனந்தம் யாது, அதுவே நித்திய மாதலின் ஆன்மாவாம். விவாதங் கற்பிக்கப்படு உம் ஆனந்தம் ஆன்மாவாதற்குரித்து; எவன் இவ்வான்மாவாகான்; அவன் நித்தியமாகான். ககனுதிகள் உற்பத்தியுடைமையால், அநித்யமாதலின் நைகாந்திக முடைத்து. நைகாந்திகம்—அவ்வேது மற்றேரிடத்து முளதென்பது.



இவ்வாறு, பிரதிக்ஞையாதி பூர்வகஞ் சித்தமான சச்சிதாநந்த சுபாவ முள்ள ஆத்மரூபமான தன்னை அசத்துச் சடதுக்க சுபாவ முள்ள பஞ்ச கோசங்களினின்றும் முமுட்சுக்கள் அவசியம் வேறுபிரித்துப் பிரமரூபமாக அறிந்து திடாபரோட்சாநுபூதி பெற்றுச் சொச்சரூபநிலையிற் சுகித்தல் புருஷார்த்தமாம்.

அங்ஙனம், வேறு பிரித்தலைவிளக்குவாம்;—என்பசு, என் கன்று, என் பிள்ளை, என்பன வாதியாகத் தன்னைச் சம்பந்தித்துத்தோற்றப்பட்டன தானல்லாதனவும், என் பசுவாதிகள் இளைத்தன, பருத்தன வென்னுஞ் சுபாவமான அவ்விகாரங்கள் தன்னை ஸ்பரிசிக்காததும் போல என் சரீரம், என் பிராணன், என் மநம், என் புத்தி, எனது ஞாஞஞ்ஞாநம் எனத் தன்னைச் சம்பந்தித்துத் தோன்றும் பஞ்சகோசங்கள் தா னல்லவாகையாலும், அந்நமயாதி பஞ்சகோச சுபாவங்களான மநுஷியத்வாதி விகாரம், பசிதாகாதி விகாரம், சங்கற்பவிகற்ப சமுசயாதி விகாரம், கருத்திருத்துவாதி விகாரம், போக்திருத்துவாதி விகா

ரம் என்னு மிவைகள் முறையே பஞ்சகோசங்களுக் கந்நியமாய், அப்பாவாபாவங்களை விளக்குஞ் சாட்சியாய் இருக்குந் தன்னை ஸ்பரிசிக்காமையாலும், சாக்கிர, சொப்பன, சுழுத்தி, சமாதி யவஸ்தைகளில் வியபிசார மில்லாத தனது பாவமும், வியபிசார முடைய கோசாபாவமும் என்னும் அந்வய வியதிரேக யுக்தியாலும், மேல் கண்ட பஞ்ச கோச வியதிரிக்த பிரமரூப ஆத்மாவான தனது ஞானம் அதிகாரிகளுக்குச் சித்திப்பதாம்.

பசுவாதி திருஷ்டாந்தம் போலத்தாஷ்டாந்தத்தில் பஞ்ச கோசங்கள் தனக்கு வேறாகக் காணப்படாமையின், அவ்வியதிரிக்த ஞானம் எப்படிச் சித்திப்ப தெனின்;—அத்தியயந காலத்தில் அநேகருடன் கூடி உச்சரிக்குந்தன் பிள்ளையின் நாதம் கையினுல்பகுத் தறியாதுசுரோத்திரேந்திரிய வாயிலாய் விவேகத்தோடு கூடியபுத்தியினுல் பகுத்தறியத்தகுவதுபோலும், சலத்துடன் கலந்த உஷ்ணம், சுவரி லெழுதப்பட்ட சித்திரம், சல சம்பந்த ஷட் ருசிகள் வஸ்துகத கந்தங்கள் என்பவற்றைப் பார்வையாதியால் பகுத்தறியத்தகாது, அவ்வவ் விசைவு கொண்டு விவேகித்தறியத்தகுவது போலும், பஞ்ச கோசங்கள், அவற்றில் ஸாக்ஷி ரூபமாய் ஸ்திதமான ஆன்மா என்பவற்றையும் கராதிகளால் பகுத்தறியத்தகாது அநுபவாசாரியர்வாயிலாக விட்சிப்த ரகித சாஸ்திர சம்ஸ்காரஸகித கூரியவிவேக புத்திகொண் பேதித்து இஃதித்தன்மைத்து, இஃதித்தன்மைத்து என்று பகுத்து அவைகட்குக் காலத்திரயத்திலும் பரஸ்பர சம்பந்தமின்மையை நன்கறிந்து அம்ச பட்சியொத்துச் சதாகாலமும் ஆன்மராமனுய்ப் பிரித்தவண்ணம் தன்மயசுகமநுபவிக்கலாம்.

இது காறும், மந்தாதிகாரி நிமித்தம் ஸ்வதசித்தமான ஆன்மாவைப்பஞ்ச கோசங்களுள் அடக்கியும், வேறு பிரித்தும் சுலப வுபாயமா

கக் கூறினேம். இனி, உத்தமோத்தமாதிகாரி நிமித்தம் பாரமார்த்திக விசாரங் கூறுதும்;—இரச்சுவாதிகளில் ஆரோபித சர்ப்பாதிகள் போல ஆன்மாவினிடத்தில் சுவசக்தி வசத்தால் ஆரோபித பஞ்சகோசங்களும் அதிஷ்டாந ஆத்ம வியதிரிக்தமாய்க் காலத் திரயத்திலும் ஓர் பொருளாக வில்லையென்பது சுருதி குரு ஸ்வாநுபூதி வாயிலாகப் பிரகடமாம். ஆயின், இரச்சு பரிக்ஞாநத்திற் போல ஆத்ம ஞானத்தின் பின்னர்ப் பஞ்ச கோசங்களின் நினைப்புதிப்பது தகுதி யன்றே யெனின்? கானலினிடத்திற் போல ஆத்மாவினிடத்திலும் ஆரோபித பஞ்ச கோசங்கள் அதிஷ்டாந வியதிரிக்தமாக வின்மையைத்தேர்ந்தும் பஞ்ச கோசங்களின் நினைப் புதிப்பதால் பாதக மின்று. கானலினிடத்து ஜலஸ்மிருதி யெழினும் முன்போல ஸ்நாந பாநாதிக் கிரியைகளில்லை: அங்ஙனம் ஆன்மாவினிடத்தும் பஞ்ச கோசங்களின் ஸ்மிருதி பூர்வக வியவகாரங்கள் இல்லா திருக்கவேண்டுமே யெனின்? மிருத்திகை, சுவர்ணுதிகளின்கண் ஆரோபிதமான கடகமகுடாதி காரியங்கள் தத்தம் உபாதான காரணத்துக்கு அந்நிய மன்று என்று தெரியவரினும் அவ்வக் காரியங்களின் ஸ்மிருதியும் உரிய வியவகாரங்களும் லோகப் பிரசித்தக் காட்சி போல அபின்ன நிமித்தோபாதான ஆன்மாவினிடத்தும் ஆரோபித பஞ்ச கோசங்கள் அவ்வுபாதான வியதிரிக்தமாகவில்லை என் றறியவரினும் அவற்றின் நினைப்பும், உரிய வியவகாரங்களும் சொப்பனம் போல நிச்சந்தேகமாய்ச் சர்வாநுபவ சம்மதம் வரக் கைகூடும்; "பன்னூலின் சித்தாந்த மிதுவிதனைச் சிந்தைசெய் யிற்புரிந்தபுவி யிராநிற்கப் போயொளிக்கும்" என்றபடி இந்த நிச்சயம் நிஷ்காம புண்ணிய புஞ்சபரிபாக சித்த முடைய பாக்யவான்களுக்குச் சுவயமாய் நிகழும். இதுவே பஞ்சகோச வியதிரிக்த ஞாநமாம். ஆத்மா, பஞ்ச கோசங்களுக்கு முக்காலத்தும் அவஸ்தாத்திரயத்திலும்

முறையே அநுகூதம், அநுகூதமின்மையான அன்வயவியதிரேக யுக்தி பூர்வக விசாரபரராய் வியபசாரித்வ மின்மை, வியபசாரித்வ முண்மைகளை யறிந்து பிறவி யாவரணமான பஞ்ச கோசங்கள் பிரதீதியாய் வியவகரிக்க நிற்கினும் ஆத்மாநந்நியமாய்ச் சதாசுகித்திருத்தலே இந்த விசாரத்துக்குப் பலம் என்றறிக.

இனி வருத்துக்கூறியதன் சார மெடுத்துக்காட்டிக்காரக விஷயப் பிரசங்கத்தைச் சிறப்பித்தல்;—இவ்வளவில் சகலருக்கும் போகாயதநமான தூல தேகமும், அதில் உள்ளீடாய் அடங்கிச்சூட்சுமமாய்ப் போக சாதநமாயுள்ள சூட்சும சரீரமுங்கூறப்பட்டன; அவ்விரண்டனுள், (க) இச்சை, துவேஷம், சுகம், துக்கம், ஞாந முதலிய தர்மங்களின் அபிவியக்திக்கு ஆசிரயமான தூல சரீரத்திற்கு அதிஷ்டாந மென்று பெயர் (உ) சூட்சும சரீரத்திற்குள் "நான் கர்த்தா" என்னும் அபிமானமுடைய ஞாந சக்திப் பிரதாந வபஞ்சீகிருத பஞ்ச மகா பூதங்களின் காரியரூபமான அகங்காரத்திற்குக் கர்த்தா என்று பேர், (ங) அப்பூதங்களினின்றும் உற்பந்நமாய்ச் சப்தாதி விஷயங்களின் உபலப்திக்குச் சாதநரூபமான சுரோத்திராதி பஞ்ச ஞாநேந்திரியங்கள், வாக்காதி பஞ்சகருமேந்திரியங்கள், மநம், புத்தி என்னும் பன்னிரண்டிற்குங் கரணம் என்று பெயர், (ச) கிரியாரூபமான பிராணாதிகட்கு ஸ்தாநபேதத்தாலும், கிரியா பேதத்தாலும் வேற்றுமையுள்ளனவாய்ச் சேஷ்டை என்று பெயர், (ரு) * அதிஷ்டாந முதலிய இந்நான்கினிடத்து முறையே அநுக்கிரகம் பண்ணுகிற்கும் பிருதிவி தேவதை-க, உருத்திரன்-க, திக்கு, வாயு, சூரியன், வருணன், அசுவினி-ரு, அக்கினி, இந்

* தூலதேகரூப வதிஷ்டாநத்திற்கு அதிதேவதைபிருதிவி என்பதும், அகங்காரத்திற்கு ருத்திரன் என்பதும் புராணப் பிரசித்தம்.

திரன் உபேந்திரன், மித்திரன், பிரஜாபதி-டு, மகம், புத்தி இரண்டிற்கும் சந்திரன், பிருகஸ்பதி-உ, பிராணுதி ஐந்திற்கும் சத்தியோஜாதன், வாமதேவன், அகோரன், தத்புருஷன், ஈசானன்-டு, ஆகப்பத்தொன்பதும் அதிதேவதைகள்: இங்ஙனம் ஐந்து காரணங்கள் அடங்கிநிற்றல் காண்க

இதற்குத் தாற்பரியம்; சர்வாதிஷ்டானரூப வான்மா இந்த ஆரோபரூப வதிஷ்டானாதிகளிடத்து உபகிதமாயிருத்தலின் அவ்வதிஷ்டானுதி ஐந்தனிடத்தே முக்காரணங்களாலுஞ் செய்யப்பட்ட சர்வ கருமங்களின் காரணத்தன்மை சித்திப்பதாய் அக்கருமங்களின் அநிஷ்ட பயனுன நரகம், திரியக்காதி சரீரங்கள், இஷ்டபயனுன தேவாதி சரீரங்கள், மிசிரபயனுன மநுட சரீரங்கள் அவித்தையினுற் பண்ணப்பட்டு இந்திர ஜாலம் போலப்பிரதீதி மாத்திரத் திருப்பன : அவித்தையினுலுண்டாய் அவித்தையாசிரிதமான வவைகள் ஆன்மாசிரிதமாய் வாஸ்தவமாக வில்லை என்பதை யறியாமல் மூட புருஷர் ஜலத்திற் பிரதிபிம்பித்துச் சல முதலியவற்றைப் பிரகாசிப்பிக்குஞ் சூரியன் அவைகட்கு வேறாக விருப்பினும் அச்சலத்தோடுகூட அச்சூரியனுக்குத்தாதான்மிய பாவ கற்பனை செய்து எப்படிச் சலத்தின் சலனத்தாற் சூரியனைச் சலிப்பவனுகப் பார்க்கின்றனரோ? அப்படி எப்புருஷன் அதிஷ்டானுதிகளின் பிரகாசகமான வசங்காதல் தீய ஆன்மாவிற்கும் அவ்வதிஷ்டானுதிகளோடு தாதான்மிய பாவத்தைக் கற்பனைசெய்து அதிஷ்டானுதிகளின் கருமங்களை அசங்கமாகிய வான்மாவின்கண்ணே ஆரோபணஞ்செய்து "நானே கருமங்களின் கருத்தாவாகிறேன்" என்று சர்வத்திற்குஞ் சாட்சிரூபமான வான்மாவையும் கிரியையின் ஆசிரயரூபமாகப் பார்க்கின்றனனே அம்மித்தியா தரிசியான புருஷன் ஜநநமரணங்களை யடைந்து அநிஷ்டம், இஷ்டம், மிசிரம் என்னுங்கரு

பலன்களையே அநுபவியாநிற்பன்: எப்படிக்கட்டிருஷ்டா கடத்துக் கந்நியமோ அப்படி அதிஷ்டானுதிகளைப்பிரகாசிப்பியாநிற்கும் ஆன்மா அவைகட் கந்நியம்: எப்படிக் கடரூப வுபாதி திருஷ்டியா லன்றி ஆகாசத்தில் நாநாத்துவம், பரிச்சிந்நத்வ மின்றே அப்படி உபாதி திருஷ்டியினு லன்றி ஆத்மாவினிடத்து நாநாத்வம், பரிச்சிந்நத்வம் பார மார்த்தமாக வின்றிப் பிரமாதி ஸ்தம்ப பரியந்தமான சர்வப் பிராணி களிடத்தும் மணிகளிற் சூத்திரம் போல வாத்மா ஏகமாக வுள்ளது; அச்சர்வாத்மரூபமான என்னிடத்தே அவ்வதிஷ்டானுதிகளைந்தும் மாயா கற்பிதங்களாமாதலின சொப்பிரகாச வசங்கசைதந்யனுன என் ஞல் பிரகாசியாநின்ற அவ்வதிஷ்டானுதிகளைந்துமே சர்வ கருமங்க ளின் கருத்தாவாம்: அசங்கனுன நான் ஓர் போதும் அக்கருமங்க ளின் கருத்தாவன்று: பின்னையோ? ஆன்மதேவனுன நான் அதிஷ் டானுதி ஐந்து கர்த்தாக்களுக்கும், அந்த வியாபாரங்களுக்குஞ் சாட்சி ரூபன், கிரியா சத்தியுடைய பிராணரூப வுபாதியினின்றும், ஞாந சத்தியுடைய அந்தக்கரணரூப வுபாதியினின்றும் விடுபட்டவன், சுத் தன், சர்வ காரிய காரண சம்பந்த ரகிதன், கூடஸ்த நித்தியன், சர்வத் வைதரகிதன், ஜநந மரணுதி சர்வ விகாரங்களு மின்மையன் என்னும் இவ்வாருன நமது சொரூபத்தைச் சுருதி ஸ்மிருதிகளும் பிரதிபாத நஞ்செய்கின்றன வென்னு மிவ்விசாரத்தால் எவன் ஆத்மாவைக் கேவ லம் அகர்த்தாவாகவே பார்ப்பவனுய், ஓர் போதும் கருத்தாவாகக் கரு துகின்றிலனே அந்தப் பரமார்த்த தரிசியான புருஷன் கருத்திருத்வா தியபிமாநத்தின் அபாவத்தால் அநிஷ்டம், இஷ்டம், மிசிரம் என் னும் மூவகையான கருமத்தின் பயனை ஓர் போது மடையா னென் பதும், அத்விதீயமான ஆன்மப் பிரதிபாதநத்திலேயே தாற்பரிய மாய்ச் சர்வகருமங்களின் சமாப்தி யுடைய வேதாந்த சாஸ்திரத்தில்

உலகப்பிரசித்தமான கருமத்தின் ஐந்து காரகரூப தூல சூக்கும சரீரங்களைப் பிரதிபாதிப்பது அசங்கமான வான்மாவி னிடத்தில் ஓர்போதும் கரும சம்பந்தமில்லை யென்பது மாக முமுட்சுக்கள் நன்குணர்ந்து முற்கூறிய அதிஷ்டானம், கர்த்தா, கரணம், சேஷ்டை, அதிதேவதைரூபம் என்னும் ஐந்து காரணங்க ளடங்கிய ஆரோபமான ஸ்தூல, சூக்கும சரீரங்களின் றதான்மிய பாவமொழிந்து பரமார்த்த அதிஷ்டானமான தம தாத்ம பாவத்தில் மனோபசமண விசிராந்தி சுகமாய் ரமித்துக் கிருதார்த்தர்க ளாகத்தக்க தென்பதாம்.

[ஞான காலத்தில் வித்துவானுக்கு அந்தப்ரம ஜந்ப வியவகாரம் ஒன்று முளதாவ தில்லை என்னும் வார்த்தை ஸ்ரீசுரேசுராசாரியரும் கூறியிருக்கின்றமை வருமாறு.]

“ காரக வ்யவஹாரோ ஹி ஶுத்தம் வஸ்து நவீக்ஷதே । ஶுத்தவஸ்து நிஷித்தைவ காரகவ்யாவ்ருத்திர்யதா ” ॥

இ-ள் கர்த்தா, கரணமுதலான காரகங்களின் வியவகார முண்டாகச் சுத்தாத்ம வஸ்து பார்க்கப்படுவ தில்லை; சுத்தாத்ம வஸ்துவின் சித்த முண்டாக் அச்சர்வ காரகங்களின் நிவிர்த்தி சித்திப்பதாம். எ-று

[அஞ்ஞானி, ஞானி இருவர்களின் வியவகார வியவஸ்தையைத் திருஷ்டாந்த பூர்வகஞ்சாதிக்கின்றார்.]

“ காகொலூகநிஶாவாயம் ஸம்ஸாரோஜ்ஞாத்மவேதினோ: । யா நிஶா ஸர்வபூதானாமித்யவோசத்ஸ்வயம் ஹரி: ” ॥

இ-ள். எப்படிக் காகபட்சியின் இந்தலோகப் பிரசித்த விராத்திரி உலூகப் பட்சிக்கின்றி லோகப் பிரசித்த விராத்திரியில் நாநாப் பிரகாரமான தின்றல், குடித்தலாதி வியவகாரங்களைச் செய்கின்றதோ? அவ்வுலூக பட்சியின் இந்த லோகப் பிரசித்த பகல்ரூப விரவு காக பட்சிக்கின்றி அப்பகலில் அககாகம் அவ்வியவகாரங்களைச் செய்கின்றதோ அப்படி அஞ்ஞாநி, ஞாநிகளின் சம்சார மனோகதியாம். எ-று.

[கூறிப் போந்த வாயிலாக வியப்பித்தல்.]

7. ജ്ഞാതതത്ത്വസ്യ ലോകോऽയം ജഡോന്മത്തപിശാചവത്। ജ്ഞാതതത്ത്വോऽപി ലോകസ്യ ജഡോന്മത്തപിശാചവത്" ॥

இ-ள்-எப்புருஷனுக்குத் தனது வாஸ்தவ சொரூபத்தை யறிவதாய் இச்சகல பிராணிகளும் ஜடோன் மத்தர் போலத் தோன்ற வருவனவோ அம்மகாத்ம புருஷனை ஜடோன்மத்த பிசாசுகளைப் போலச் சகலபிராணிகளும் பார்ப்பதாக வரும்:—எ-று.

[சுருதிசம்மத அவித்தை வித்தைகளின் வியவஸ்தை இவ்வாறு மெனல்.]

"യത്ര വാ അന്യദിവ സ്യാത്തത്രാന്യോऽന്യത് പശ്യേത്' ॥

"യത്ര ത്വസ്യ സർവമാത്മൈവാഭൂത്തത്കേന കം പശ്യേത്" ॥

இவ்விருசுருதிகளின் குவிந்த பொருள்:—எந்த வவித்தியாகாலத்தில் இவ்வத்விதீய வாத்மா துவைதம் போல வுளதாமோ அந்தவவித்யா காலத்தில் இந்தப் புருஷன் தன்னை அந்நியனுகக் கருதித் தன்னினும் வேருக வேறு பதார்த்தங்களைப் பார்க்கிருன். (க) எவ் வித்தியா காலத்தில் இவ்வித்துவானுக்கு இச்சர்வ ஜகத்தும் தனது ஆத்மரூபமாகவே யுண்டாகுமோ அவ்வித்தியா காலத்தில் இவ்வித்துவான் எந்தக் காரணத்தினுல், எப்பதார்த்தங்களைத் தன்னினும் வேருகப்பார்ப்பன்: பின்னையோ அந்த வித்துவான் தன்னினும் வேருக எப்பதார்த்தங்களையும் பார்ப்பதில்லை (உ) இவ்விரண்டு சுருதிகளுங் கிரமமாக அவித்தை, வித்தைகளின் செயல் இவ்வாறும் என்பதை நன்கு புலப்படுத்துவனவாம்.

வகுத்துக்கூறிவந்த விசாரத்தைத் தொகுத்துப் பலஸகிதஞ் சமாப்திசெய்தல்:—சுத்தப் பிரமத்தை ஆசிரியர் அதிகாரிகட்கு எளிதிற் போதிப்பித்தற்குத் "தூலாருந்ததி நியாய" வாயிலாகவும், "சொரூப, தடஸ்தலட்சண" வாயிலாகவும் பிரதமத்திற் கற்பித்துக்கூறும் அபிந்நா சத்தியானது ஜகத்ஸ்வபாவமான அசத்து ஜட துக்காத்மகங்களை நிவிர்த்தித்துச் சச்சிதானந்தரூபப் பிரமம் அகமெனத் தோற்றுவிக்கும்: பின்னர்க் கற்பித்த பிந்நாசத்தியானது பிரமஸ்வபாவமான சச்சிதாநந்தான்மகங்களை மறைத்து அசத்து ஜட துக்கான்மகங்களான ஜீவேஸ்வர ஜகத்பாவங்களைத் தோற்றுவிக்கும்; ஆகையால் கூறிப்போந்த * 36-தத்துவங்களும், "எல்லையி றிசைகள் காலம் புறம்பெனு மிவற்றிற் கேற்ற, பல்லுருவா யெங் கெவ்வா றெழுந்த தப்படியய்ங்காகும்" "தலைமை யான்மா தன்னிடத்தே தன்னதான வசைவுகளாற், றெல்லைவிலாத விளையாட்டைத் தொடர்பிற் செய்யும் பால

*சுத்தமௌன நிலையில் பிரம்மசப்தமு பின்மைபற்றிக்கூறியதாம்.

ரைப்போல்,'' அழிக்குந் தன்சத்தி யினுற் பின்னழித்துத் தன்பா லமர்ந்திடுமோ, விழிக்கும் பந்த முறுஞ்சத்தி யிதற்குத் தன்பாலெழுந்தா னே, பழிக்கும் பந்த மெப்படியோ பற்றற் றதுவு மப்படியே, யொழிக் குஞ் சத்தி தானேவந் துதயமாகு மிவனுக்கே'' சராசரமா மூல கனைத்து மனரூபத்தாற் ருன்செய்யும் விளையாட்டாஞ் சகமாய்நின் றும், புராதனமா மொருமையினிற் பிரியாதாகும் பூரணசின் மாத்திர மாம் பொருளேசொன்னுய், நிராசையுளத் தவாறியும் பரம்''...."இந்தி யங்களுக்குச் சத்தை யில்லையே யிவற்றின் சத்தை, செந்தழ லயம் போ லுள்ள தேவனு லுள்ள சத்தை, தொந்தமில் பரன்ருன் றன்னிற் சோத்திரந் தன்னைக் கற்பித், தந்தவத் தன்மையுண்டா வளிக்குமவ் வநுவே சித்து'' "தன்னிற்கற் பிதமனத்தை யநுவே சித்துச் சத்து வத்தி னின்று மனத் தன்மை நல்கு, நன்னுற்ற கற்பிதமா நட்டந் தன்னை நாட்டமாந் தன்மைபெற நல்கா நிற்கு, மன்னுற்ற பிராணனுக் குப் பிராணனுகை வாக்குக்கு வாக்காகை மற்று முண்டாய்ப், பன் னுற்ற கற்பிதமாங் கருவி கட்கப் பரிசதுவே சித்தளிக்கும் பரமன் ருனே'' என்னும் இதிகாசம், சுருதிகளின் கருத்துப்படிப் பிரமத் தின் சர்வாத்மபாவ லீலா விநோதத் தாலானவாம். இக்கருத்து மந் தாதிகாரிகளின் புத்தியிலும் எளிதாக ஆரூடமாகும் பொருட்டே அத் தத்துவங்கள் ஒன்றினின்று மொன்றுதித் தொடுங்கிய வெனக்கிரம மாக ஆரோபாபவாதங்கள் கூறி நிறுத்து முறைமை யநுசாரம் வாஸ் தவ நிலையைக் கரதல மணிபோலச் சுருதியும் புலப்படுத்தலாம்; அதி காரிகள் இந்தக் கருத்துட்கொண்டு நிரந்தரம் சுருதிவிசார பரிச்சயஞ் செய்யாதளவில் மூற்குறித்த வுண்மை புத்தியி லாரூடமாகாது; அங் ஙன மாகாதாகவே அஞ்ஞான விசிட்டாத்மபாவ நீங்காது. பின், "ஸோ அகாமயத ஏகோஹம் பெகு ஸ்யாம்'' மாயாவிசிட்ட பரமா

த்மா சிருட்டியாதியில் "நாம் ஒருவமே அநேகமாப் பவிப்போம்" என்னும் இச்சாரூப சங்கற்பத்தால் ஸ்தூல சூக்குமரூப சர்வ ஜகத்தையும் உற்பந்நஞ்செய்தார்; என்னுஞ் சுருதியில் அவித்தியாஜந்ய காமத்திலேயே சர்வ ஜகத்காரணத்வங் குறிப்பித்திருப்பதுபற்றிச் சம்சாரரூப விருட்சத்தி னுற்பத்திக்கு அஞ்ஞான விசிட்டாத்மா க்ஷேத்திரமும் இச்சாரூப காமம் பீஜமுமாயுள்ளன. அவ்வவித்தியா பரிணாமமான சித்தரூப பூமியில் கர்மபலாரம்ப சித்தியின்பொருட்டு இச்சையை உற்பந்நஞ்செய்கிற கருமஜந்ய சம்ஸ்காரமும், இச்சித்தகருமத்தில் நமக்கு இஷ்டவசியஞ் செய்யத்தக்கதாம் என்னும் ஞாநத்தை உற்பந்நஞ்செய்கிற ஞாநஜந்ய சம்ஸ்காரமும் உள்ளன; அந்தச் சம்ஸ்காரவசத்தால் எப்படிப் பலாஷ்டியன் வஜ்ர கவசந்தரித்துச் சிவிகையிலேறிச் சத்துரு பயத்தினின்று மொழிந்து யதேச்சாப்பிரகாரஞ் சஞ்சரிக்கிறானோ அப்படி அஞ்ஞானவிசிட்ட ஜீவாத்மாவும் காமரூப கவசத்தைப் பூண்டுகொண்டு சூக்குமசரீரரூப சிவிகையிலேறி விவேகமாகிய இராஜா, சமதமாதிரூப சதுரங்கசேனைகளின் பயத்தினின்று மொழிந்து எழுவகைப்பிறப்பு, அசு-லட்சமியோநி பேதங்களான ஒன்பதுபொய் வாசலமை யூர்கடோறுஞ் சஞ்சரித்துச் சுழலிலகப்பட்ட திரணம் போன்று நிலையற்றுத் துக்க ஜீவாஞ்செய்கிறான். "ஆசைவன் பாசத் திரளினுற் கட்டுண் டரும்பிணி யீக்கடிக் கணுங்கி, யேசுறுபோகக் கதைகளான் மொத்துண் டிச்சைமுட் கோலினு லுலேந்து, காசுறு கருமச் சேற்றிலே யழுந்திக் கடுஞ்சகக் காட்டிலே சுழன்று, வீசுமா மோசத் தளிர்நிழற் றயிலும் வீரனே சிவனு மெருது" என்றறிசைய, இங்ஙனம் படு மகாகோரரூப சம்சாரவல்லல் இச்சாரூப காமத்தினாலன்றிச் சுவயமே அவித்தை, மனதுகளா லாமாயினலோ, எப்போதும் புலப்படவேண்டும்: சுழுத்தி, சமாதியாதி அவஸ்தை

களிற் புலப்படவில்லை. இவ்வளவால் இச்சாரூபகாமமே சீவனுககுச சம்சார காரணமென நிலைபெறப்பட்டது. "காமஸங்கல்போவிசிகித் ஸா ச்ரத்தா அச்ரத்தா" என்னும் சுருதியும், "காத லாற்ற விக் காமம் புலன்களே, வாயி லாப்புதந் துள்ள மயக்குவ, தாத லாற்புல னேர்ந்து மடக்கியே, யேதி லாங்கடுங் காம மிருக்குவாய்" விஷயப்பிரீதியின லதிகரித்த வநேக வனர்த்தவேதுவான காமமானது இந்திரியம், மனம், புத்திகளே வழியாக வுட்புகுந்து ஞானங்களை மறைத்துத் தேகாபிமானியை நாநாப் பிரகாரமான மோகங்களை யடையப் பண்ணுகிறது என்னும் ஸ்மிருதியும். மனோ விருத்திகளுக்குள் இச்சாரூப காமத்தையே முந்திச்சொல்லி அதனனர்த்த பரம்பரையையுங் குறிப்பிக்கிறனது.

"நஹவைஸ சரீரஸ்யஸ்த: ப்ரியா அப்ரியயோ ரபஹதிரஸ்தி" எந்தஎந்தச் சரீரமுடையவர்களுக்குஞ் சுகதுக்கநிவிர்த்தி யுண்டாகிறதில்லை, — "யதேஹ கர்மசிதோ லோக: க்ஷீயதே ஏவ மேவாமுத்ர புண்ய சிதோ லோக: க்ஷீயதே" — சரீர வியாபார ரூபகர்மத்தால் இவ்வுலகில் கிருஷாதி பதார்த்தங்கள் உண்டுபண்ணப் பட்டனவாதலால் சிலகாலத்தில் க்ஷயத்தை யடைவனபோலச் சுவர்க்காதிப் பிரமலோகாந்த சர்வவுலகங்களும் ஜீவர்களின் புண்யவுபாசனு கருமத்தினல் நிலைபெற்றிருப்பன வாதலால் சிலகாலத்தில் க்ஷயமடைவனவாம்,—"நசுகம் ஸார்வ பௌமஸ்யா வித்யதே நவிடௌஜஸ: ப்ரஹ்மணோ நசுகம் யஸ்யாத் பும்ஸ: காம விவர்ஜநாத்"—விஷயஜந்ய சுகேச்சாரூப காமமே ஆத்ம சாட்சாத்காரத்தில் சகலருக்கும் ப்ரதிபந்தமானதால் சர்வ காமாபாவத்தால் நிஷ்காம புருடனுக் குண்டான சுகம் சக்கிரவர்த்தி ராஜா, இந்திரன், பிரமா முதலானவர்களுக்குங் கிடைக்கிறதில்லை — என்பனவாதியாஞ் சுருதிகளின் சித்தாந்தமும்

இவ்வளவாகக் குவிந்திருப்பனதை அந்வய வியதிரேக யுக்தியாலும் யூகித்துக் காமத்தியாகத்தில் அதிகாரிகள் முயல்க. "மொழிந்த பூமி யிவை யேழு, மயல்தீர்நிலையாற் பரிசயிக்கில் வருத்தஞ் சிறிதும் வாரா தே" என்றபடி இவ்விச்சாத் தியாகம ஞானசப்த பூமியினை யநுசரித் துநின்று "நிலைமை யென்னு முயர்கணையா னிறைந்த வலியால் விரோ தத்தாற், றொலைவில் பொருளிபா வையுமாகித் துன்னி யொன்று மிச் சைதனை, யுலைவி லெல்லா வகையாலு மியோகி வெல்வ துத்தமமாம்" என்னும் வகை முயல்கை அநாயாசமாம்.

இவ்வநாயாச முயற்சியின் சாத்திய பாவத்தால், "ஒரொளி விளங் குகில துதையுல வாத, சிரொளியில் வேறுசில தேவர்திகழ் வாரோ பார்வெளியு மெப்பொருள்க ளுந்திசைகள் பத்தும், பேரொளி பெ றத்திகழ் பரப்பிரம மேயாம்" "ஆப தேயத்தி லம்பெரும் பூகமு மில் லைச், சேய குன்றில்லை வநமில்லைத் தீர்த்தங்க ளில்லைத், தூய தே வரோ முதலிய சொல்லுமி ரில்லை, நாய கன்பெருஞ் சுடரொனு யொரு வனே யன்னும்" என்னுஞ் சுருதிபாகிவளின் சித்தாந்தப்படி திடநிச் சப முடையராய், "உண்டான சிருட்டிதா னன்றுப்பார்க்கி லொழிந்து போ முறுதியா யுணரா வாற்றுற், கண்டார்கள் கயிற்றிலே பாம்பென் பார்போற் காட்சியுமு கலைநூலாற் கற்றோர் சார்வாற், றண்டாத பரி சயத்தாற் சிலகா லத்திற் றுவுமன நின்மலமாய்ச் சசிபோ னிற்கிற், பண்டாய வநுபூதி மயமாய்த் தானே பாக்கியவான் களுக்கிந்தப் பார் வை தோன்றும்" என்னுமவரை வாசிட்டத்தில் கும்பமுனி, சிகித்து வசன் இருவராலுஞ் செய்யப்பட்டுள்ள பரஸ்பர காரண விசாராநுசந் தானராய், "மதமா மோக மையன் முதன் மனத்தில்" ஜீவாத்மாவைப் பிணித்த கயிறுகளாகையாலும், "உகப்புறு மின்பத்தாலும் பொருண் மெய்யாலு முள்ளுறுபல் பொருணினைவே யுளத்தின் மேனி" யா

கையாலும், "ஆற்றுமிவ்வுடம் பிறப்பாமைம்புலன், மாற்றுமைம்புல னிற்பா மாமனம், போற்றும் புத்திய திற்பரம் புத்தியிற், றேற்று நின்றது காண்பது தொல்பரம்" "மேலாயுள்ள விப்பொருளை மெய்யா யறிந்து பொய்மாய, மாலாய் மயங்கு மனத்தினையு மடக்கி யந்த மனங் கலக்குஞ், சாலா யுள்ள காமத்தைக் காப்பாய்" என்றபகவத்வாக்கியத்தை யுட்கொண்டு அம்மனமாகிற சத்துருவை "எதுபயனாக நீற்கென் னித்தண்ட மியான் செய்கின்றேன், முதுவிசா ரத்தின் மிக்க முதன்மை யோர்க் குளமொன் றில்லை, யதிகமா முடிவில் சித்துக் கற்பமா நிலை யென் னெஞ்சில், விதியதா யுளதோ யானை வில்வக்காய் புகுதலுண்டோ" என்னுஞ்சாரபூத வுபாயத்தால் ஜயிக்கு மாற்றலுடைமை அதிகாரிகட் கெளிதாகச் சித்திப்பனவாம்.

அம்மனோஜயமுண்டாகவே, "சுத்தமாஞ் சத்துவமே யுண்மை யாகுந் துகளிருள்போ னன்மனமென் சொல்லும் போம்போம்" போகவே, "வீடிலா வினைகள் கலைகண்மூ வைந்தாம் விடயவிந் திய வதி பதிக, ளுங்கே தனனுஞ் சீவன்மற் றனைத்து நாதனு ராலய நண்ணிப், பாடு பேருருவ மொன்று மற்றந்தப் பரமனே யாய்விடும் பார்மே, லோடுமா றெல்லா முத்திபுக் கொன்று யுருவுபே ரொழியுமா போல" ஆகவே, சித்தபூமியிலிருப்பதாய் முற்கூறிய கருமஜன்ய ஞானஜன்ய சம்ஸ்காரங்க ளிரண்டுமின்றி, "காசு லென்னுங் கட்டறுத்துக் காய மென்னுங் கூடகன்று, சாதன் மேவு மகங்காரமாந் தனிப்புள் ளெங்கே பறந்துளதோ" என்னும் அநுபூதியால் அதிகாரிகள் இயல்பாகச் சித்தித்த தமது மனோவாசாமகோசர மௌனநிலையான சுத்தப் பிரமாவசேஷராய் விடுவார்கள். இங்ஙனம் பலசகிதங் கூறப்பட்ட விவேகத்தை விடுத்து அத்துவைத கிரந்தங்களில் சம்சாரபரிகாரார்த்தம்

வேறும் பலசகித வுபாயங்களிருந்து மகாகோரரூப சம்சாரத்தைக் கடக்க எவரும் எம்முயற்சியினு நிற்பாராயினும் நலமே.

வானின் மேககு ழாங்கள்கோடி யெழுந்து விம்மி முழக்கினும், வான தற்குவி காரமேது மிலாத வாறது போலவே. ஞான நற்சுடராயநற்பொரு ளுனெ னுந்திட நல்கினு, லூன மில்லை பிறப்பு மில்லை யுடம்பு தன்றெழில் செய்யுமே.

எத்தலமு மெத்திசையு மெள்ளினிடத் தெண்ணெயென விலங்கி நாளும், மத்தமதி யர்க்கொளித்து மலமகன்ற மனத்தர்கர மணியாய் நிற்கும், சுத்தவதிட் டானபர சுகவடிவைத் தனையடைந்தோர் சுகிப்ப நல்கும், சுத்தவதிட் டானுதி பஞ்சகா ரகவிளக்கத் தொன் றுான் முற்றும்.

எவ்வடிவி லிவ்வுலக மெழிற்கிளிஞ்சி ரசதமென விலங்கு நாளும், எவ்வடிவிற் சுரருலக முதற்பலவும் பேய்த்தேர்போ லிலங்கித் தோன்றும், எவ்வடிவின் சுகத்துளியா லிந்திரனு தியர்சுகத்தி லினிது வாழ்வர், அவ்வடிவாம் பொனம்பலவ னருண்மலர்ச்சே வடிகணம தகத்துட் கொள்வாம்.

சுபம்

ஸ்ரீ அதிஷ்டானுதி பஞ்சகாரக விவேகம்.

முற்றும்.

———()———

உ

# உபாசனாவிளக்கம்.

## * சகுணோபாசனை,

---

### ஸ்ரீகணபதிஸ்துதி

முக்கணிறை தருகரியை முன்னடத்திப் பின்னதன்றாட்
பக்கமறைந் தேகுநர்வெம் பாசவிகா சமுற
மிக்கவமர் விளைத்திளையா வீரரெனப் பூரணவூர்ப்
புக்கிணையில் பராநந்தப் பூவையையு மேவுவரால்.

அங்க ஞானன னம்ப ராம்புய மாறு மாமுக வானவன்
துங்க நாண்மல ரன்னவர்ப் பெறு தோகை சீரடி தொல்பவ
வங்க நேர்நட ராஜன் வாரிசம் மாது பாதிய வாதி நீத்
திங்க ணேவரு சங்க ராரிய னேர்பதத் துணையேத்துவாம்.

[சைவ வைஷ்ணவ சகுணரூபயோகினிகளுடைய. சகாயம் அந்தியம் வரை வேண்டுமென்பதைச் சூசிப்பிக்கும், பிரபோதசந்திரோதயத்திலுள்ள அஞ்ஞானுடைய வாய் மொழி வருமாறு-]

### கலி

இவர்ந்த நல்விவேகன் பின்னை யிளையருந்தாயுந் தானுந்
தவம்புரிகானத் தெய்தச்சகவெந்தை யாளுங்காலை
யுவந்தமேயோகி நிகடம்மாலுப நிடமாதைவேட்டு
சிவந்தபல் படைஞரோடு நெருங்கி வந்தமரினேற்றான்.

அருட்கிளர் பகைஞரீடமம்புவிமுழுது மோங்கிப்
பொருக்கெனமடர்ந்த் வித்யா புரத்தையும் பொடி நீறாக

---

* கூறியகாரண விவேகம், சகுணோபாசனையாற் சித்திப்பதாதலின், பின்னாச் சேர்க்கப்பட்டது.

நெருக்கினரினியுன் சேழ்வனெடும் பிணிப்பினையு நீக்கப்
பிரிக்துநராகி நின்ருருத்றதிப் பெற்றி யென்ருன்.

[ஆசிரியர் சீடனுக்குத் தேகம், தேகி யிரண்டி னிலக்கணங்
கூறித் தேகியைப் பிரித்து ஆறதார யோகரீதியாய்ச் காண்பி
விக்கும் பொருட்டாரம்பித்து முன்னர் அவிவேகி,
விவேகிகளின் நிர்ணயத்தைக் கூறல்.]

பொய்யருடம் பறியாதவருண்மை பொசித்து முறங்குவது
மையமருங்கணினுருட னூடல் வளர்ப்பதுந் தானெனுமே
மெய்யருடம் பறிவானிடவுண்மை விளம்பிய முத்தொழிலுஞ்
செய்யுறவன்னொருவன் பணியெல்லாஞ் சிவன் செயலென்றிடுமே. (க)

[தனது செயலேயெனும் அவிவேகி பட்சத்தை மறப்பான்
3-கவிகளால் விவேகி பட்சத்தையே தெளிவித்தல்.]

சிவன் செயலல்லது வேறிலையே தெனில் தெளியவுரைப்பதுகே
ளிவன் செவியாய் வழிமூக்கெனும் வாசலிருந்திடுமைவர்களு
மவரவர் வீட்டரசன் கொலுமேவிடிலப் பொழுதிவ்வுடலங்
கவனமறச்சவமாகி யுறங்குங் கணக்கறிவாரிலையே. (உ)

காணியெனும் மனைமண்ணை மறந்து காதலிதன்னுசை
யாணியெனும் மகனுதரவும் பொன்னுசையுமே மறந்து
பேணியே யிட்டு வளர்த்தவுடம்பும் பெருமையுமே மறந்து
நாணியே தூங்கிடும் போதிவனெங்கே நாட்டமுமெங்கேயோ. (ங)

அருகிலுறங்கிய மங்கை யெழுந்தேய கன்றிடும் போதள்வித்
திருகியழைக்கவுமேநினைவுண்டோ சேர்ந்துகலந்தவனுர்

பருவமற்றிந் திடுமோதலினு லநுபவிப்பவனுண்பவனு
மொருவனுமல்லது வேறில்லை யென்றுறு முத்தமருண்மையிதே.(ச)

[சீடபாவத்தைபடைந்த விவேகியின் செயலே
தேனினி? கூறல்]

நன்று நீ கேட்கவும் வேண்டியதல்லவோ நியாயமுரைப்பதுகேள்
மன்றுலகத்தினிலே தொழிலுத்தமமாகிய தெதுவுண்டோ
சன்று செய்தாத்துமாவின் பசியகற்றுவர்கண்டன கேட்டனவும்
விண்டுரையாரெழுத்தெட்டையு நெஞ்சினில் விளம்பிடுவாரறியே.(ரு)

[இனி ஆசிரியர் சீடனுக்கு இத்தேகத்தினுள்ளிருக்கும்
ஆதாரங்களின் குறி, குணங்களைக்காண்பிக்குமாறு;—க-வது,
மூலாதாரம்.]

குய்யமுமென்பதுமேல் குதங்கீழ்நடுகூறுவர் மூலமதில்
துய்யவட்டமேல் சக்கரநாலிதழ் தூரிய சக்கரத்துள்
பையவொவ்வெழுத்தோங்காரகம் பமாய்ப்பாரேழுமுட்டி நிற்கு
மெய்யவட்டத்திருபுறமவ்வு முவ்வுமேகலையாயிடுமே. (சா)

மூலவம் பரமெனுமேகணபதியெனு முச்சுடராமெனுமே
சாலமுமலமெனும் பேர்சத்திவல்லபை தன் கணவன்னிறமுங்
கோலமாணிக்கமம் பமெனச்சுருபமுங் குணநிறந்தாமெனுமே
ஞாலமெலாஞ்சொலுமே வீரிவாகாச நடுவணையாமெனுமே. (எ)

[உ-வது சுவாதிட்டானம்.]

இதுக்குமேலு பஸ்தமென்பதுஞ் சுவாதிஷ்டானமிதிற் சதுர்கோண மெனு
மதுக்குணவ்வெழுத்து மேலிருமூன்றட்சரமயன் சத்திசரஸ்

வதிக்குப் பொன்னிறங்குணமே கடினமெனும் பாகனேகம் விரிவு
விதிக்குமன் சுருபமென்றேயுரை நான்முகன் வீடதுகாண்மகனே. (அ)

[3-வது,-மணிபூரகம்.]

நாபியிற்பூரகமேபிறை கோணமேனவிலுமட்சரம்பத்து
தாவுமவ்வெழுத்துமாலட்சுமி நாயகன்றன்னிறமேபளிங்கு
மேவியமாயனார் சுருபநிராதாரம்விரிவுகண்டுண்மகிழ்ந்து
சேவிமாணுக்கனேகேள்திருமாலெனுந்தெரிசனையாகுவையே. (கூ)

[4-வது,-அநாகதம்.]

மால்பதிமேலிருதயமநாகதமருவியமுக்கோணமு
மேல்பனிரண்டெனுமட்சரஞ்சிவ்வையும்விதித்திடுமுருத்திரனார்
போலுமாகாசமுமாதவன்ருத்திரிபுகல்வதுசெம்புநிறஞ்
சால்கடினஞ்சுரூபம்மழலாமெனுந்தன்விரிவடவாக்கினி. (க0)

[5.-வது,-விசுத்தி.]

இருதயமோர்நடுவணைகுறிகண்டுகொளிதுக்குமேற்கண்டமட்டும்
பெருமைகொள்விசுத்தியிலேயறுகோணம்பெற்றவட்சரமீரெட்டா
மரிதெனுமாமயேசுரன்மயேசுவரியெனுமவர்நிறமேகறுப்பு
சுரூபநாதமெனுமேவிரிவாயுவாஞ்சொல்குணமேசலிப்பாம். (கக)

[6-வது,-ஆக்கினை.]

புருவமத்திய மதிலாக்கினை வட்டமே பொருந்திய மூன்றட்சரமுள்
மொருவர்கண்டறிகில ரவ்வீடு சதாசிவனுருக்கொளுமனோன்மணியாக
பெருமையாரறிகுவர் தன்னிறம் புகையெனும் பேரண்டமேவிரி
வருபதேவதை சுருபங்களம்பரமெனு மவர்குண நிரந்தரமே. (கஉ)

[ஆறாதாரத்தினுள்ளு நடுவணையிவை யெனல்.]

நிரந்தரமானவர் தம்பதிநடுவணை நேருச்சி நடுவணையாம்
வரந்தரும் ருத்திரனுர்பதி நடுவணைமாதவர் யோகியர்க
ளுரம்பெறு மூலவம்பர மெனு நடுவணையிவையுளவும் முணர்ந்
துரம்பெறு மாதாரமாறினிற் சொல்லிய வொப்பனைகண்டுகொள்ளே.

[மநுடதேகதாரிகள் அவசியமறியத்தக்கனவிவையெனல்.]

ஆதாரமாறுமும்மண்டல மென்பதுமைம்பத்தோ ரட்சரமும்
பூதாதியாற்குண மேவரவானதும் பொருந்திய சுரூபநிறஞ்
சூதானநடுவணை நாலுமேற் கோணங்கடுலங்கிய சத்திமுத
லீதாலுமேயறிந்தே வாழாமாந்தருக்கெப்படியென்சொலுவேன்.(கஅ)

அவ்வுடனுவ்வு மோங்காரமுமுச்சுடராகிய கம்பமெனு
நவ்வுட னஞ்செழுத் தாறையுங்காட்டினை நான்மறை காணரிய
உவ்வுடனே சிவனாடிமுடிகளு மொருமூன்று கண்ணுளது
இவ்வளவும் மறிந்தே வாழாமாந்தருக் கெப்படி யென்சொலுவேன்.

[இவ்வாறு கிருபை கூர்ந்தருளிய குருவைவணங்கி ஊன்மய
மான இத்தேகத்தில் எழுத்தாறையுங் காட்டினபடி
உவ்வுடனவ்வுமுடியடிகள் இவற்றையுங்காண்
பித்தளருல் வேண்டுமெனச் சீடன் வினவக் குரு கூறல்]

கரங்குவித்தே தொழுதான்முக நோக்கியே காரணமானகுரு
விரங்கிமாணுக்கனேகேள் முடியானது மீரேழுலகமெலா
முரம்படத்தாங்கிய நவ்வெழுத்தின் கீழொளிமேற் காணுதுபா
ரான்திருமுடியதவ்வு மூவ்வுமாயங்ஙனே முச்சுடராம். (கசு)

மூன்றுகண்ணுமதுவே யதுகண்டுகொள் மூவுலகூடுருவித்
தோன்றுமேல்காண்கி லீராடியே நிற்பது தோற்றிடுங்காணரிதாய்

நீண்டபென் னிருகாதவழியோடி மீண்டிடு நிகரிலாச்சுடரடிகாண்
வேண்டிடுவாயிருகால் விரித்தோங்கிய விதந்தலை கீழடிமேல். (கஎ)

திருவடியானதுமேல் வெளியூடாடிச் சிரசுகீழாகி நின்
றொருவனுமே பொம்மலாடிய சூத்திரமுத்தமனே யறிந்தாய்க்
குருவையசங்கிதமாக மறந்திடுகுணக் கேடர்தாமறியார்
கருவசனம்மிதுவே தெரிவித்தனங்கண்டு கொள்வாயென்றார். (கஅ)

[ஆசிரியர்மேலுங்கிருபையினால் கால்தலைமாறியாடிடங்காட்டி
எண்சாண்தேகத்தில் உபசாந்தஸ்தலமிஃதேனல் ]

சாகாதகாலுமெங்கே யெனின்முன்சொன்ன தலையிருந்திடமெனுமே
வேகாதகாலுமெங்கே யெனின்முன்சொன்னமெல்லடிதாமெனுமே
நோகாவிடமெங்கேயெண்சாணுக்குள்ளூறநொந்திடமெங்ஙனென்னில்
வாகாகவேயஃறுகோணத்திரிகோணங்களடியல்லநுனியெனுமே. (கக)

மாறியாடிய வீசனார்செயன் மைந்தனே யுனக்கேவகுத்து நான்
கூறிநாள்வரை பெற்றபோதங்கு மட்டுமேயெல்லாந் தூலமாதுமே
வேறுசொல்வது சூட்சமானதில் விதிப்பதிபசுபாசமுப்பொருள்
வாறுதான்சொலவேணுமென்றிடின்மைந்தனேயுனக்கேபகருவாம்.

அகாரமேசிவமா முகாரமுமப்பனே யுயிராகுமென்றிரு
ஒகாரமென்பது பஞ்சமாமுடலுயிர்ப் பொருளெனு முணர்ந்தறிந்தனே
நகாரமென்பது பஞ்சறிவதாய் நடத்திவைப்பது மூட்டிவைப்பது
விகாரமற்றவர் கண்டிருப்பது விழியுமே முடியடியுமூலமாம். (உக)

படைத்தளித்திடுஞ் சடமிலாக் குருபரனை வாழ்சீவர் தானறிகிலா
ருடலினிற்கருத்தரிப்பதுபஞ்சறிவொன்றையொன்றறியாதுகாணுமே
கடத்திவைப்பது மூட்டிவைப்பது நற்புவிதனி லுறக்கிவைப்பதுந்
திடக்குருபரனன்றி வேறிலை சிறுவனே யொளியாமற் செப்பிநேனும்.

கழல்பணி சீஷனுசான் கருத்துமொன் றில்லையாகில்
விழற்கிறை நீரோடொக்கு மெய்க்குரு சொன்னவுண்மை
சுழித்தலைத்துரும்புபோலச் சுற்றுவான் பிறவிதோறு
மழற்படுத்திடு மூச்சிட்டத் தருமையா ரறியவல்லார். (உரு)

சீறியபன்னிரண்டிற் றிரண்டிடு மூச்சிதன்னின்
மீறியதாமரைக்குள் விளைந்தவுச்சிட்டந்தன்னை
யூறியேழுலகம் பாயுமுண்மை சொல்லாதவாசான்
தேறியகுருவுமல்லத் தெளிவிலானென்று சொல்லே. (உச)

சற்குருமுகமலர்ந்து தான் பணிந்தானை நோக்கி
நற்குணமுடைய மைந்தா நாமுமுன் றாலசூட்சம்
விற்பனமாகச் சொன்னோமினியதிற் சூட்சந்தன்னி
லுற்பனஞ்சொன்னோமாகி லுண்மையாய் நம்புவாயோ

நவ்வெனுஞ்செழுத்து மல்ல நல்லது பொல்லாதல்ல
வுவ்வெனுமெழுத்தேயல்ல வுலகெலாந்தாங்கிநின்ற
வொவ்வெனுமெழுத்தேயல்ல வுடலுயிரிரண்டுமான
அவ்வெனுமெழுத்தேயாண்டவரும் பொருணம்புவாயோ. (உரு)

பேலுமெழுலோகமறி மீன்பிறையின் லோகம்
போலுமருக்கன் மழைபொழியுமொருலோகங்
காலுமடிக்கின்றதின் கீழ்காசினியோர்லோக
நாலுமொருமூன்று புவிநாமுறை செய்தோமே. (உசா)

கீழுமெழுலோகமறி கெணபதியார் லோகம்
வாழுமையுருத்திரன் மயேசுரனுர் லோகஞ்
சூழுமயனுர்பதி மெய்சொர்க்கலோகத்தோ
டேழுதகியேழுடனீரேழுலகமாமே. (உஎ)

உலகுபதினாலு நடுவூமைபராமாகுந்
தலமுமறியவ்வு மூவ்வுந்தானதவிந்து
குலமுமறந்தாயிருவர் குடியிருப்புமேலே
வலமுமிடமாக வெழுவாசலறிவீரே. (உஅ)

நாகமெனநின்றது தான் ஞாயிறுமாமென்று
மாதவனேடாடும் விந்து மானவனே சந்திரன்
நீதமுள்ள வீடுமெறிநீயுமயங்காதே
வேதமறியாத பரவீடதின் மேலாக. (உகூ)

தூரமல்லவே யொருசாண் சூரியனர் வீடு
ஓரமருகாக விந்தினூரறி மாணுக்கர்
சாரமறிந்தாயுமினி தானுமண்டலங்க
ளாருமறியார்கணடுவக்கினி மண்டலமாம். (ங0)

ஆகுமதின் மேற்பருவமப்புறமாதித்த
னேகுமண்டலமதின் மேலெழுந்த பிரகாசம்
வாகுசந்திரமண்டலமென் மாமறைகள் சொல்லும்
பாகுமறிந்தாயுமினிப்பகருமாதியந்தம். (ஙக)

சந்திரமண்டலமு மாதித்தன் பதியுங்கீழா
யந்திபகலற்ற விடமாகுமெனலாகு
முந்தியுரைத்[illegible] நடுவூமைதலையாகச்
சிந்தையடிசந்திரனர் தேசமெனலாமே. (ஙஉ)

இரவுபகலற்ற விடமெங்களை யெண்ணாதே
யரவுவெளிப்பட்டதின் மேலாக்கினையின் கீழாய்ப்
பிரிவுமறக்கண்டுகொணீ புதுமையினியுண்டு
வரவுபோக்குமாக நிற்கும் வாசலறிவீரே. (ஙங)

சூரியனீராறுகலை சோமன்பதினறு
காரியத்தினுலிருவர் காரணமுமெத்தப்
பாரிர்பனிரண்டு வெளியாயு மதின் பின்னுய்ச்
சீரியசந்திரனினுலு சேருங்கதிர் வீட்டில். (௩௪)

வீட்டிலதுவேயிருக்க மீளும் பனிரண்டிற்
கூட்டிலெட்டு முட்புகுதக்கொய்து நாலுபாழ்போங்
காட்டில்வெறும்பாழுநீத்தங்கலை கணுலுமேலே
நாட்டிலூமைபர மிருந்தநாசி நடுக்கட்டும். (௩௫)

நாசிநடுக்கட்டி நிற்க நாலிரண்டு முள்ளே
வாசியெனவே நடந்து வாரதுவைக்கண்டு
நேசமுடன் சூரியனினின்றகலை நான்கு
மீசன்மதிவீடுறையு மெட்டிலொரு நான்கும். (௩௬)

ஓடிவந்து சூரியனிலுறையுமொரு நான்கு
தேடிவந்து சந்திரனிற் சேருமதினன்கு
கூடிவந்து மூலமதிற் கொள்ளுமதினன்கு
பாடிவந்து சந்திரனிற் பதியுமெனலாமே. (௩௭)

பதியுமதிலேபிறந்துபாயுமொரு நான்கு
மதியும் விறிசாகவோடி வாரதுவைக்கண்டு
கதிரிலொருநான்கு கலைகாணுமதின் முன்னுய்
யதிரநடந்தெண்கலையுமாக வெளிப்படுமுன். (௩௮)

கட்டிநின்ற நான்குமொருகலைகள் பதினறு
யொட்டிவிளை யாடுவதுரைத்து முடியாது
தொட்டுவது கட்டிநிற்குஞ் சூட்சமதி சூட்சங்
கிட்டுமதுவேயரிது கிடைப்பது மெல்லார்க்கே. (௩௯

உனக்கு லபித்திட்டதுவு முள்ளபடியாகு
லெனக்குமொழிந்தேயுரைக்கவேதோதெரியாது
தனக்குள்ளே தானறிந்து தான் மகிழ்ந்த வாழ்வே
மனக்கருத்திலைறிந்து வைத்திருப்பாய்பதனம். (௬0)

தோச்சதயிர்க்குண்டமிதப்புத் தோன்றுவதுபோல
வாச்சவுடற்குண் மிதப்புமானவரீரான
மேச்சுடையவன்னொருவன் பேசாதவனென்று
பாச்சலிற்கண்டாற்றெரியும் பதனமப்பாபதனம். (௬௧)

[இவ்வாறு கிருபையுற்றுத் தெளிவுறக் கூறிய ஆசாரியரிடம்பரிவு கூர்ந்து சீடன் மேற்றனது மனத்தெளிவு கூறல்]

செவிக்கின்பமுறக் குருவுமருளிச்செய்த சேதி கருத்து கந்தனண்பன்கேட்டெழுந்து, புவிக்குண் மூவகைத்தோற்றம் பிறவி தோறும் போய்ப் பிறந்து பிறந்திறந்தலுக்கு நாயேன், றவிக்குமிருவினைப் பிறவியகற்றி ஞானந்தனைப் புகட்டித்தலைவனையுங் காட்டி வைத்தாய் பலித்த செயலார்க்கு லபித்திடுமையாவே பகர்ந்திடுவேனெனத் தெளிவு கேட்டு மகிழ்ந்திடவே. (௬௨)

திருத்தி நடைக்குடுவையிது சோறு கொல்லி தோற்பதுமை மலபாண்டஞ் சூட்சக்காற்றை, யிருத்தியொருவன் கயிறுமாகப் பூட்டி யிவ்வுடலைப் பட்டமெனப் பறக்கவிட்டுக், கருத்திலொளி விருந்தரவமாட்டிவைக்குங் கணக்கறிந்து குருபரனைக்காணப்பெற்ற, வருத்தமெத்தவுண்டு சொல்ல வென்னை யன்றி மற்றொருவன் கண்டடியேன் கும்பிட்டேனே, (௬௩)

பறக்க விட்டு (விதிசிடேத வழியில்) விரைவிற் செலுத்தி—

வஞ்சனை பொய் சூது கபடுகள் படைத்த மத்தளமோரிருகா லுண்டான பாண்டம், வெஞ்சமுடனிறுமாப்பும் வீம்பும் பெற்றவி டக்கிலிரு சங்கூது தாரையாண்டி, நெஞ்சினரமனை மயிர்ப்பாலத் துக் கப்பாலெனருப்பாறு தாண்டியுட் புகுந்த நேர்மை, கொஞ்சமல்ல வெ ன்னையன்றி மௌனஞானக்குருபரனைக் கண்டடியேன் கும்பிட் டேனே, (சச)

விடக்கு-ஊன்—

நரம் பெலும்பு தோன் மயிர் நற்சதைப்பைக்குள்ளே நடுத்தெ ருவெண்காத மிடநாற் சாதங்காண், புரம் பெரியபட்டணத்தைத் தேடிப் போகிற் புருவமதின் முக்கோணவாசலேழில், வரமளிக்கும் பெருவாசலிரண்டுக்குள்ளாய் வந்துபுகுந்தெனது தும்பிக்கையோ டைந்து, கரம்படைத்த பரம்வாவென்றழைக்கப் பெற்றேன் கண்டடி யேன் றினந்தினமுங் கும்பிட்டேனே. (சரு)

காயமெனும் பட்டணத்துணடு வீதிக்குள் கனக்கம்பநுனியி லொரு தீக்கொம்புள்ளான்,மேயவதின் மேலொருவன்ருமேறி வெளி குதிக்கப் பன்னிரண்டு-காலுங்கண்டேன், மாயவுடலினிப் பிறவாவர மும் பெற்றேன், வயிறு பசித்தாலுண்ணக்கனியும் பெற்றேன், றூய கயிலாயமலைவாழ்வு பெற்றேன் றுணைருருவுமாமெனவே தெளி வுற்றேனே. (சசு)

நானுமவன்றனக் குளிருந்தேனெனக்குணடுவி லிருந்தவன் றன் செயலல்லா லொன்று, தானுமில்லையாகிலு நானில்லேனுகிற் றனித்த வராற்படைத்து மூடிபோகாதையா, வானுமெழுந்தசைந் தோட வானீர்ச்சென்று மாசற்றவெளியை வெளிதாங்கக்கண்டேன்

தேனின் மலர்வாசனைபோலசபைபோலச் செடத்தினுள்ளே வான் கண்டு தெளிவுற்றேனே. (சஎ)

உண்டுடுத்துப் பூசிமுடித்தேனுனென்றேயுறங்கியெழுந்திருந் தகுறையாருமதைய, தின்றுகளித்துறங்கியொன்றைக்கொன்று தின்னத்திருடனவன்றேடியதிப்போது கண்டேன், வின்றொருவர்க்கிவ் வாறென்றுரைசெய்வேனோ விளம்பிலெவரறி வாரோவொருவருக் குந்தோற்ற, தென்ற குருவடியில் வீழ்ந்தான் மாணுக்கனியம்பிய சொற்றெளிவுகண்டுமேது சொல்வார். (சஅ)

வின்று—விண்டு—

[ஆசிரியர் சீடனுக்குத் தேகத்தினின்றுந் தேகியை ஆறாதார யோகரீதியாய்த் தெளிவித்தவாறுண்மையானவமைதிகூறல்,]

அடக்கமுரைத்திடுவென் மொழியப்பனே கேளன்னைபிதா குருதெய்வமானுலுநாமே, சடத்தையறிவித்ததினாற்றாயதா முன்றன்னையறிவித்ததினாற்றந்தையாகும், மிடற்றிலரும்பாத்தையறிவிக்க வேண்டிமெய்க்குருவுமானபடிவிதங்கண்டீரே, திடப்படுவோண் பெண்ணென்று கண்டபேறு செப்பியதாலியா முனக்குத்தெய்வமாமே. (சகூ)

[இதுகாறும்வகுத்துக் கூறியதைத் தொகுத்துக்கூறல்.]

[தூல பஞ்சாக்கரம்.]

"நவ்விரண்டு காலதாய் நவின்ற மவ்வயிறதாச்
சிவ்விரண்டு தோளதாய்ச் சிறந்த வவ்வு வாயதாய்
யவ்விரண்டு கண்ணதா யமைந்து நின்ற காரணஞ்
செவ்வியொத்து நின்றமெத சிவாய மைந்தெழுத்துமே."

சிவவாக்கியர்.

"இல்லக விளக்கது விருள்கெடுப்பது
சொல்லக விளக்கது சோதி யுள்ளது"

பல்லக விளக்கது பலருங் காண்பது
நல்லக விளக்கது நமச்சி வாயவே" திருநாவுக்கரசு.

தூல பஞ்சாக்கரத்தால் இத்தூலதேகந் தோன்றிய தென்பதாம்.

[சூக்ம பஞ்சாட்சரம்.]

மூலாதாராதி ஆறு வீடுகளிலே 1-ல் கணபதி, வல்லபை. 2-ல் பிரமா, சரஸ்வதி. 3-ல் மகாவிஷ்ணு, லட்சுமி. 4-ல் உருத்திரர், உருத்ரி. 5-ல் மகேஸ்வரர், மகேஸ்வரி. 6-ல் சதாசிவர், மனோன்மணி என்பவர்களை முறையே தரிசித்தேறி இச்சூக்குமத்தையும், எட்டு, இரண்டு என்னு மெழுத்துக்களையும் சத்தி பீஜங்களையும், இவையாவு மடங்கிய உடல் உடலெந்திரத்தையும், அதன் நடுவெழுந்த கம்பத்தையும், அவற்றின் இதழ்களையும், அவற்றுளடங்கிய 51-அட்சரங்களையும் விவரித்துரைக்கத் தெளிந்து அநுஷ்டித்துத் தெரிசித்தல் வேண்டும்; இவ்வநுஷ்டான முடையர் இதற்குரிய அதிகாரி யாவர்.

"சிவமுதலே யாமாறுஞ் சேருமேற் றீரும்
பவமிலே யோதும்படி" திருவருட்பயன்.

"பாநுவா மிறையெ ழுத்து வதனொளி பரையெ ழுத்து
ஊனமில் கண்ணே யாகு முயிரெனுந் தனியெழுத்துத்
தீனமில் விளக்கே யாகுஞ் செப்பிய திரையெ ழுத்து
நானெனு மிருளே யாகு நவையுறு மவ்வெழுத்து." வள்ளலார்

[காரண பஞ்சாக்கரம்]

"நகர மாகிய சேரியை நஞ்சென வெறுத்து
மகர மாகிய மயலெலாம் வேரொடுங் களைந்து
வகர மாகிய வனத்தினி லிருந்திளைப் பாறிச்
சிகர மாகிய நகரியை யடைந்தனன் சீவன்." வள்ளலார்.

"சிவாய வென்னு மட்சரஞ் சிவனி ருக்கு மட்சரம்
உபாய மென்று நம்புவோர்க் குண்மையான வட்சரம்
கபாட மிட்ட வாசலைக் கடந்துபோகும் வாயுவை
யுபாயமிட்டழைக்குமே சிவாயமைந்தெழுத்துமே." சிவவாக்கியர்

"அஞ்சு நடுவே யழியாத் தலங்காட்டி
நெஞ்சி னடுவே நிறுத்தினு னெந்நந்தி
பஞ்சாக் கரத்தைப் பகர்ந்து பதிகாட்டி
யஞ்சி லிரண்டை யறுத்தன னந்தியே." திருமந்திரம்.

[மகா காரணம்]

"வாசிவா வென்று வாசியை வைத்து
வாசியோடொன்ற வகையறி வாரில்லை
வாசியோ டொன்ற வகையறி வாளர்க்கு
வாசியோ டீசன் மகிழ்ந்திருந் தானே."

முற்புகன்ற காரண பஞ்சாட்சரத்தால் அவித்தையும், மகா காரணத்தால் ஜீவேசுர ஜநந வித்தாகிய பிரகிருதி என்னும் மகாதத்துவ நிக்கிரகமும் வாய்க்கும்.

[ஐம்பத்தோ ரக்கரோற்பத்தி]

கூறிய தூல சூக்கும காரண மகா காரண மென்னும் சதுர்வித பஞ்சாட்சரங்களுக்கும் ஆதிகாரணம் பிரணவமாம்: அது அகார உகார மகாரங்களின் சம்பந்தமாம்: அவற்றிற்கும்ஆதிகாரணம் வைகரிவாக்கு: அதற்குமத்திமை, அதற்குப் பைசந்தி, அதற்குச் சூக்குமை, அதற்கு விந்துதத்வத்தைக் கடந்த நாதம்என முறையே காரணங் கூறுவர்.

## வைகரிமுதலியவைகளின் அடைவும் செயலும்காண்பித்தல்.

சிவஞான போதம்:—"சூக்குமை நம் பைசந்தி மத்திமைசொல் வைகரியென், ருக்குமிவற் றின்பே ரடைவறிக—சூக்குமைதான்

பந்தித்தான் மாவுணர்வைப் பைசந்தி மத்திமையாம், அந்தத்திற் றூல வெழுத் தாம்." ஷை:—"வாக்கி லுதித்துப் பொருளை மதிப்பிக்கைக், காக்கும் பதத்தி னவயவமாய்—வாக்கியமாய்ப், பாவா யியலாகி நூலாய்ப் பரந்திலங்கும், ஓவாதே மத்திமையி னுற்று"

## இவற்றுள் வைகரி.

ஷை:—"வைகரி செவியிற்கேட்ப தாயந்த வசன மாகி, மெய்தரு முதான வாயு மேவிட விளைந்த வன்னம், பொய்யற வடைவு டைத்தாய்ப் புந்திகா ரணம தாகி, யையமில் பிராணவாயு வடைந்தெழுந் தடைவு டைத்தாம்," என்பது மூலாதார முதல் பிரம ரந்திர மளவுள்ளது.

## மத்திமை.

ஷை:—"உள்ளுணர் வோசை யாகிச் செவியினி லுறுதல் செய்யா தொள்ளிய பிராண வாயு விருத்தியை யுடைய தன்றித், தெள்ளிய வக்க ரங்கள் சிந்திடுஞ் செயல தின்றி, மெள்ளவே யெழுவ தாகு மத்திமை வேற தாயே."

## பைசந்தி

"சிவஞான சித்தியார்:—"வேற்றுரைப் பட்ட வன்னம் வெவ்வேறு விபாக மாகித், தோற்றுத லடைவொ டுக்கிச் சுயம்பிர காச மாகிச், சாற்றிடு மயிலி னண்டந் தரித்திடுஞ் சலமே போன்றங், காற்றவே யுடைய தாகிப் பைசந்தி யமர்ந்து நிற்கும்."

## சூக்குமை

ஷை:—"சூக்கும வாக்க துள்ளோர் சோதியா யழிவ தின்றி, யாக்கிடுமெதிகா ரத்துக் கழிவினை தன்னைக்கண்டால், நீக்கமி லறிவா னந்த முதன்மமித் தியமு டைத்தாய்ப், போக்கொடு வரவி ளைப்பு விகாரமும் புருட னின்றும்."

இவ்வாக்கு நான்கும் ஒன்றிற் கொன்று காரணமாக முடிந்த வைகரி யென்னும் வாக்கினிடத்து 51-அக்கரங்களும் உதித்தன வாம். அவை மூலாதாரத்தில் 4, சுவாதிட்டானத்தில் 6, மணி பூரகத் தில் 10, அநாகதத்தில் 12, விசுத்தியில் 16, ஆக்ஞையில் 3-என இவ்விதம் சத்திரூபமாய் ஆறாதாரங்களிலு நிறைந்திருக்கின்றன.

இதற்குப் பிரமாணம் உரோமசமுனிவர்.

"பத்தும் பெரும்புலி யானை பதினெட்டு, வித்தகர் நால்வர் விநா யக ரீஸரவ, ரத்தவர் மூவ ரறுவர் வைத்தியர், இத்தை யறிந்தவ ரென் குருவாமே."

மூலாதாரமுதல் ஆக்ஞைபரியந்தமான ஆறாதாரங்களில் அக்கினி யாதி மும்மண்டலங்கள் அடங்கிநிற்குமுறைமை.

இதற்குப்பிரமாணம்,

"எட்டித ழோடறு கோண நிறம்பொற் பளிங்கெனவே, கட்டற வாதித்த மண்டல மங்கிநற் கானடுவே, முட்டிய வாழை முகிழ்போற் கவிந்த முகிழ்தனிலே, மட்டவிழ் சத்தி யொட்டென வாழு மனோன் மநியே." அறிவானந்தசித்தியார்.

ஷை "சந்திரன் கோடியுதயமதாமெனத் தானதுற்றே யிந்த நற் சந்திரமண்டலமுற்றிங் கிருக்குமிடம், அந்தரமான கபால மதனி லமுதநிலே, முந்திய போகம் பராசத்தி வாழுமுறைமையிதே."

செந்நிறமாய்ப் பிருதிவி, அப்பு இவ்விரண்டி னடுவுள்ளது

அக்நிமண்டலம் இம்மூன்றிற்கும் பிரமாணம்.

"மூன்று மண்ட லத்துளே முட்டி நின்ற தூணிலே

நான்ற பாம்பின் வாயிலே நடுவு நின்ற தீபமாய்

ஈன்றதாயு மப்பனு மெடுத்து ரைத்த மந்திரம்
தோன்று மோரெழுத்திலேசொல்ல வெங்குமில்லையே.''

சிவவாக்கியர்.

[நாதவிந்து தரிசனம்]

''தொழும்பெரிய தெய்வமதிக் கப்பால் நாதந் துலங்குமீ ராறுவிரலங்குலத்தில், எழுமிரவி மண்டலத்துக்கப்பால் விந்து வீரிரண்டங்குலத்தி லியங்கி நிற்கும், முழுமதிய மிவர்களிரு வரையுங் காணின் மூவுலகு மாளுமையுன் னுடம்ப றிந்தாற், பழுதுபடப் பரமறிந்து பிறப்பறுப்பாய் பரத்தினிலை யொருவராற் பகரொணாதே.''

உடலறிவிளக்கம்

எனவரும்மற்றும் விருவனவற்றாற்காண்க. இவ்வளவால் துவாதசாந்த கலைப் பிரசாத மடக்கிக் கூறியவகை காண்க.

இனி ஷோடச கலைப்பிரசாதவிபரம்;—வியாபி நிகலைக்கு மேல், சமனை கலைக்குக் கீழ்நடு நாலுக்கும்பெயர்: வியோமரூபிணி, அநந்தை, அநாதை, அநாசிருதைஆகப் பதினாறு கலை எனவறிக. மண்டலங்களுக்கு விபரம்;—(க) மூலாதாரந் தொடங்கி இருதய பரியந்தம் ஆதித்திய மண்டலம், (உ) இதற்கு மேல்பிரமரந்திர பரியந்தம் சந்திர மண்டலம், (ங) சக்தி தொடங்கிச் சமனை பரியந்தம் சக்தி மண்டலம், (ச) அப்பால் சிவமண்டலம். அவஸ்தை விபரம்;—(க) இருதயந் தொடங்கிப் புருவ நடு மட்டும் சாக்கிரம், (உ) அதற்குமேல் நாத கலையிற் செல்லல் சொப்பனம், (ங) அதற்குமேல் சக்தி கலையிற் செல்லல் சுழுத்தி, (ச) அதற்குமேற் சமனையிற் செல்லல் துரியம், (ரு) அப்பால் அதீதம். ஸப்த விழுவ விபரம்;— (க) பிராண விழுவம்,— பத்மாசனமா யிருந்து மனது தேக, இந்திரிய, அந்தக்கரணங்களையும், குணப்பிர

ளயங்களையும் நீங்கிஆத்ம சமீபமான விதிப்படி பிராணுயாமம் பண்ணிப் பிராணவாய்வும் ஏகீபாவமான வவசரம், (உ) மந்திர விழுவம், குரோபதிஷ்டப் பிரகாரத்தில் ஆத்மாவும், மந்திரோச்சாரணமும் சமகால வைசயோகமான வவசரம், (ங) நாடி விழுவமாவது, பிரம ரந்திர பரியந்தஞ் சுழுமுனு நாடி யிடை நடு வழிநடையினுல் இருதயாதி பிரம ரந்திர பரியந்தமா யுள்ள கிரந்திகளைச் சேதித்தல், (ச) பிரஸாந்த விழுவமாவது, சத்தியில்ஆத்மா லயமாதல், (ரு) சக்தி விழுவமாவது, அந்தச் சத்தியிலேயே ஆத்மா நிலைபெற்று நின்றுநாதத்தை யெழுப்புதல் (சு) கால விழுவமாவது,—சக்தி யந்தம் கசு-ம் வியாபிநி யந்தம் கஎ-ம் சமனுந்தம் கஅ-ம் ஆகத் துடிகாலங்கற்பித்து அத்துடிகாலத்துடன் கூடிய நடையாய்ச் சத்தியீருகக் கற்பித்த கசு-துடிகாலத்தையும் கடக்கில் அஃதபரகாலத்தைக் கடந்த வவசரம், வியாபிநியிற் சொன்ன கஎ-துடிகாலத்தைக் கடக்கில்பராபர காலங்கடந்த வவசரம், சமனையிற் சொன்ன கஅ-துடிகாலத்தைக் கடக்கில் அஃது பரகாலத்தைக் கடந்த வவசரம்ஆக விந்தக்கிரமங்கள் மூன்றுமாம். (எ) தத்துவ விழுவம், உந்மனையி லிருக்கும்; இதற்குமேல் சிவனே டைக்கியம். மேல் சூநிய விபரம்; (க) அகாரம், உகாரம், மகாரம் என்னும் முக்கலைகளையுங் கடந்த விடம் க, (உ) பிந்து, அர்த்த சந்திரன், நிரோதி முடிவில் க, (ங) நாதம், நாதாந்தம், சத்தி முடிவில் க, (ச) வியாபிநி முடிவில் க, (ரு) சமனை முடிவில் க, (சு) உந்மனை முடிவில் க, ஆகச்சூநியம் சு-ம் கடந்த விடம்பரசிவஸ்தாநம் என்றறிக.

ஸ்பரிசயோக சம்பந்த வுபாசனை

முற்றும்.

---

௨

# சுப்ரஹ்மணிய பாவனு உபாஸ்தி.

---

மாணுக்கன், பிரஹ்மவித்தியா சம்பிரதாயப்பிரவர்த்தக தேசிக சிகாமணியாகிய குருவே! தேவரீர் சுப்ரஹ்மணிய சகுணோவுபாஸ்தியை இனியருள வேண்டு மெனப் பிரார்த்திக்க ஆசிரியர்—நிஷ்களங்கமாகிய வாகாசத்தில் ஏககாலத்தில் வரிசையா யுதித்துப் பிரகாசிக்கின்ற ஷட்ராகர சந்திர மண்டலங்களைப் போல் சிதாகாசத்தில் உதித்துப் பிரகாசிக்கின்ற ஷடாநந பங்கயங்களை யுடைய சுப்ரஹ்மணியரது திவ்யமங்களமூர்த்தியைச் சந்திர கலா தராகியும். இரத்திநகஜித கநகமயகிரீட ஷட்க வலங்கிருத ஷட்சிரத்தராகியும், கநகமய விரத்ந குண்டலத் துவாதசங்களால் சோபியாநின்ற விகசித முக கமல ஷட்கராகியும், தயாந்தோளித வஷ்ட தச நயந குமுதராகியும், நீலகண்டராகியும், சுவர்ணமய கேயூரங்களா லலங்கிருதமான பன்னிரு புஜராகியும், குக்குட த்வஜராகியும், சக்தி பாணியராகியும், மயூர வாகநராகியும், சுவான்மாநந்த விலாசத்தால் நடிக்கின்ற சரண கமலநூபுரத்வநியி னின்று முதித்த நவ வீரர்களாற் சூழப்பட்டவராகியும், வள்ளி தெய்வானை சமேதராகியும், இவ்வாறே உஜிதங்களான சர்வாபரணங்களாலும், பீதாம்பரங்களாலுமலங்கரிக்கப்பட்ட சர்வாவய வராகியும், குங்கும ரக்த வர்ணராகியுந் தியாநித்து அவரது கருணையால் உனது நிஜபோதானந்தகநணுகப்பவிப்பாயாக வென;—

மாணுக்கன் இங்ஙனம் உபதேசித்தவண்ணந் தியாநித்து ஆன்மாநந்தத்தின் மூழ்கித்தீநஜந விரட்சணபெத்த கங்கணராகிய பரமகுரோ!

ருவே! தேவரீரது கருணையாற் கிடைத்த வித்தியாநந்தரச மகிமாவை என் சொல்கேன்; நக முதல் சிரசு பரியந்தம் இத்திவ்ய மங்கள மூர்த்தியின் ஒவ்வோ ரவயவங்களிலும் தியாந மார்க்கத்தால் இதுகாறு மணுகிய துக்கரூபமான என் மநமும், வாக்கும் மனுதித வாநந்த சிந்துவாக அவ்வவ்வவயவங்களிலும் பவித்துநினைக்கவும், சொல்லவும் வல்லபமிலியாகின்றேன்; ஆயினும், இவ்வுபாசனையின் மகிமா விரகசியங்களை யான் பெற்ற வண்ணம் மாறுமல் என் மனது நிரந்தரம் அவ் விரகசியங்களிலேயே பொருந்திப் பிரகாசித்துச் சோபிக்குமாறு கடாட்சிக்க வேண்டுமென;—ஆசிரியர்—ஆநந்தமே பிரமரூப மென் றுபதேசித்த சுருதியினுல் ஆநந்தத்தையே சொரூப லட்சணமாக வுடைய திரிவித பரிச்சேத சூந்யமாம் பரவஸ்து யாது? அதி லுதித்துப் பிரகாசிப்பதான அநுபவ சொரூபமே சுப்ரஹ்மணிய மெனப்படும்; அஃதெங்ஙன மெனில்? சு—ஆநந்தம்—பிரஹ்ம... திரிவித பரிச்சேத சூந்யம் ணியம்... அதி லுதித்துப் பிரகாசிப்பது— ஆதலால், சேர்த்துப் பொருட்படுத்தின் முற்கூறியதே யமையும் என்க. நிர்க்குண சிவாநந்த மெனும் பரவஸ்து எங்ஙனமோ! அதன் சத்தியு மங்ஙனமேயாகும்; அங்ஙன மாயின், நிர்க்குணத் தன்மையால்நிர்விகற்பங்களெனலா மச்சிவசத்திகளின் சம்பந்தமும் நிர்விகற்பமே யாகும்; அதி லுதித்த சிவசத்திகளின் சமரசாநந்தாநுபூதியும் நிர்விகற்பமேயாகும்; இவ்வித நிர்ணயமாகும்போது சிவ சத்தியபேதமா யுதித்த அச்சமரசாநந்தாநுபவமே உள்ளவாறு தனதியல்பு வெளிப்படும் நிமித்தம் சுப்ரஹ்மணிய மெனும் அந்வர்த்த நாமாவைப் பொருந்தி முற்கூறிய பிரகாரம் திவ்விய மங்கள மூர்த்தம் பூண்டு பிரகாசிக்கின்றது.

ஆதலால், சகுண பாகத்திலுஞ் சிவனது முகமைந்தும், சத்தியினது முக மொன்றும் ஆகிய ஆறுமுகத்தால் சிவசத்திகளி னைக்கிய

பாவத்தைத் தெரிவித்து, அங்ஙனமே யோகமார்க்கத்தாலும் பரவஸ்துவை யடையத்தக்க வுபாயபூதமாகச் சத்தியின் தமோகுண பரிணுமத்தாற் பிரத்தியட்ச பஞ்சபூத காரிய வித்தேகத்தின்கண் ணுந்தரமான ஷடாதாரங்களிலும் விலட்சணமாயவற்றில் உபாசிக்கத்தக்க பரவஸ்துக்களும் தானே எனக் காட்டும் நிமித்தம் ஷண்முகத்தவராகின்றூர். சுருதியிற் பிரணவத்தின் பூரணப் பொருளாகப் பரமசிவன் உபதேசிக்கப்பட்டிருக்கும் வண்ணமே இத் திவ்விய மங்கள மூர்த்தமும் உபதேசிக்கப்பட்டிருப்பதனுல் நாதப் பிரமமாகிய பிரணவத்தின் சப்த சத்தியால் அணுமாத்திரமேனும் பிரணவார்த்த ரூபரான சிவனுக்கும் இவருக்கும் பேதமின்மையால் இவரே பரவஸ்து. இந்நாதப் பிரமமாகிய பிரணவத்தின் அம்ஸ வதிஷ்டாக தேவர்களாகிய பிரமா, விஷ்ணு, ருத்திர, மஹேசுவர, சதாசிவ, விந்து, நாத, சத்திசிவம் எனு மொன்பது தத்துவங்களும் பிரணவார்த்த ரூப இச் சுப்பிரமணியரது நாதப் பிரமமாம். நடிக்கின்ற தமது அடிக் கமலங்களின் நூபுர ஸ்தாந வம்ஸ வொலிகளி னின்றும் உதித்த வந் நவதத்துவங்களின் பூரண வல்லபங்களே நவவீரர்க ளென்னும் நவ வடிவங்கொண்டு பிரகாசிக்கின்றன. பிரம, விஷ்ணு, ருத்திரர் எனும் இவர்களின் உபாதிகளாகிய முக்குணங்கள் பிரபஞ்ச காரியோன் முகங்களாக இத் தேவர்களோடும் பிரகாசிப்பதைத் தன்னிற் றரித்து அவைகள் தனது அம்ஸங்களாகக் காட்டாநின்ற பிரகிருதி யெனுந் தத்துவம் ஏகாகாரமாகிய திரிசூல மென்கின்ற அஸ்திர தேவன் ரூபம் பூண்டு பசுபதியினது சிந்நமாவது போல இத்தேவரது கர கமலத்திற்றரித்த சத்தியெனுமஸ்திர தேவ சிந்நம் அம் முக்குணங்களின் பேதத்தைத் தரியாதது கொண்டு அகண்ட சிற்சத்தியேயாம். அவ்வாறே, "கு-பூ" இவ் விரண்டுஞ் சூத்திர ரூபமா யுள்ளன; அவற்றுள், கோழிக்குக் குக்குடமெனப் பெயர் தனக்குக் குட்டனஞ் செய்வதே இயல்பாயிருத்தலால்

என்க; அப்படி "பூ" சத்தை என்ற சூத்திரத்தால் சுவசத்தாரூபமாகிய ஞானப்பிரகாசத்தால் தோற்றப்பட்ட திருசியச் சகமனத்தையுந் துவைத பாவ மின்றிப் பேதித்துத் தன்மய மாக்குவதும், "கு" சத்தை— குச்சிதமாகிய மூலாஞ்ஞானம், விட்சேப காரிய ரூப துவைதப் பிரபஞ்சம்— இவைகளை அத்துவிதமான தனது சொரூப சத்தையால் பேதிப்பதும் பொருளாகவுடைய துவஜ ரூப சிந்ந தாராகியும் விளங்குகின்றார்.

மேலும் நாநாவித விசித்ர தர வலங்காரம் பொருந்திய முக்குண ரூப மெனும் பிரபஞ்சநாமரூப விலாசமானதோகையை விரித்தாடாநின்றகுண சாமியாவஸ்தாரூப* மூலப்பிரகிருதியாம் மயூரத்தையும் வாகநமாக வுடையராயும், பிந்ந பிந்ந வபி வியஞ்சக வுபாதிகளில் அநுசூதமாக வியாபித்துப் பிரபஞ்ச மியாவையும் பிரகாசிப்பிக்க வாதாரமாய் நின்ற பிரபஞ்சை சுவரியாபாதக சர்வாதாரஞானாபிவியஞ்சக வுபாதியிற் பிரதிபலித்த சைதந்யத்தை இலக்கணமா யுடைய தேவயானை யெனுஞ் சத்தியால் அலங்கிருத வோர் பாரிசராகியும், அந்தர்முகப் பகிர்முகங்களாயப் பிரகாசிக்கின்ற ப்ரஹ்ம விலாசமாகிய சிருட்டியாதி வல்லபமாயும், சொரூபத்தி னியல்பை எக்காலத்தும் நீங்காது நிலைபெறச் செய்கின்ற நவ தத்துவ, பர தத்துவ செல்வங்களாகிய குசுமங்கள் விகசிக்கத் தக்க வுபாதி யெனுங் கொடியிற் பிரதிபலித்துப் பிரகாசியாநின்ற சைதந்யத்தை இலக்கணமாகவுடைய வள்ளி யெனுஞ் சத்தியால் அலங்கிருத வோர்பாரிசராகியும், சமஷ்டி யகந்தா பீஜமாகிய சூந்யாகார அவ்

---

* "அனதம் பிக்ரு மந்தி ரம்போல், விளங்குறுமான் மாவுருவ மல்லாம லான்மாவின் வேறாய்த் தோன்றா, துளங்கொள்விய தாதிகாரியங்கடமைத் தோன்றாம லொடுக்கி நின்றுந் துளங்கலனாக டிதகட சமர்த்தையாகியுமேதோன் றாநின்ற, வளங்கடரு காரணமா யதுவாகும்"

யக்த மெனு நகாரத்தைத் தவத்தாற் பிராப்தமான மகா வகங்காரத்தில் பிரதிபலித்த அநேகப் பிரமாண்டாதிபதியாகிய அகங்காரி யெனுஞ் சூரனைக் கீண்டு முற்கூறிய விலக்கணம் பொருந்திய அஸ்திரத்தால் தமது சத்லட்சணத்திற்கு வேறுபடாத நித்யத்வத்தை யளித்து அவனது உபாதியை மயூர மெனும் வாகநமாக்கியும், அவ்வுபாதியிற் பிரதிபலித்த அவனது அகங்காரி சைதந்யத்தை அவ்வுபாதியி னின்று நீக்கி ஞானார்த்தம் பொருந்திய குக்குட த்வஜமாகச் செய்தும், அவ்வாறு பிரகாசியாநின்ற ஸ்ரீஜயந்திபுர மெனுஞ் சச்சிதாநந்த புராதிபராகிய சுப்ரஹ்மண்யரை அபார மகிமை பொருந்தினவ ரென்றறிந்து தியானிப்பாயாக வென வருள;—

சுப்ரஹ்மண்ய பாவனா வுபாஸ்தி

## முற்றும்.

---

மாணக்கன்—உமாதேவி நூபுரத்தி னின்றுந் தெறித்த நவரத்நங்களிற் பிரதிபலித்த நவ சக்திகளிடமாய்ப் பரம சிவத்தின் பிரதிபலன மூண்டாக நவ வீரர்கள் உற்பத்தியானதாய்ப் பிரபலப்பட்டிருக்கஷண்முகரது பாத கமல நூபுரத்தி னின்றும் அவர்கள் உற்பவித்த தாகக் கூறிய தெங்ஙனங் கூடுமென? ஆசிரியர்—அதற்குஞ் சிலவிடத்திற் பிரமாண முளது: மேலும், தேவிக்கு உமா வென்ற நாமம் பிரணவ ரூபமானதாலும், பரமசிவனது நாமமும் அவ்வண்ணமே யாதலாலும், பிரணவமென்பது நாதப் பிரணவ மாதலாலும், இவ்விட மஃதுநிரூபிக்கப்படுதலாலும் ஏகார்த்த வாசகமாய் அபேத மாதலாற் கூடலா மென—மாணக்கன்! அச்சமுசய நீங்கி உபதேசித்தபடி தகராகாசத்தில் அத்திவ்ய மங்கள மூர்த்தியைத் தியானித்துப் பிரதிபந்தத் திரயங்களு நீங்கி விவேக விருத்தியானேனுக்க அவ்வாறே அவரது கருணையால் அவ்விருத்தி யநுபவங்க ளுதிக்கஅவ்வநுபூதியில் அத்துவித சச்சிதாநந்த விலாசமாம் பிரத்யகபிந்ந பரமாத்ம சொரூபமாகிய சுப்ரஹ்மணியரை அபரோட்சாநுபூதியாக வடைந்துஅங்ஙனமே அங்வர்த்த நாமாவாகிய திரிவித பரிச்சேத சூந்ய வாநந்த வடிவமாகியே பிரகாசித்து நின்றான்.

# ஸ்ரீ பகவத் பாவனா உபாஸ்தி.

இவ்வாறு, அபேத சகுணபாவனா வுபாசனை ஸ்ரீமத் பாகவதம் 11-ம் ஸ்கந்தம்-14-ம் அத்தியாயத்தில்-35-ம் ஸ்லோகம் முதல் 46-ம் ஸ்லோகம் வரையிற் கூறியிருப்பது வருமாறு;—ஸ்ரீகிருஷ்ண பகவான் தாம் பரமதாமத்துக்கெழுந்தருளும் போது தத்வ விசார விச்சாபராய்ப் பணிந்து விநவிய உத்தவருக்கு, வெகுவாகத் தத்துவத்தை வர்ணித்து மேலும் கேட்கவும், சொல்லவுங் கிட்டாதான பிரமத்தியானம் வெகுகாலம் சாதுக்கள், பெரியோர்களைக் கிட்டி வந்தனை வழிபாட்டால் கிடைக்கற்பாலதாதலின், வாசனாப் பிராபல்ய முடைய மந்த சிஞ்ஞாசுக்களுக் கின்றியமையாத சகுணத்தியானத்தைப் புருஷார்த்தபல தாதாவான அங்கிர்க்குணப் பிரமத்தியானங் கைகூடும்பொருட்டுப் பரமகிருபையா லருளல்! ஹே-உத்தவ? சமான வாசநமீதுட்கார்ந்து தலையுங் கழுத்து முடம்புஞ் சுகபூர்வமாய் ஒழுங்குபட நிறுத்திப் பிரமாஞ்சலி யுக்தனாய் நாசிகாக்ர மீது திருஷ்டி வைக்குக. பிராணனது மார்க்கமான பூரக, கும்பக, ரேசகங்களால் சுத்தமாய் ஜிதேந்திரியனாய் மெல்ல மெல்லப் பிராணாயாம வப்யாசஞ் செய்து அக் கிரமங்களால் நீண்டு பழகுக. அப்பிராணாயாமம் இரண்டு பிரகாரம்; கண்டாமணி சப்தத்துக் கொத்த வுச்சநாத பூர்வகப் பிரணவ சம்யுக்த பிராணனதப்பியாசத்தினால் பிரகடஞ் செய்வதும், பிரணவ ஹிருஸ்வதீர்க்க சந்தாந ஸ்திதஞ் செய்வதுமாகிய அத்தசப்பிராணாயாமம் மூன்று காலஞ்செய்குக. இவ்வாறான வப்யாசங்களால் ஒருமாசத்திற் பிராணவாயு தன்வசமாய் விடும். இச்சரீரத்தினுள் இருதய கமலம் அதோமுகமாயும், அதன் நாளம் மேலாயும், வாழை மொட்டுப் போலாயுமஃதுள்ளது. அதனைக் கீழே நாள முடையதாயும், மேலே முக முடையதாயும் விகசித வெட்டுத் தளங்களுடன் கூடியதாயு முள்ள தெனக் கர்ணிகா

யத்த மெனு நகரத்தைத் தவத்தாற் பிராப்தமான மகா வகங்காரத்தில் பிரதிபலித்த அநேகப் பிரமாண்டாதிபதியாகிய அகங்காரி யெனுஞ் சூரனைக் கீண்டு முற்கூறிய விலக்கணம் பொருந்திய அஸ்திரத்தால் தமது சத்லட்சணத்திற்கு வேறுபடாத நித்யத்வத்தை யளித்து அவனது உபாதியை மயூர மெனும் வாகநமாக்கியும், அவ்வுபாதியிற் பிரதிபலித்த அவனது அகங்காரி சைதந்யத்தை அவ்வுபாதியி னின்று நீக்கி ஞானார்த்தம் பொருந்திய குக்குட த்வஜமாகச் செய்தும், அவ்வாறு பிரகாசியாநின்ற ஸ்ரீஜயந்திபுர மெனுஞ் சச்சிதாநந்த புராதிபராகிய சுப்ரஹ்மண்யரை அபார மகிமை பொருந்தினவ ரென்றறிந்து தியாநிப்பாயாக வென வருள;—

சுப்ரஹ்மண்ய பாவனு வுபாஸ்தி

முற்றும்.

---

மாணுக்கன்—உமாதேவி நூபுரத்தி னின்றுந் தெறித்த நவரத்நங்களிற் பிரதிபலித்த நவ சக்திகளிடமாய்ப் பரம சிவத்தின் பிரதிபலன மூண்டாக நவ வீரர்கள் உற்பத்தியானதாய்ப் பிரபலப்பட்டிருக்கஷண்முகரது பாத கமல நூபுரத்தி னின்றும் அவர்கள் உற்பவித்த தாகக் கூறிய தெங்ஙனங் கூடுமென? ஆசிரியர்—அதற்குஞ் சிலவிடத்திற் பிரமாண முளது: மேலும், தேவிக்கு உமா வென்ற நாமம் பிரணவ ரூபமானதாலும், பரமசிவனது நாமமும் அவ்வண்ணமே யாதலாலும், பிரணவமென்பது நாதப் பிரணவ மாதலாலும், இவ்விட மஃதுநிருபிக்கப்படுதலாலும் ஏகார்த்த வாசகமாய் அபேத மாதலாற் கூடலா மென—மாணுக்கன்! அச்சமூசய நீங்கி உபதேசித்தபடி தகராகாசத்தில் அத்திவ்ய மங்கள மூர்த்தியைத் தியாநித்துப் பிரதிபந்தத் திரயங்களு நீங்கி விவேக விருத்தியானுக்க அவ்வாறே அவரது கருணையால் அவ்விருத்தி யநுபவநக ஞதிக்கஅவ்வநு பூதியில் அத்துவித சச்சிதாநந்த விலாசமாம் பிரத்யகபிந்ந பரமாத்ம சொரூபமாகிய சுப்ரஹ்மணியரை அபரோட் சாநுபூதியாக வடைந்துஅங்ஙனமே அங்வர்த்த நாமாவாகிய திரிவித பரிச்சேத சூந்ய வாநந்த வடிவமாகியே பிரகாசித்து நின்றான்.

# ஸ்ரீ பகவத் பாவனு உபாஸ்தி.

இவ்வாறு, அபேத சகுணபாவனு வுபாசனை ஸ்ரீமத் பாகவதம் 11-ம் ஸ்கந்தம்-14-ம் அத்தியாயத்தில்-35-ம் ஸ்லோகம் முதல் 46-ம் ஸ்லோகம் வரையிற் கூறியிருப்பது வருமாறு;—ஸ்ரீகிருஷ்ண பகவான் தாம் பரமதாமத்துக்கெழுந்தருளும் போது தத்வ விசார விச்சாபராய்ப் பணிந்து விநவிய உத்தவருக்கு, வெகுவாகத் தத்துவத்தை வர்ணித்து மேலும் கேட்கவும், சொல்லவுங் கிட்டாதான பிரமத்தியாநம் வெகுகாலம் சாதுக்கள், பெரியோர்களைக் கிட்டி வந்தனை வழிபாட்டால் கிடைக்கற்பாலதாதலின், வாசனுப் பிராபல்ய முடைய மந்த சிஞ்ஞாசுக்களுக் கின்றியமையாத சகுணத்தியாநத்தைப் புருஷார்த்தபல தாதாவான அங்கிர்க்குணப் பிரமத்தியானங் கைகூடும்பொருட்டுப் பரமகிருபையா லருளல்! ஹே-உத்தவ? சமான வாசநமீதுட்கார்ந்து தலையுங் கழுத்து முடம்புஞ் சுகபூர்வமாய் ஒழுங்குபட நிறுத்திப் பிரமாஞ்சலி யுக்தனுய் நாசிகாக்ர மீது திருஷ்டி வைக்குக. பிராணனது மார்க்கமான பூரக, கும்பக, ரேசகங்களால் சுத்தமாய் ஜிதேந்திரியனுய் மெல்ல மெல்லப் பிராணுயாம வப்யாசஞ் செய்து அக் கிரமங்களால் நீண்டு பழகுக. அப்பிராணுயாமம் இரண்டு பிரகாரம்; கண்டாமணி சப்தத்துக் கொத்த வுச்சநாத பூர்வகப் பிரணவ சம்யுக்த பிராணனத ப்பியாசத்தினுல் பிரகடஞ் செய்வதும், பிரணவ ஹிருஸ்வதீர்க்க சந்தாந ஸ்திதஞ் செய்வதுமாகிய அத்தசப்பிராணுயாமம் மூன்று காலஞ்செய்குக. இவ்வாறான வப்யாசங்களால் ஒருமாசத்திற் பிராணவாயு தன்வசமாய் விடும். இச்சரீரத்தினுள் இருதய கமலம் அதோமுகமாயும், அதன் நாளம் மேலாயும், வாழை மொட்டுப் போலாயுமஃதுள்ளது. அதனைக் கீழே நாள முடையதாயும், மேலே முக முடையதாயும் விகசித வெட்டுத் தளங்களுடன் கூடியதாயு முள்ள தெனக் கர்ணிகா

யக்த மெனு நகரத்தைத் தவத்தாற் பிராப்தமான மகா வகங்காரத்தில் பிரதிபலித்த அநேகப் பிரமாண்டாதிபதியாகிய அகங்காரி யெனுஞ் சூரனைக் கீண்டு முற்கூறிய விலக்கணம் பொருந்திய அஸ்திரத்தால் தமது சத்லட்சணத்திற்கு வேறுபடாத நித்யத்வத்தை யளித்து அவனது உபாதியை மயூர மெனும் வாகநமாக்கியும், அவ்வுபாதியிற் பிரதிபலித்த அவனது அகங்காரி சைதந்யத்தை அவ்வுபாதியி னின்று நீக்கி ஞானர்த்தம் பொருந்திய குக்குட த்வஜமாகச் செய்தும், அவ்வாறு பிரகாசியாநின்ற ஸ்ரீஜயந்திபுர மெனுஞ் சச்சிதாநந்த புராதிபராகிய சுப்ரஹ்மண்யரை அபார மகிமை பொருந்தினவ ரென்றறிந்து தியானிப்பாயாக வென வருள; —

சுப்ரஹ்மண்ய பாவனு வுபாஸ்தி

முற்றும்.

---

மாணுக்கன்—உமாதேவி நூபுரத்தி னின்றுந் தெறித்த நவரத்திநங்களிற் பிரதிபலித்த நவ சக்திகளிடமாய்ப் பரம சிவத்தின் பிரதி, பலன மூண்டாக நவ வீரர்கள் உற்பத்தியானதாய்ப் பிரபலப்பட்டிருக்கஷண்முகரது பாத கமல நூபுரத்தி னின்றும் அவர்கள் உற்பவித்த தாகக் கூறிய தெங்ஙனங் கூடுமென? ஆசிரியர்—அதற்குஞ் சிலவிடத்திற் பிரமாண முளது: மேலும், தேவிக்கு உமா வென்ற நாமம் பிரணவ ரூபமானதாலும், பரமசிவனது நாமமும் அவ்வண்ணமே யாதலாலும், பிரணவமென்பது நாதப் பிரணவ மாதலாலும், இவ்விட மஃதுந்நிரூபிக்கப்படுதலாலும் ஏகார்த்த வாசகமாய் அபேதமாதலாற் கூடலா மென—மாணுக்கன்! அச்சமுசய நீங்கி உபதேசித்தபடி தகராகாசத்தில் அத்திவ்ய மங்கள மூர்த்தியைத் தியானித்துப் பிரதிபந்தத் திரயங்களு நீங்கி விவேக விருத்தியானேக்க அவ்வாறே அவரது கருணையால் அவ்விருத்தி யநுபவங்க ளுதிக்கஅவ்வநுபூதியில் அத்துவித சச்சிதாநந்த விலாசமாம் பிரத்யகபிந்ந பரமாத்ம சொரூபமாகிய சுப்ரஹ்மணியரை அபரோட்சாநுபூதியாக வடைந்துஅங்ஙனமே அந்வர்த்த நாமாவாகிய திரிவித பரிச்சேத சூந்ய வாநந்த வடிவமாகியே பிரகாசித்து நின்ருன்.

# ஸ்ரீ பகவத் பாவனு உபாஸ்தி.

இவ்வாறு, அபேத சகுணபாவனு வுபாசனை ஸ்ரீமத் பாகவதம் 11-ம் ஸ்கந்தம்-14-ம் அத்தியாயத்தில்-35-ம் ஸ்லோகம் முதல் 46-ம் ஸ்லோகம் வரையிற் கூறியிருப்பது வருமாறு;—ஸ்ரீகிருஷ்ண பகவான் தாம் பரமதாமத்துக்கெழுந்தருளும் போது தத்வ விசார விச்சாபராய்ப் பணிந்து விநவிய உத்தவருக்கு, வெகுவாகத் தத்துவத்தை வர்ணித்து மேலும் கேட்கவும், சொல்லவுங் கிட்டாதான பிரமத்தியாநம் வெகுகாலம் சாதுக்கள், பெரியோர்களைக் கிட்டி வந்தனை வழிபாட்டால் கிடைக்கற்பாலதாதலின், வாசனுப் பிராபல்ய முடைய மந்த சிஞ்ஞாசுக்களுக் கின்றியமையாத சகுணத்தியாநத்தைப் புருஷார்த்தபல தாதாவான அந்நிர்க்குணப் பிரமத்தியானங் கைகூடும்பொருட்டுப் பரமகிருபையா லருளல்! ஹே-உத்தவ? சமான வாசநமீதுட்கார்ந்து தலையுங் கழுத்து முடம்புஞ் சுகபூர்வமாய் ஒழுங்குபட நிறுத்திப் பிரமாஞ்சலி யுக்தனுய் நாசிகாக்ர மீது திருஷ்டி வைக்குக. பிராணனது மார்க்கமான பூரக, கும்பக, ரேசகங்களால் சுத்தமாய் ஜிதேந்திரியனுய் மெல்ல மெல்லப் பிராணுயாம வப்யாசஞ் செய்து அக்கிரமங்களால் நீண்டு பழகுக. அப்பிராணுயாமம் இரண்டு பிரகாரம்; கண்டாமணி சப்தத்துக் கொத்த வுச்சநாத பூர்வகப் பிரணவ சம்யுக்த பிராணனத ப்பியாசத்தினுல் பிரகடஞ் செய்வதும், பிரணவ ஹிருஸ்வதீர்க்க சந்தாந ஸ்திதஞ் செய்வதுமாகிய அத்தசப்பிராணுயாமம் மூன்று காலஞ்செய்குக. இவ்வாருன வப்யாசங்களால் ஒருமாசத்திற் பிராணவாயு தன்வசமாய் விடும். இச்சரீரத்தினுள் இருதய கமலம் அதோமுகமாயும், அதன் நாளம் மேலாயும், வாழை மொட்டுப் போலாயுமஃதுள்ளது. அதனைக் கீழே நாள முடையதாயும், மேலே முக முடையதாயும் விகசித வெட்டுத் தளங்களுடன் கூடியதாயு முள்ள தெனக் கர்ணிகா

யக்த மெனு நகரத்தைத் தவத்தாற் பிராப்தமான மகா வகங்காரத்தில் பிரதிபலித்த அநேகப் பிரமாண்டாதிபதியாகிய அகங்காரி யெனுஞ் சூரனைக் கீண்டு முற்கூறிய விலக்கணம் பொருந்திய அஸ்திரத்தால் தமது சத்லட்சணத்திற்கு வேறுபடாத நித்யத்வத்தை யளித்து அவனது உபாதியை மயூர மெனும் வாகனமாக்கியும், அவ்வுபாதியிற் பிரதிபலித்த அவனது அகங்காரி சைதந்யத்தை அவ்வுபாதியினின்று நீக்கி ஞானார்த்தம் பொருந்திய குக்குட த்வஜமாகச் செய்தும், அவ்வாறு பிரகாசியாநின்ற ஸ்ரீஜயந்திபுர மெனுஞ் சச்சிதாநந்த புராதிபராகிய சுப்ரஹ்மண்யரை அபார மகிமை பொருந்தினவ ரென்றறிந்து தியாநிப்பாயாக வென வருள;—

சுப்ரஹ்மண்ய பாவனு வுபாஸ்தி

முற்றும்.

---

மாணுக்கன்—உமாதேவி நூபுரத்தி னின்றுந் தெறித்த நவரத்திநங்களிற் பிரதிபலித்த நவ சக்திகளிடமாய்ப் பரம சிவத்தின் பிரதிபலன மூண்டாக நவ வீரர்கள் உற்பத்தியானதாய்ப் பிரபலப்பட்டிருக்கஷண்முகரது பாத கமல நூபுரத்தி னின்றும் அவர்கள் உற்பவித்த தாகக் கூறிய தெங்ஙனங் கூடுமென? ஆசிரியர்—அதற்குஞ் சிலவிடத்திற் பிரமாண முளது: மேலும், தேவிக்கு உமா வென்ற நாமம் பிரணவ ரூபமானதாலும், பரமசிவனது நாமமும் அவ்வண்ணமே யாதலாலும், பிரணவம்மன்பது நாதப் பிரணவ மாதலாலும், இவ்விட மஃதுந்ரூபிக்கப்படுதலாலும் ஏகார்த்த வாசகமாய் அபேதமாதலாற் கூடலா மென—மாணுக்கன்! அச்சமுசய நீங்கி உபதேசித்தபடி தகராகாசத்தில் அத்திவ்ய மங்கள மூர்த்தியைத் தியாநித்துப் பிரதிபந்தத் திரயங்களு நீங்கி விவேக விருத்தியானேக்க அவ்வாறே அவரது கருணையால் அவ்விருத்தி யநுபவங்க ளுதிக்கஅவ்வநுபூதியில் அத்துவித சச்சிதாநந்த விலாசமாம் பிரத்யகபிந்ந பரமாத்ம சொரூபமாகிய சுப்ரஹ்மணியரை அபரோட்சாநுபூதியாக வடைந்துஅங்ஙனமே அந்வர்த்த நாமாவாகிய திரிவித பரிச்சேத சூந்ய வாநந்த வடிவமாகியே பிரகாசித்து நின்றுன்.

# ஸ்ரீ பகவத் பாவனு உபாஸ்தி.

இவ்வாறு, அபேத சகுணபாவனு வுபாசனை ஸ்ரீமத் பாகவதம் 11-ம் ஸ்கந்தம்-14-ம் அத்தியாயத்தில்-35-ம் ஸ்லோகம் முதல் 46-ம் ஸ்லோகம் வரையிற் கூறியிருப்பது வருமாறு;—ஸ்ரீகிருஷ்ண பகவான் தாம் பரமதாமத்துக்கெழுந்தருளும் போது தத்வ விசார விச்சாபரராய்ப் பணிந்து விநவிய உத்தவருக்கு, வெகுவாகத் தத்துவத்தை வர்ணித்து மேலும் கேட்கவும், சொல்லவுங் கிட்டாதான பிரமத்தியாநம் வெகுகாலம் சாதுக்கள், பெரியோர்களைக் கிட்டி வந்தனை வழிபாட்டால் கிடைக்கற்பாலதாதலின், வாசனுப் பிராபல்ய முடைய மந்த சிஞ்ஞாசுக்களுக் கின்றியமையாத சகுணத்தியாநத்தைப் புருஷார்த்தபல தாதாவான அந்நிர்க்குணப் பிரமத்தியானங் கைகூடும்பொருட்டுப் பரமகிருபையா லருளல்! ஹே-உத்தவ? சமான வாசநமீதுட்கார்ந்து தலையுங் கழுத்து முடம்புஞ் சுகபூர்வமாய் ஒழுங்குபட நிறுத்திப் பிரமாஞ்சலி யுக்தனுய் நாசிகாக்ர மீது திருஷ்டி வைக்குக. பிராணனது மார்க்கமான பூரக, கும்பக, ரேசகங்களால் சுத்தமாய் ஜிதேந்திரியனுய் மெல்ல மெல்லப் பிராணுயாம வப்யாசஞ் செய்து அக்கிரமங்களால் நீண்டு பழகுக. அப்பிராணுயாமம் இரண்டு பிரகாரம்; கண்டாமணி சப்தத்துக் கொத்த வுச்சநாத பூர்வகப் பிரணவ சம்யுக்த பிராணனதப்பியாசத்தினுல் பிரகடஞ் செய்வதும், பிரணவ ஹிருஸ்வதீர்க்க சந்தாந ஸ்திதஞ் செய்வதுமாகிய அத்தசப்பிராணுயாமம் மூன்று காலஞ்செய்குக. இவ்வாருன வப்யாசங்களால் ஒருமாசத்திற் பிராணவாயு தன்வசமாய் விடும். இச்சரீரத்தினுள் இருதய கமலம் அதோமுகமாயும், அதன் நாளம் மேலாயும், வாழை மொட்டுப் போலாயுமஃதுள்ளது. அதனைக் கீழே நாள முடையதாயும், மேலே முக முடையதாயும் விகசித வெட்டுத் தளங்களுடன் கூடியதாயு முள்ள தெனக் கர்ணிகா

சகிதம் மனதின்கண் நேயமாகச் சிந்தநஞ் செய்க. அந்தக்கமல கர்ணி கையில் சூரியன், சந்திரன், அக்கினி எனும் பீஜ மூன்றுள்ளது; அவற்றுள் பிரதமம்அக்கினிபீஜத்தில்கூறும் எனது திவ்யமங்கள மனோகர விக்கிரக வடிவத்தைத் தியாநித்தல் வேண்டும்: சம, அதி சாந்த, சுந்தர முக, தீர்க்க சுந்தர சதுர்ப்புஜ தாரணராய், அதி சுந்தர கிரீவா உத்தம கோளகபோலம், அதியுஜ்வல மந்தகாச யுக்தராய், சமா ன காதுகளிற் பிரகாசமுடைய மகராகார குண்டல தாரியாய், பீதாம் பர தரராய், நீலமேக ஸ்யாம சுந்தர ஸ்ரீவத்ஸ ஸம்யுக்தராய், மார்பில் லட்சுமி தரராய், சங்க. சக்கர, கதை, பத்ம, வநமாலைகளால் பூஷி தராய், நூபுரங்களினுற் சோபிதசரண கமலம், கௌஸ்துப மணி யுகாந்தி சம்பிக்தராய், பிரமையினுற் சோபிக்கின்ற முகுடம், கங்க ணம், கடிமேகலா, பாஜுபந்துதரராய், சர்வாங்க சுந்தரமும், மனோ கர பிரசந்நத்வ காரணமான வதிசுந்தர சோபித முகமும், நேத்திரங் களுமாகிய அதிசுகமாரூபத்தை நிரந்தரம், நெடுங்காலம், நேசத்தோ டுந் தியாநஞ்செய்க. இவ்வாறு சர்வாங்கங்களிலும், மநது கோசரிப்பதாய் நிலைபெறச் செய்க. முன்னர்ச் சர்வேந்திரியங்களையும் விஷயங்களி னின்று மிழுத்து மநத்திற் சேர்க்க மநமாகிறகுதிரையைப் புத்தியாகிற சாரதிகொடு பஞ்சவிஷயரூப வீதிகளினின்றுந் திருப்பியபடி என்னு டைய சொரூபத்திலேயே மனது ரமிக்கச் செய்க. இந்தச் சித்தம் சர்வத்திர என் சொரூபத்தில் வியாப்தமாய் அங்கங்கள் தோறுஞ் சரி த்து அம்மகிமா ரசாநந்தங்களைப் புஜித்துலவிடுமோ அதனை அவ்வங் களினின்றும் வெளிப்படுத்தி எனது முகசரோருக பாவனையில் மட் டும் வைக்குக மந்தகாச சம்யுக்த எனது முக கமலத்தில் வெகு கால பரியந்தஞ் சித்த மிரமித்து மற்றொன்றிலு நோக்காது நிலைபெறுமோ அதனை அம்முக கமலத்தி னின்றமிழுத்துச் சர்வத்துக்கும் மூலபூத சாட்சாத்தான என்னுடைய ஆத்மசொருபத்தில் ஸ்திரஞ்செய்க, கார

ண ப்ரஹ்ம சொரூபத்தில் என்றபடி. இவ்வப்பியாச வன்மை யநுக்கிரகப்பிரசாதத்தால் அங்கு நின்றும் சகஜமாகவே நீங்கிச் சாட்சாத் சுத்த ப்ரஹ்மரூப எனது சம்பூரண மகிமாவில் சித்தம் ஸம்லக்ந [அழுந்து] மாம்போது வேறொன்றுஞ் சிந்திக்கற்பாற்றன்று. இந்தப்பிரகாரம் சமாதியில் திருடமகியாய்த் தனதாத்மாவில் ஆத்மரூபமான என்னையே பார்ப்பாய், எப்படி ஜோதியில் ஜோதிகூடுமோ அப்படிச் சர்வாத்மரூபத்தில் தனது ஆத்மாசேர்வது பார்ப்பாய். இந்தப்பிரகாரம் சுதிருட தீட்சண தியானத்தால் யோகிஜனங்கள் என்னில் மனோஸம்யுக்தமாகச் செய்வார்களோ அங்ஙனம் அவர்கட்குத் திரவியம், ஞானம் கிரியாரூப ப்ரமம் இவைகள் சீக்கிரமாகவே நிவர்த்த மாவதால் சுலபமாய் அவர்கள் சாந்தியை யடைந்து தம்மில் சுகிக்கிறார்கள்.

பகவத்பாவனா உபாஸ்தி முற்றும்.

---

இங்ஙனஞ் சகுணோபாசனா விஷயமாகச் "சுப்ரஹ்மண்ய', கிருஷ்ண பகவான்" என்னும் இருவித லீலா மங்களவடிவங்கள் கூறப்பட்டனவோ! அவைகள் எம்மதங்களுக்குஞ் சமரச சம்மதமாகும். என்னை! காரணப் பிரஹ்ம மொன்றேகூறி வந்த வகை எவ்வளவு அவதாரா நுக்கிரக மூர்த்திகள் சைவ வைஷ்ணவ முதலிய எம்மதங்களிலும் கூறப்படுவனவோ அவ்வவ்வடிவங்க ளியாவுமாய் ஆவிர்ப்பவிக்கும் ஆற்றலுள்ள சர்வாத்மாவாதலின் என்க. ஆனதால் செங்நோக்க வெம்மதிமான்களும் இங்ஙனங் கூறிய வுபாயபூத சாரத்தை மாத்திரம் பூகித்துட்கொண்டு அறிவின்மை வடிவ ஆக்கிரகத்தை யடக்கித் தத்தம் மனதிற் பூர்வ பூர்வ ஜன்மவாசனையாற் றங்கிப் பதிந்த வோர்தெய்வீக மூர்த்தியைக் காரண பாவத்தில் அபேதப்படச் சமரசங் கொண்டு நிறுத்தித் தியானிக்கலாமே. அங்ஙனந் தியானிப்பானேனெனின்? ஜநந மரண ரூப சம்சார வல்லலி னின்றும் நீக்கி அவசியம் பரிபூரண பரமா

நந்த பரம சீதளமாகும் புருஷார்த்தப் பேற்றை யடைவித்த மாற்றல் அத் தியாநத்துக் கிருத்தலின் அத் தியாநம் இன் றியமையாது முன் னியாவருஞ் செய்யற்பாலதே யென்பதறுதியாம் என்க.

இவ்வறுதியும் குரு லிங்க சங்கம வழிபாடின்றிக் கிட்டாது. என்னே? மற்றவையால் அநந்யபாவம்வருதல் மிகவு மரிதாதலின்என்க. இவட மிஃதோ ரிரகசியம்;—தனது யதார்த்த வநந்ய பாவத்தை விட் டிருத்தலே அஞ்ஞாநம், அவ்வஞ்ஞாநத்தால் பேதஞாந முண்டாம், அ தால் அநுகூலத்வ, பிரதிகூலத்வ வுணர்ச்சிவரும், அவற்றால் இராகத் துவேஷமதிகப்படும், அவற்றால் சுபாசுப கர்மப் பிரவர்த்தியாம், அவ ற்றால் பின்பலாநுபவ சம்ஸ்காரமும், பிரவர்த்திக்கேதுபூத வாசனு சம் ஸ்காரமுமான தர்மாதர்மம் வந்து பொருந்தும், அவற்றால் சரீரம், சரீ ராநந்தரம் சுக துக்கோதயங்களாம். ஆனதால் அவ்வநந்ய வுபாசனையா லன் றிமற் றெவ்வுபாயங்களாலும் சம்சார துக்க நீங்காதென்பதே பரம சித்தாந்தம். இதைக் கையிழந்து "ஏடு கொண்டு பாடையே றளவு மி டையின்றி யெல்லையில் சாத்திரங்கள், பாடம தோதித் தலைபறியப் பகருதற்கோதும் பிடாரநீரே, தேடு முள்ளத்துக்கு மோர்வரிய சிற் சொரூப மங்ஙகாரிய மாமோ, பாடம தோதிப் பலிப்பதுண்டோ, வாதி ப்பிரமமகமதனு விந்தச் சடலைகள் வேண்டு மோதான்" என்பதற் கியைபுபற்றிநிற்றல் மாநுடவாக்கை யெடுத்தவர்கட் கதனுலுறும் பே றிழக்கப் பண்ணுவதோடு இகபரங்களிற் சிரேயசு குன் றுமுறைமை யாம். இவ்விரகசியம் ஈசுரபக்தி போலக் குருசங்கமங்களிடம் பக்தி செய்பவர்கட்கே புலப்படும்; புலப்படவே வேதரகசியார்த்தங்கள் யா வும் அவர்கட்கு உள்ளங்கை நெல்லிக்கனிபோன் று பிரகாசிப்பனவாம் ஆதலிற் 'சம்புபத்தி யரிபத்தி யென்பார்தம்மை, மாதரான் றிகழ்வதன் றுன் மற்றவர் கருணைகூரப் போதுவரென் னில் வெல்லும் புயவலியில் லாரெனுந் தீதறு தம்பகைஞர் போரிற்சிங்கமொத் திடுவரன்றே" என்

னும்பிரபோத சந்திரோதயச் செய்யுளானும் மல்லல் வானிறம்படைத்தென்ன வந்துறுவதாயினும் ஜகத் சம்பங்கமாயிருந்து துயர்செய்வதான் மோகரூப சம்சாரத்தை வெல்லும்வகை உய்த்துணர்க.

## இனி நிர்க்குணோபாசனை

"துள்ளுமறி யாமனது பலிகொடுத் தேன்கர்ம
துட்டதே வதைக ளில்லை
துரியநிறை சாந்ததே வதையா முனக்கே
தொழும்பனன் பபிஷேகநீர்
உள்ளுறையி லென்னாவி நைவேத்தியம்
ப்ராண னோங்குமதி தூபதீப
மொருகால மன்றிது சதாகால பூசையா
லொப்புவித் தேன்கருணைகூர்
தெள்ளிமறை வடியிட்ட வமுதப் பிழம்பே
தெளிந்த தேனே சீனியே
திவ்யரச மியாவுந் திரண்டொழுகு பாகே
தெவிட்டாத வாநந்தமே
கள்ளனறி வூடுமே மெள்ளமெள வெளியாய்க்
கலக்கவரு நல்லவுறவே
கருதரிய சிற்சபையி லாநந்த நிர்த்தமிடு
கருணாகரக் கடவுளே."

"வேதமுட னாகம புராணமிதி காசமுதல்
வேறுமுள கலைகளெல்லாம்
மிக்காக வத்துவித மார்க் கத்தையே
விரிவா யெடுத்துரைக்கும்

ஓதரிய துவிதமே யத்துவித ஞானத்தை
யுண்டுபண் ணு ஞானமாகு
மூகமநு பவம்வசந மூன்றுக்கு
மீதுபய வாதிகள் சம்மதம்
ஆதலினெ னக்கினிச் சரியையா திகள்போது
மியாதொன்று பாவிக்கநா
னதுவாத லாலுன்னை நானென்று பாவிக்கி
னத்துவித மார்க்கமுதலா
மேதுபா வித்திடினும் மதுவாகி வந்தருள்செய்வா
யெந்தைநீ குறையு முண்டோ
விகபர மிரண்டினிலு முயிரினுக் குயிராகி
யெங்குநிறை கின்ற பொருளே,'' (தாயுமானவர்)

அருளிய செய்யுட் படி வேதாகம மாதிகள் துவிதாத்துவித மிரண்ட னுள் துவிதமே அத்துவிதத்திற்கு மூலமாயினும் முடிவு அத்துவிதமே ன்பது திண்ணம்; "ஆயத்தக்கது வேதத்தி னந்தமேயாய்ந்தால் = தோய த்தக்கதாநந்த வாரிதியிது துணிபே'' என்றபடி. ஆதலால் அவ்வத்து விதமாகிய அறிவு சிவம் என்னும் இரண்டும் ஒன்றென்னும் விவே கமே (பிரக்ஞையே) நிர்க்குணோ பாசனையாம். மேற்கூறிய சகுணோ பாசன வுபாயத்தில் மூன்று மண்டலம், அதில் ஆறுதாரம், நாத விந்து என் பவற்றைத் தரிசித்து அத்தானங்களும், வடிவுகளும், நிறைந்த வட்சரங்களும், அவ்வதி தெய்வங்களும் அட்சர காரண வாக்குகளும் தெளிவா யுணர்ந்த பின் வேதப்பிரசித்த பஞ்சகர்த்தா முதலிய சத்தி சத்தர்களனைவரும் இச்சரீத்திரயத்துள் நிறைந்து நிற்குந்தன்மை தெளியவரும்; இவ்வாற்றால் அம்மூர்த்தி பேதங் கட்குப் பிறப்பிட மான சுத்தப்பிரமமும் அந்யமின்மை புலப்படும்; "அவனரு ளாலே

அவன்ருள் வணங்கி" என்றபடி, அச்சுத்தப் பிரமத்திற்கு அந்ய வறி விருந்து அறியின் அவ்வறிபடுபவைக்கு நாமரூபக்கிரியை வசம் நாசம் வரும். ஆதலால், அதனை யறிபடு பொருளாமென்பது தகாது. அப்போது அதுவே அறிவென்பது பசுமரத்தாணிபோ னிலைபெறும், நாமரூப நாட்டமாய்ப் பழகி வாசனுமயக்கத்திலாழ்ந்து அவ்வசம் நிற்கு மனத்தை மீட்டுள்ளே நோக்கும்பொருட்டு அப்பிரமத்திற்கு நாமரூபக்கிரியை அலங்காரங்களைக் கற்பித்துச்சகுணபாவனோபாசனையிலும் பழக்கிவரக்கற்பித்தது. அச்சகுணோபாசனைகளே நாமரூபக்கிரியைகளற்ற பிரமத்தி னியல்பை நன்கு புலப்படுத்தலின் நிர்க்குணோபாசனு சகாயமாய் முடிந்தது. பின் அச்சகுணோபாசனைகளும் நித்திரையின் கைப்பொருள் போல் அகண்டத்தில் போ யடங்கிவிடும்.

[ஆதாரமாறையும் கடத்தல் என்பதற்குச் சந்நிதிமுறை.]

மூல நிலத்தி லதோமுகமாய் முகிழ்த்து விழியின் பொருதெயிலு மூரிப் பாம்பைக் காலனலை மூட்டி யெழுப்பி நிலமாறுஞ், சீல மொடும்போய்த் தரிசித்துச் செழுமா மதியி னமுதக்கடல்தேக்கி யகத்தங் கசைவறுமோர் தெய்வந் தவத்தோ ருளவிழியிற், காலுந் தீப மினல் பந்தங் கடிகூர் விரிசு கதிர்மதிபோற்காடு மொளியாயிவையாவுங் கடந்தாங் கழிவில் பேரொளியாய்ச், சால விளங்கும் விந்துவெனுந் தடமா மயிலோய் தாலேலோ தமரக் கடலைக் கடைந்தமுதந் தருவோன் மருகா தாலேலோ."

[தத்துவ நியதிகளைதல் என்றதற்குத் திருவாசகம்.]

"வான்கெட்டு மாருதமாய்ந் தழனீர் மண்கெடினுந்
தான்கெட்ட லின்றிச் சலிப்பறியாத் தன்மையனுக்
கூன்கெட் டுயிர்கெட் டுணர்வு கெட்டென் னுள்ளமும்போய்
நான்கெட்ட வாபாடித் தெள்ளேணங் கொட்டாமோ."

[சரீரத்ரயம், சத்வாதிகுணம், அஞ்ஞானம் இராகத்வேஷாதிகள் என்னும் பற்றுவிடுத்து அறிவு மயமேன்பதற்கு, ஆத்மபோதம்: ]

"மோகவா ரிதியை ஞானமாம் புணையான் முற்றறக் கடந்துநின் றிகலு
வேகமாம் ராக த்வேஷராக்கதரை விவேகமாம் வாளினற் றடிந்து [ம்
சோகமில் சாந்தி சமந்தம முதலாஞ் சுத்தநற் குணமுளயோகி
யோகமா மான்ம ராமனாய்த் தோன்ற விளங்குறு மிராஜயோ கத்தில்.

[எல்லா மறிவுமய மேன்பதற்கு அருணகிரிநாதர்.]

"தந்ததானன தானதனன தந்ததானன தானதனன
தந்ததானன தானதனன தந்ததானன தானதனன தனதானா"

ஐந்து பூதமு மாறு சமயமு மந்த்ர வேத புராணகலைகளு மைம்பதோர்வித மானலிபிகளும் வெகுருப, வண்ட ராதி சராசரமுயர் புண்டரீகனு மேகநிறவனு மந்தி போலுரு வானு நிலவொடுவெயில்காயுஞ், சந்த்ர சூரியர்தாமு மசபையும்விந்து நாதமு மேதுவடிவுமொர் தன்சொ ரூபம தாகி நிகழ்வது சிவயோகந், தங்க ளாணவ மாயை கருமம லங்கள் போயுப தேச பாகுரு சம்ப்ர தாயமொ டேயுநெறியதுபெறுவேனோ" எனவரும் மற்றும் வருவனவற்றுற் காண்க.

சகுணோபாசனை நிர்க்குணோபாசனைக்குச் சகாயமேன்பதற்குப் பிரமாணம்-பிரமகீதை.

"உரியநால்வேதத்தோமெனும் பொருளாயுள்ளதாயுள்ளவெப்பொருட்
கரியதாய் நின்றவொன்றினைக்காளகண்டமுக்கண்ணொருமூன் [குங்
பிரிவிலாமங்கை பாகமுமாகப் பேணுநற்பாவனை பெறுவா [றும்
னரியதா யருளினல் வரும்விச்சை யதனினலதனையே யடையும்."

'அருளினைத்திருமேனியிற்றரித்தருளுமகிலநாயகனையெப்பொழுதுந்
தெருளுறத் தியானம்பண்ணுமேகாந்தசித்தராற் றெளிவுறும்பொருளிப்
பொருளிதனிடத்தேயைவகைப்பட்டபொருள்களும்பொருளினுட்பத்
லொருவருமறியாரரிய தென்றிகழா தொருப்படவேண்டுமீதொ [தா
ன்றும்' எ-ம் வரும் மற்றும் வருவனவற்றுற் காண்க.

## நிர்க்குண நிஷ்டை.

நிஷ்டானுபூதிசாரம்;— நித்தனை யுமையாளடி பணிந்தெனக்கு
நிட்டைசாதனை நிகழ்த்தெனவே, யத்தனுமகிழ்ந்தே நீ வினவிடுதலா
ருயிர்த்தொகைகள் மெய்யுணர்வான், முத்தியையடையுங் காரணமா
மான்மொய்குழற் செய்யவாய்ப்பசுந்தோள், வித்தகிசாவதானமாய்க்
கேட்டியென்றிறை விளம்பிமென்றே.

ஒருமொழியாலேசுருதியாகமநூலுயர்புராணமுமெலாமொழியு
மொருமொழியாலேசரியைநற்கிரியா யோகபாவனையெலாமொழியு
மொருமொழியாலேயண்டபூதங்க ளொடுங்கிடுந்தன்னிலைதோன்று
மொருமொழிசும்மாவிருத்தலாமதனு லொப்பிலாச்சிவபதமடைவார்.

வித்தகமாகப்பலகலைபயின்று மேவுநற்பயன்களையறிந்துந்
தத்துவமுழுதுங்கசடறவுணர்ந்துந் தன்னிலையறிவதற்கரிதாஞ்
சுத்தமெய்ஞ்ஞானதேசிகன்மகிழ்ந்தே சொல்லாமற்சொல்லுமோர்மொ
முத்திரைமோனநிலையினுலன்றி முக்தியினிலைகிடையாதே. [ழியா

இயம்புமாதனங்சடம்மிலொன்றுறவேயிடைகளஞ்சிரங்கணுனேராய்
வயம்பெறத்தம்பமெனநிறீஇயிருந்தே மனமதுவடிவினையுரும
னயம்பெறவுன்னுதன்னியெப்போது நடுநிலைதன்னைநீங்காமற்
றயங்கியசுத்தமசுத்தமல்லாத தனிநிலைபொருந்துதல்சமாதி.

விண்ணூடக்கவுசனையைவிரிக்கு மொருவன்விரகதெனப்
பண்ணும்யோகத்துறநினைவோன்பவனற் றடக்குமதுவிடுத்தே
யெண்ணுங்கருத்தைமுன்னடக்கவியங்கும் வளியும்பின்னடங்கும்
கண்ணைமறைக்கவான்மறையுங்கணக்காம் படிநீகண்டுகொள்ளே.

(இ-ள்.) உறநினைவோன்=விசிராந்தியடையக்கருதுபவன்—அது விடுத்து=ஹடயோகத்தை விடுத்து ஸ்ரீராஜயோகத்துவாரா—எண்ணுங்கருத்தை முன்னடக்க இயங்கும்வளியும் பின்னடங்கும்=சங்கற்ப விகற்பான்மகமனத்தை விசாரபூர்வகம் உதித்தவிடத்தில் ஒடுக்கினின்றால் உசுவாசநிசுவாசவாயுவுந் தானே தடைப்படும்—கண்ணைமறைக்க நீகண்டுகொள்-நேத்திரத்தை மூடியவக்கணமே பூதாகாச மறைதல் போலாம் என நீயூகித்துக்கொள்வாய்—எனையவெளி. (எ-று)

அலையு மனத்தை யகத்தடக்கு மவனேசரியை கடந்தோனும்
அலையு மனத்தை யகத்தடக்கு மவனேகிரியை முடிந்தோனும்
அலையு மனத்தை யகத்தடக்கு.மவனே யோகதற்பரனும்
அலையு மனத்தை யகத்தடக்கு மவனே ஞானியதிசூரன்.
அடக்கிக் கருத்தி னலைவறுப்ப போனவனே சகலத்தியாகியாம்
அடக்கிக்கருத்தினலைவறுப்போனவனேபொன்றுப்பொருளுடையோ
அடக்கிக் கருத்தி னலைவறுப்போனவனே பேரின்பவநுபவியாம் [ன்
அடக்கிக் கருத்தி னலைவறுப் போனவனே வீட்டின்ப மடைபவனே.
ஆதனத்திருந்தே சாதனைபுரிந்தா லடங்கிடாப் பொறிபுல னடங்கு
மாதனத்திருந்தே சாதனைபுரிந்தா லடங்கிடு மனோவிடயங்க
ளாதனத்திருந்தே சாதனைபுரிந்தா லறிவறியாமைக ளொழியு
மாதனத்திருந்தே சாதனைபுரிந்தா லகண்டவீடடைவது நிஜமே.
நிட்டை சாதித்தானிங்குமைம் பொறியொடு புலனு
நிட்டை சாதித்தா னெஞ்சமு முளத்திடை யொடுங்கு

நிட்டை சாதித்தா னினைப்பொடு கேவல மொழியு
நிட்டை சாதித்தா னிமலவீடடைவது நிசமே.

இருந்தான் சமாதிபோ லென்றேயிந்த வுலகோரியம்பவுங்கேட், டிருந்துஞ் சமாதிதனி லுழையாதென்னே வென்போலிருந்தானே, யிருந்தான் சமாதிதன் னிலையிலிருந்தே யிலாமைதனை நீக்கி, யிருந்தானவனே யிருந்தானே யின்பமளவி லின்பத்தே.

இந்த மெய்ச்செபமுங் குருபதத் தன்பு மிடைவிடாதே யுளுற்றுவரேல், வந்திடுஞ்சனனந் தன்னிலேயுறுவர் மன்னுமெய்ஞ்ஞான நிட்டையினை, யுந்துமம் மூடமிலாதவர் தம்மை யுத்தம பக்குவரெனலா, முந்துசற்குரவனல்கு முத்திரையான் மோனவீடுறுவர்களன்றே.

இயம்பு நன்னிலையி னிட்டைசாதிப்போர்க் கின்னுெளி கோடிகளொன்ருய், வயங்குவபோல வகக்கணிற்ருேன்றும் மற்றதும் பொருளலவென்றே, தயங்குறவெந்தை யுமைக்குரைத்திடவே தலைவிகேட்டதனை நீ தெளிய, நயம்பெறப்புகறி யென்னவேவினவ நாதனுந் தெளிவுற நவிலும்

இலங்கியமோன முத்திரையதனி லிருந்திடும் பொழுதிலைம் புலனில், நலந்திகழ்மூன்று புலனுெடுங்கிடுமால் நவிலவையெவையெவையென்னிற், றுலங்கியரூப மிரதநற்கந்த மென்று சொற்றிடுவர் மற்றிரண்டு, புலன்களிற் பரிசந் தரிசனந்தோன்றிற் போயிடுமென்பர் புண்ணியரே.

பேசரிய வனுபோகமாகுங் காலைப் பிறங்குசத் தத்தக்காங்கடோன்றுமாயின், னீசமாம் பொறிபுலன்க ளவையுந்தோன்று நிலவுபொழுதமுகமதாக வுய்த்தே, பாசமிறேசிகன் முன்னம்பகர்ந்த வாறே பதுமவாதனமும் பார்வையு நீங்காமல், ஆசிலந்நிலையி லுதவஞ்செழுத்துமில்லென் றறையக்கேட்டவைபோமாறி யம்புகென்ருள்.

நகரமொடு மகரமது சடந்தருங் காரணமா நாடுமவை நீங்கியிடும் வகையை நவிலுதுங்கேள், வகரத்தி னகரமுதல் யகரத்திற்றுனே மகரமுநீங்கிடு மரியசிகர மனுத்தன்னால், யகரலயம் வகரமுந்தான் சிகரத்திலொடுக்க மாகுமிறை நீங்கவுயிர் முத்தியெய்து மென்றே, தக ரநறுங்கரிய குழனகமாதுக்கிறைவன் றனது திருவுளமகிழ்ந்து சாற்றி னனன்குணர்ந்தே. நாமரூப அஸ்திபாதிப்பிரியம் ஐந்தும் ஐந்தட்சரம்.

ஆதனத்திருந்தே சாதனைசெயும்போ தலைதருமனமடங்காமற், போது மேயெனினுங் கேவலமயக்கம் புரியுமே யெனினு மங்கெழுந்து, நீதி யினையிரடியுலாவந்தே நிலவுமாதனத்தி னிற்பொருந்தி, யோதுசாதனை யிலுறுதியோடிருப்ப தியோகியர்க் கியல்பதா மன்றே.

இந்நிலையாகிய பரமங் கேவலத்தினுளு மெழுநிதித் தியாசனத்தி லிராமலிருந்திடுவோன், அந்நிலையே யுடலினொடு சீவன் முத்தியடை வனதுவு மெவ்விதமென்னி லறைகுது நீ கேளாய், துன்னியதோய த்தினொடு தோயமுறல்போலுஞ் சுவைதரு கீரத்தினொடு கீரமும் போற் கலந்தே, யெந்நிலையுந் தோன்றும விருந்திட விவ்வுலகிலிறப் பினொடு பிறப்புமறத் தினையிலின்பத் தொளிர்வான்.

விதிசேர் பஞ்சாக்கரந்தன்னை விளங்க வுரைத்தோ மேலியம்பல் பதியின் மனுவாமதையுளத்திற் பதித்தோர் பரமபதமடைவர் கதிசே செபமு நீங்காதோர்கருதும் பலனே யடைவரென, மதிசேர் சடை யெம்மண்ணலுமை மகிழ வுரைத்தான் வாய் மலர்ந்தே.

இப்படி நிட்டை தன்னிலே யிருந்து மியல்பொடுந் தன்னனுப வத்தை, யொப்பிலாவரசற் கமைச்சுரைப்பதுபோ லுயர்குருபாற்கு ரைத்தளவின், மெய்ப்படுகுரவன் பின்னிகழ்வதனை விளம்பிட கேட் டறிகுவரே, ஒப்பின் மாயோ காலாதவர்கிரியா காண்டியென் றுரைத் திடப்படுமால்.

புத்திகொள்கிரியாயோகசாதனையைப் புரிந்திடுபவர்களிவ் வுலகில்
எத்தனை கால மிருப்பினுமீண்டுமிறப்பொடு பிறப்பினை யடைவார்
சத்திய மாக வறிதிநீ யிந்தத் தனிச்சிவ யோகசா தனையை [தான்.
இத்தனை வயதிற்போதிப்பதென்றேயிறையவனுமைதனக்கிசைத்

ஞான நிட்டையை நல்குநற் றேசிகன்
மான முற்றிடு மானிட னல்லனல்
வான முற்று வளர்கயி லைப்பரன்
றானெ னத்தினஞ் சாற்றிட லாகுமால்.

நிட்டானுபூதிசாரம் முற்றிற்று.

# துவிதாத்துவித விவேகம்.

துவிதத்தையும், அத்துவிதத்தையும் அம்ஸபட்சி பாலினின்று நீரைப்பிரித்து அப்பாலை யுண்பதுபோல விவேசனம்பண்ணிப் பிரித்து அத்துவிதத்தைக் கரதலமணியென வநுபவித்த ஞானிகள் நிர்ணயம் யாதோ வென்னின்? அதற்கு உத்தரங்கூறல்:—பரஸ்பரம் விரோதம் நீங்காத அறுவகைச் சமயங்கட்கும் அவிரோதமாய் அவற்றிற்கெல்லாம் முடிவாயிருப்பதொரு ஞானம்யாது? அதுவே தத்துவ ஞானிகளது துணிவு; அதுவே சித்தாந்தமென்று சொல்லப்படும். சித்தாந்தமென்றது, முடிந்தபொருளெனக்கொள்க. இதற்குப் பிரமாணம் ஞானசூரியன், "அறைந்தவெச் சமயக் கலையினு மெடுத்துக் காட்டலா யருமறை முடிவிற், சிறந்தநற் பொருளாய்ச் .சிவனரி யயனுற் செப்

பிய வருத்தமு மாகித், துறந்துமற் றவிரோ தத்தையே துணிந்தோர் சொல்லிடும் பொருளுமா மொன்றை, நிறைந்தகைத் தலத்தின் மணி யெனக் காட்டு நீதிசன் மார்க்கத்தி னியல்பே" "செய்ததே தவமாய்ச் செறிவது விடுவ தின்றியே சகலசங் கற்பப், பொய்யதா மொழுக்கப் புலைமைய தறவே போதமா மெய்யொழுக் கதுவாய்க், கையிலா மலக மென்னவே வீட்டைக் காட்டவும் வல்லதே ததுவே, மெய்ய தாம் வேத வேதன மல்லா தவற்றயல் வேதன மறியே" எ-ம், அவி ரோதபோதம், "எடுத்தவெம் மதமெமந் நூல்கள் யாவையுந் தமதா வங் கு, வடித்தநற் பொருளே கொண்டு வளம்பட மகிழ்வ தல்லாற், படித் தொரு பொருளைப் பற்றிப் பாங்கினு லதிலொ துங்கிப், பிடித்தது பிடித்துக் காதும் பேதைமை பெரியோர்க் கின்றே" எ-ம், அமுதசா ரம், "எய்த வெளிதா மிறையரு ளில்லையே, லெய்த வரிதா மியாவர் க்கு-மெய்தெளிந்தா, லெம்மார்க்கத் தோடு மிகலற் றிருக்குமதே, சன் மார்க்க மாகுநெறி தான்" எ-ம் வரும் மற்றும் வருவனவற்றுற் காண்க.

வேதமுடிவுயாது? சமயங்களின் றுணிவு யாது எனின்? அவை இவையெனத் தெளியக்கூறல்;—வேதங்களிலே சொல்லப்பட்ட பல விதசமயங்களினது துணிவும் பரசிவபந்தங்களென்னும் மூவகைப் பொருளை உணர்த்துதலாம்: சமயிகள் அவற்றிற்குத் தத்தங் கோட்பாட்டால் கூறுநிற்கும் பரிபாஷை நாமங்கள் வெவ்வேறுள்ளனவாம்; விளக்கிக்கூறல்: நிருமலம், பூரணம்; நித்தம், அதிசூக்குமம், சச்சிதாநந்தம் என்று கூறும் இவைமுதலிய குணங்களைச் சொரூப விலக்கணமாகவுடைய ஒருபரம்பொருளுண்டு; என்னை? அதனிடத்துநின்றும் சராசரப்பிரபஞ்சங்கள் உற்பவித்தலின்; இது அநீசுவரவாதிகளை மறுத்தது; அஃதெங்ஙனமெனின்? ஒருவன், ஒருத்தி, ஒன்றுஎன்னும் பிரபஞ்சமானது ஓர்கர்த்தாவையுடையது: தோன்றிநின்றழியுங் காரி

யமாதலின்: எங்ஙனம் கடம்போல். அஃதொக்கும்; மாதாபிதாக்கள் காரணமெனின்? அன்னோர் புத்திரோற்பத்தி வேண்டியகாலத்து உண்டாகாமையினாலும், வேண்டாதகாலத்து உண்டாகுதலாலும், ஆணிச்சிக்கப்பெண்ணாதலாலும், பெண்ணிச்சிக்க ஆணாதலாலும், இருவகையிச்சையுமன்றியிலே அலியாயுங்குருபியாயுந்தோன்றுதலினாலும் உற்பத்தியானதும், ஆகாததும் உடனே உணரப்படாமையினாலும், ஒருவர் பண்ணக்காணாதிருக்கவும் மாதாவுதரத்தில்மாதங்கடோறும் உருவாய்வளர்ந்து கருப்பாசயமுதலிய துன்பங்களுக்கிறவாது இங்ஙனந் தோன்றுதலாலும், கடோற்பத்திக்குத் தண்டசக்கராதிகள்போல் மாதாபிதாக்கள் சுதந்தரமின்மையாலும், அஃதன்றியும் உற்பிஜ்ஜத்தோற்றங்கள் மாதாபிதாக்கள் சையோகமின்றியே வித்துக் காரணமாகவுண்டாகையினாலும் அன்னோர்காரணமென்பது கூடாது. அஃதொக்கும்: சுக்கிலங்காரணமாய்த் தேகங்களுண்டாதலின் உத்தரோத்தரசரீரங்களுக்குப்பூர்வ சரீரப்ரமகாரணமெனின்? பாம்பின்வாயிலே கல்லும், கல்லின்வாயிலே தேரையும், நராதிதேகங்களிலே தோன்றியபுழுமுதலியவைகளும், மரங்களிலே தோன்றுங்கிருமி கீடப் புல்லுருவிமுதலானவைகளும், காளான்முதலியவையும் நிலத்தில், சலத்தில் தோன்றும் இருமியாதி வடிவங்களுமாகிய சுவேதசத்தோற்றங்களுக்குப் பூர்வசரீரபீஜம் காரணமல்லாமையால் வித்தே காரணமென்பதுகூடாது. சுவேதசத்தோற்றங்களும் பூ,பூதாதிப் பிரபஞ்சத்தினின்றும் உற்பவிக்கையால் அவையே சரீரோற்பத்திக்குக் காரணமெனின்? சுவேதசோற்பத்திக்குச் சராசரவுருவமிரண்டும் காரணமாகையாலும், மற்றுமுள்ள மூவகையோநிகட்கும் அந்தப் பூ, பூதாதி காரணமென்கை காணப்படாமையாலும் அதுகூடாது. அங்ஙனமன்று: ஒருதீபத்தில் ஒருதீபமாகப் பாரம்பரியத்தில் அநேகதீபம் உணடாயினும் அத்தீபத்

தினது தாபசத்தி அக்கினியின்கட்காணப்படுகையால் அதற்குக்காரணம் அக்கினியேயானாற்போலத் தேககுணங்கள்பூ, பூதராதிசரத்தில் கிருமிபுழு முதலியவும், அசரத்தில் காளான்முதலியவும் காணப்படுகையால் அவைகட்குப் பிருதிவியாதி சாதுர்ப்பூதமேகாரணமெனின்? அப்படித் தோன்றுவித்ததென்கை ஓர்காலத்தும், ஓரிடத்தும், ஒருவராலும் கண்டோமென்கை கேட்கப்படாமையினாலும் அதுகூடாது. ஆயினும் அங்ஙனமன்று, விளக்கு உண்டாவதற்குமுன்னே அக்கினி விளக்கைத் தோற்றுவிக்கவேண்டுமேயல்லாமல் விளக்கு உண்டானதன் பின்பு அதுவும் இருக்க வேறொருவிளக்கை அக்கினி தோன்றுவிக்கவேண்டுவதில்லை. அதுபோல் தேகாதிகள் இல்லாதகாலத்திலே சாதுர்ப்பூதம் தேகாதிகளைத் தோற்றுவிக்குமல்லாமல் இப்பொழுது தோற்றுவியாதெனில்? இப்பொழுதும் பிருதிவியாதிகளில் சுவேதசவுநவந் தோன்றுகையினாலும், அஃதன்றிக் காஷ்டத்தில் அக்கினியை, அக்கினியில் விளக்கை ஒருவன்முன்பு தோன்றுவித்துப் பின்பு ஒருவிளக்கில் ஒருவிளக்கைத் தோற்றுவிக்குதலன்றிக் காஷ்டத்திற்கும், அக்கினிக்கும், விளக்கிற்கும் தானே வேறொன்றைத் தோன்றுவித்தல் கூடாமைபோல் சராசரப்பிரபஞ்சங்கள் ஜடமாதலின் அவைகளை மாயையினின்றும் தோற்றுவித்தவன் ஒருகருத்தா வுண்டெனக்கொள்க. இ-ம் சிவஞானசித்தியார், ஒருவனோ டொருத்தி யொன்றென் றுரைத்திடு முலக மெல்லாம், வருமுறை வந்து நின்று போவது மாதலாலே, தருபவ னொருவன் வேண்டுந் தான்முத லீறுமாகி, மருவிடு மநாதி முத்த சித்துரு மன்னி நின்றே '' எனவரும் மற்றும்வருவனவற்றாற் காண்க.

சீவநிர்ணயம் எப்படியெனின்? அநாதியாய் அநேக சீவர்கள் உபாதிவசத்தால் உளர். என்னை ? அநேகசித்திகளையும், முத்தியையும்

அப்பரம் பொருளினது அருளினால் இவ்விடத்து அடைவாருளராக லின். முத்திஎன்றது சீவர்க்கே. சீவர்க்கல்லது பரத்திற்குப் பந்தங் கூறுதல் ஒருவருக்கும் ஒவ்வாமையினெனக்கொள்க. உயிர்களை அநாதிஎன்றது, பரத்தினது சிருட்டியாதிவிளையாடல் அநாதியாத லின் எனக்கொள்க. அநேகமென்றது, ஏகாத்துமவாதிக்கும் விவ காரத்தில் இவ்வண்ணமே கூறப்படுதலினெனக்கொள்க. சுதந்திர ஹீனரென்றது,பாதந்திரசுதந்திராதலினெனக்கொள்க. அஃதன்று, பாதந்திரரேயெனில் தாமே வினை செய்தல்கூடாது. அதுவும் பரமே செய்விக்குமெனில்? பரத்திற்கு அவிகாரியென்றும், பேரருளுடை யோனென்றும் வேதாதிகள் கூறுதல் அப்பிரமாணமாம்: அன்று சுதந்திரரேயெனில்? முத்தி யடையவேண்டுவதில்லை. பந்தநிர்ணய மெப்படியெனின்? பல்லுயிர்களுக்கும் முத்தியடைகுதல் உளதாதலின் அவ்வுயிர்களை அநாதியாய் மறைத்து நிற்பது ஓர்பந்தமுண்டென்று ஆத்மவாதிகளனைவரும் கூறுநிற்பர். பந்தத்தை அநாதி என்றது. சீவர்கள் உள்ளவன்றே உளதாதலின் எனக்கொள்க.

அப்பந்தம் எத்தனை பகுப்பாயிருக்குமெனின்? அதற்குக்கூறல்;-- கேவலாவஸ்தையைக் காட்டாநிற்கும் அஞ்ஞானமும், அவ்வவஸ்தை யை நீக்கிச் சகலாவஸ்தையைக் காட்டாநிற்கும் மாயையும், சகலாவஸ் தையின் மனோவாக்குக் காயங்களால் உயிர்கள் ஆர்ச்சிப்பதாகிய கன்ம முமேயாய் மூன்றுபகுப்பாயிருக்கும். இந்த மூன்றினுள்ளும் அஞ்ஞா னம் மிகவும் நுண்ணிதாகையால் அதனது சுபாவந்தோன்றாமையால் அஞ்ஞானம் தனியே ஒருமுதலன்று:சிவத்தினது திரோபாவசத்தியே யென்பாரும், ஆன்மாவினது குணமேயென்பாரும், காரணமாகிய மா யையேயென்பாரும், கன்மத்துள் தீவினையேயென்பாரும், பலவாயிரு க்குமென்பாரும், ஒன்றாய் அநாதிசித்தமா யிருக்குமென்பாருமாய் இப்

படி அநேகவிதங்களாலே கூறுநிற்பர். இவ்வண்ணம் மயக்கத்திற்கு இடங்கொடுத்ததும் அஞ்ஞானமேயாதலின் அஞ்ஞானுதி திரிவிதபாச முண்டு. ஆயின் இத்திரிபதார்த்த நிச்சயம் எவ்வெவர்க்கும் பொது வாக லாமேயெனின் ? வீட்டுநெறி யாராயும் பல சமயிகளினது துணிவும் பரசிவபந்தங்கள் மூன்றையும் விசாரித்தலேயன்றி வேறில் லையென்றாலும் அவற்றினது உண்மைகளை அவரவர் கருதிக்கொள் ளுங் கோட்பாடுகள் வெவ்வேறேயாம். அவற்றுள், சிவபரங்களை ஏக முமென்னுமல், துவிதமுமென்னுமல் அத்துவிதமென்று அவாதித மாகிய சுருதி கூறுகையால் இரண்டாகில் முத்தியில் ஒன்றுதல் கூடாது: கூடுமெனில் ஒன்றுகெட்டு ஒன்றுதல்வேண்டும்: கெடும் பொழுது முத்தியின்மையாய் இரண்டென்பதே கூடாது பொன் னும் பணியும்போல் இரண்டாகத்தோன்றுதலின் ஏகமென்னுது அத் துவித மென்றதெனக்கொண்டு அப்பதத்திற்குத் தாற்பரியம் ஏகமே யென்பாரும், அங்ஙனமன்று: ஒன்றாகில் வஸ்துவுக்குப்பந்தமோட்சம் சொல்லவேண்டும், அஃதின்மையால் ஒன்றென்பதே கூடாது: உடலுயிராதியபோல் பேதந்தோன்றுமையின் துவிதமென்னுது அத் துவிதமெனுநின்றது, அதற்குத் தாற்பரியம் துவிதக்கலப்பே யென் பாரும் ஆகி எல்லாச்சமயிகளுங் கூறுவார்.

ஆயின் வேதாந்தசாஸ்திர சித்தாந்தந்தான் யாதெனின்? கூறிவந்த பரசிவ [ஜக] பந்தங்களை அனுதியென்பதே வேதாந்தசாஸ்திரத்தின் துணிவு; ஆயினும் அவற்றினைப் பரஸ்பரம் பேதமென்றும், அபேத மென்றும், பேதாபேதமென்றும் அச்சாஸ்திரசித்தாந்த மரியாதை யறியாத சமயிகளே கூறுநிற்பர்: அவ்வுண்மை நிச்சயித்து மனவாக்கு களாற் கூறுதல்எவருக்கும் முடியாது:நினைத்தற்குக் கருவியாகியசித்த

மும் மாயாகாரியமாய்ப் பெத்ததசைக்கண் சீவனுக்குப் பந்தமாய்விடு தலின்; அஃதெங்ஙனமெனின்? பெத்ததசைக்கண் நிச்சயிப்பதெல்லாம் மனத்தை முன்னிட்டதாதலாலும், பரசிவபந்தங்களினது உண்மை வாக்கு மனதுக்கெட்டாதென்று சுருதியாதிகள் கூறுகையாலும் என க்கொள்க. பேரந்தகாரமாகிய அஞ்ஞானவிருளில் மறைந்துள்ள சீவன் கிஞ்சித்தாகிய மனவிளக்கத்தைக்கொண்டு பந்தத்தைநீக்கித் தனதுண் மையை விசாரிக்கத்துணிவது மிகுந்த அந்தகாரத்தின்கண் வழிகா ணாது மிகவருந்தியவொருவன் மின்மினிவிளக்கத்தை உதவிக் கருவி யாகக்கொண்டு தனது இல்லிடத்தைச் கூடுவான்நினைத்துச் செல்வ துபோலுமாம். இதற்குப் பிரமாணம் திருமந்திரம், "உரையற்றவொ ன்றை யுரைசெய்யு மூமர்காள், கரையற்ற தொன்றைக் கரைகாண லாகுமோ, திரையற்ற நீர்போற் சிந்தை தெளிவார்க்குப், புரையற்று நின்றான் புரிசடையோனே" எ-ம், திருவாசகம், "இன்றெனக் கருளி யிருள்கடிந் துள்ளத் தெழுகின்ற ஞாயிறே போன்று, நின்றநின் றன் மை நினைப்பற நினைந்தே னீயலாற் பிறிதுமற் றின்மை, சென்று சென் றணுவாய்த் தேய்ந்துதேய்ந் தொன்றாந் திருப்பெருந் துறை யுறை சிவனே, யொன்றுநீ யல்லை யன்றியொன் றில்லை யாருனை யறி யகிற்பாரே" எ-ம், தத்துவராயர், "ஆகியுமழிந்தும் போகுமுற்பவத் தெங்ஙனஞ் சொல்வா ரீகற்சம யிகளே" எ-ம், அஞ்ஞவதைப்பரணி, "ஒன்றென்று நின்றசில பலவென்று நின்றசில வுபயத்து நின்ற சிலபேய், யன்றென்று நின்றதனை யாமென்று சொல்லிபுட னலகிட்டு விட்ட சிலபேய்" எ-ம், ஒழிவிலொடுக்கம், "மணிப்பாம் பிருளின் மறைந்திருக்கத் தேடுங், கணக்காந் தற்போதத்தைக் காட்டியுணர்த்து இனு, நீரிற் கிணறு நிழலுயுத்த மும்போலா, மாரித்தை நீக்கியிருப் பார்' எ-ம் வரும் மற்றும் வருவனவற்றாற்காண்க.

மேல் உண்மையறியும் உபாயமியாதெனின்? அதற்குக் கூறல்;- பெத்ததசைக்கண்ணே சீவாதிகளினதுண்மை தெரிதல் ஒருவருக்கும் இயலாதாகையால் அப்பந்தநீக்குவான் சிவதரிசனம் வரும்படி மனோலயசாதகஞ் செய்யவேண்டும்; பந்தநீக்கத்திற் சிவதரிசனமும், சிவதரிசனத்தின் மனோலயமும் ஒருதலையாக வேண்டப்படுமென்பது கருத்து. மனோலயஞ்செய்யவேண்டுமென்பதில் பிரமாணம்: பிரபுலிங்கலீலை, "விரிந்த நெஞ்சங் கருவியாம் விடய முணர விரியாம, லொருங்கு நெஞ்சங் கருவியாந் தன்னை யுணர வொருங்காமல், விரிந்த நெஞ்சமுடையானை விடாது பிறவியென் றுணர்க, வொருங்கு நெஞ்சமுடையானை யுறாது பிறப்பென் றுணர்கவே" எ-ம், மோகவதைப்பரணி, "வீயு மோகிளை வேரறுமல் விடஞ்செய் மோகன் விவேகனுன், மாயுமோவுயர் மாயை யாரு மனத்தினுரு மிருக்கவே" எ-ம் மற்றும் வருவனவற்றுற்காண்க. மனோலயம் வரவே திருவருள் தோன்றும் என்பதற்குப் பிரமாணம் பிரபுலிங்கலீலை, "பொறியிற் புறத்து மனஞ்செல்லிற் புலனே தோன்றி யிடுமகத்திற், செறியிற் கரணாம் பராநந்த சிவமே தோன்றுஞ் சிவந்தோன்ற, வறிவிற் பரந்த விடயமய மாகு முலகந் தோன்றுமற், பிறவித் துயரக் கடல்கடந்து பேரின் பஞ்சார் குவனென்றும்" எ-ம், திருக்களிற்றுப்படியார், "அன்றிவரு மைம்புலனு நீயு மசையாம, னின்றபடியே நிற்க முன்னிற்குஞ்-சென்று, கருதுவதன் முன்னங் கருத்தழியப் பாயு, மொருமகடன் கேள்வனுனக்கு" எ-ம் மற்றும் வருவனவற்றுற்காண்க. மனோலயத்திற் றோன்றிய திருவருளாற் பந்தநீங்கு மென்பதற்குப் பிரமாணம், தத்துவராயர், "இதையாலயத்தி லிருப்பா ரறிய விரந்துருகிப், பதையா திருப்பதென் பாவி நெஞ்சேபரனு மருளாற், சிதையா தொழியிற் சிலுகாய் விளையுமிச்சில் சமயக்கதையான் மனக்கணக்கால்விடு மோவிக் கடும்பிறப்பே" எ-ம்.

சிவாநந்தமாலை, "வெய்யோன்வரவரவே மெய்ந்நிழலுந் தம்முளே, பை யவொடுங்கும் பகுதிபோ-லய்ய, னருள்வந் தணுகவே யாணவமாம் போத,மருளுங் கெடும் போய்மறிந்து" எ-ம், வாசிட்டம், "மலமிசை மரம்போ னீணுள்வன்புற விந்தமெய்யி, னிலைபெறநாளெனென் றெண் ணநீக்குவ தெங்ஙனென்னத், தலைமைசேர்குரவன் சொல்வான்றன் மனவருத்தத்தாலே, தொலைவறுபோகத் தெண்ணந் துவக்கறத் தி டைத்து நீக்கி" "விரிவுறுமுண்மைமேவில் வினையகங்காரமாளும்,புரி வறவிவற்றையெல்லாம் புந்தியாற்றீரநீக்கித், துரிசலைவின்றி நின்று யென்னினுமென்னுந்தோற்றந், தெரிகிலாததுவே நீயாந் தெளிந்தத த்பரமுமஃதே" எ-ம் மற்றும் வருவனவற்றுற்காண்க மனோலயஞ் செய்யுங்கால் மனந்தளராது ஊக்கமுற்றுப் பயன்படுமாறென்னெ னின்? "ஏகவிஞ்ஞானத்தாற் சர்வவிஞ்ஞாநம் பவிக்கும்" எனுஞ்சுரு திப் பொருளைக்கூறல்;—தானன்றிப் பிறிதொருபொருளுமின்மை யால் அனைத்துமான ஒருபரம்பொருளை யாவரொருவர் சுருதிவழி முயன்று குருப்பிரசாதத்தாலுணர்ந்தார் அவரே எல்லாப்பொருள்களை யும் ஒருங்கே உள்ளங்கையி னெல்லிக்கனிபோல் ஐயந்திரிபின்றிப் பிரத்தியட்சமாக வுணர்ந்தோராவர்; இதற்குப் பிரமாணம்-பிரமகீதை, "எப்பொருள் களுக்குந் தோற்றமு நிலையு மிறுதியுந் தன்கணே யாகி, யொப்பிடவொன்று மின்றியே யென்று முள்ளதா யுரையுணர் விறந்த, வப்பொரு ணேரே யறிந்தபோ தெல்லாப் பொருள்களுமறிந்தவா மந்த, மெய்ப்பொரு டானே யெப்பொருள் களுமாய் விளங்கலால் வேறிலா மையினால்" அன்றியும், "ஈசனை யறிந்த வந்த விடத்திலே யென்றுமெல்லாப், பாசமு நசித்த றானும் பணியறப் பவத்தின் றீர்வுங், காசறுமகில மாயக்கங்குலின் கழிவுந்தானே,யாசறுமகண்டரூபி யாகை யுமனைத்து மெய்தும்" எ-ம் வரும் மற்றும் வருவனவற்றுற்காண்க.

அம்மனோலய சாதனஞ்செய்யுநீர்மை எங்ஙனமெனின்? பந்தநீக்கத்துக்கேதுவான அம்மனோலய நிஷ்டைகூடுதற்குப் பந்தத்தைமுன் பறிந்து நீங்கவேண்டலின் தேசேந்திரியாந்தக்கரணங்களை நேதிநேதியென்றுஒன்றொன்றாகக்களைந்து தன்னுண்மைகாணுவதாதிய ஊனுயிர் வேறுபாடு முன்புணர்ந்து உனதறியாமையை நீங்குவாய். உண்மை யாய்வதெங்ஙனமெனின்? இளைத்தேன், பருத்தேன் என்று தேகத்தைச்சொல்லுதலினாலும், இதனுட்சோதிக்குமிடத்தும் இதற்கு வேறாக ஓராத்மாவைக் காணாதபடியினாலும் தேகமே தானெனின்? அதுகூடாது. என்மாடு,என்வீடு என்கிறபோது சொல்பவனுக்கவைவேறாயிருத்தல்போல் என்னுடம்பென்றலாலும், யோகிகள் கூடுவிட்டுக் கூடுபாய்தலினாலும், மரணகாலத்தில் அக்கினி மிகவும்பற்றிக் கடத்தைப் போல் சுடுதலினாலும் தேகந்தானாகாது வேறாம். ஆயின், தேகத்தின்கண் பிராணவாயுவிருக்கின்றபோது சீதோஷ்ணங்களையறிந்தும் அதுநீங்கினபோது கடம்போலத் தேகம் சுடப்படுகையினாலே பிராணவாயுவே தானமென்னில்? உணர்வின்றித் திநந்தோறும் நித்திரையில் அஃதிராநின்றும் அப்போது நேர்ந்த கந்தாதியையுணராமையினாலும் பிராணவாயுவும் தானன்றாம். ஆயின், கந்தாதியைக் கிராணாதி உணராநிற்கின்றன: அவையடங்கின நித்திரையிலேதேகமும், பிராணவாயுவும் இருக்கப் பாம்பாதி,சத்துருவாதிவரினும் அறியாமற் கிடத்தலால் ஞானேந்திரியங்களே தாமாமெனின்? இந்திரியங்களுள் ஒன்றுணர்போழ்து ஒன்றுணராமையாலும், ஒன்றையொன்றுணராமையாலும், ஒன்றறிந்ததை ஒன்றறியாமையாலும், அவைகட்கு வேறாய் ஒன்றிருந்து நான்கண்டேன், கேட்டேன் என்று கூறுதலாலும் கண்ணிற்குத் தீபம்போல் தனக்கு விஷயகாரணமல்லது அவைகள் தாமன்றாம். ஒன்றுணர்போழ்து ஒன்றுண

ராமையானும் என்றமையால் துவக்கிந்திரியமும் தானன்றெனமறுக்கப்பட்டது; அஃதெங்ஙனமெனின்? துவக்கிந்திரியம் சரீரமெல்லாம் வியாபித்திருத்தலின் இஃதே மற்றைய நான்குகொள்கையினின்று சத்தாதியை உணராநிற்கின்றதெனில்? அதுகூடாது; அங்ஙனமாயின் ஐம்புலனும் ஒருங்கேயுணர்தல்வேண்டும். அஃதின்மையால் துவக்கிந்திரியமும் ஆத்மா வன்றென்று மறுக்கப்பட்டதெனக்கொள்க. ஆயின், இந்திரியங்களுணர்ந்ததை நான்கண்டேன், கேட்டேன் என்று வாக்கிந்திரியம் கூறுநிற்கின்றது. தானறிந்ததைக்கூறுமல்லது அறியாததைக்கூறுமையால் வாக்கிந்திரியமே தானுமென்னின்? அதுகூடாது: வாக்கில்லாத ஊமனிடத்தும் யான் எனதென்கின்றவபிமானமிருத்தலால் அது வசனகாரணமல்லது தானுகாது. இதனால் கருமேந்திரியங்களும் ஆத்மாவன்றெனக்கொள்க.

ஆயின், ஊமனுக்கும் யானெனதென்கிற அபிமானமிருத்தலால் இங்ஙனஞ்செய்வது அகங்காரமாதலின் அதுவே தானுமென்னின்? அதுகூடாது: ஒருபொருட்கண் நிச்சயமில்லாவிடத்து இஃதென்னதென்றும், யானுடையேனென்றும் அபிமானித்தல் கூடாமையால் அஃது தனக்குக் கிரியாகாரணமல்லது தானுகாது. ஆயின் அந்நிச்சயாத்மகபுத்தியே தானுமென்னில்? ஒருபொருட்கண் பற்றுதலில்லாவிடத்து அப்பொருளை நிச்சயித்தல் கூடாமையால் அஃது தனக்கு ஞானகாரணமல்லது தானுகாது. ஆயின் அங்ஙனஞ்செய்வது மனமாதலின் அஃதே தானென்னின்? நெஞ்சு நினைவெழாவிடத்து அஃதொன்றையும் பற்றுதலின்மையால் அஃதாத்மாவின் இச்சாகாரணமல்லது தானன்று. ஆயின், அங்ஙனம் நினைப்பது சித்தமாதலால் அதுவே தானுமெனின்? அதுகூடாது. நெஞ்சின்கண் நினைவுமெழாமல் அடக்குவோருளராதலின் வேறே யோரறிவிருந்துகொண்டு சித்தத்தையும்

அசைவின்றித்தடுத்தலால் அச்சித்தமும் தானன்றும். இவையெல்லாந்தாந்தாமல்லவாகில் உண்மை மற்றியாதென்னின்? தத்துவாதீதமாகிய ஞானமே தன்வடிவமாம் எனவறிக.

ஆயின் ஆத்மாவை அணுபரிமாணம், அல்லது மத்தியபரிமாணமாகக்கொள்ளலாமாவெனின்? அழிவின்றி வழங்காநிற்கும் ஆத்மா பரமுத்தியில் பூரணமாகிய பரத்தோடுகூடிப் பூரணமாகையால் அதனுக்கும் மகத்பரிமாணமல்லது மற்றைய பரிமாணங்கள் கூறுதல்கூடாது. அங்ஙனமெனின் உள்ளதன்றி இல்லது ஒருகாலும் உண்டாகாமையின் முத்தியில் விபுத்துவமுடைய ஆத்மாபந்தத்திலே அஞ்ஞானத்தினால் ஆர்ப்புண்டது ஒளபாதிகமாதலின் கருமத்தளவில் அணுபரிமாணமாயும், மத்தியபரிமாணமாயும் கற்பிக்கப்பட்டு விளங்காநிற்கும்; பரமார்த்தம் மகத்பரிமாணமே என்பது துணிவு. மேல் தனது உண்மை விபுத்தன்மையானது அறிதற்கு இம்மட்டாலமையுமோவெனின்? தான் முற்பழகிவந்தவாசனைகளை நீங்கவேண்டுமென்று மேற்கூறல்; ஞானவடிவமாயிருந்துள்ள தனதுண்மையைச் சற்றுந் தெரியவொட்டாமல் அநாதியே மறைத்துநிற்கும் அஞ்ஞானதிபாசங்களை வேரறக் களைதற்குத் தன்னோடு பழகிப்போந்த சகலவாசனையும் பற்றறவிடுவாய். இதற்குப் பிரமாணம் பிரமகீதை, "ஆதலால் வீடதனிலாசை யுள்ளோனதின் மிகவுந் தாற்பரிய னாகிமுன்ன, மோதும்வா தனைகளெலா மிகந்தெப் போது முற்றபர மாத்துவித ஞானி யாவான், வேதவேதாந்தங்க ளுரைக்கப் பட்ட மேலான வத்துவித ஞான மான, நாதனும் பிரமத்தை நவில லாமோ நாமௌனத் திருப்பதலா லாகத்தீரே" எ-ம், ஒழிவிலொடுக்கம், "சுகாதீகம் வேண்டித் தொழில்செய்வோமென்று, னகாரோ துயில்வார் நடந்தோ-விகாரமெனச், சாத்திரமும் பூசைச் சமாதிகளுஞ் சார்போதக், கோத்திரங்காண் மாயக் குழாம்"

எ-ம் மற்றும் வருவனவற்ருற் காண்க. மேல் கைவந்த சுகாசனத்தி லிருந்து உண்மை நிஷ்டை கூடு முறைமை கூறல்:—முத்திவிலக்கெ ன்று இங்ஙனங் கூறப்படுஞ் சகலவாசனையும் மாசற வொருங்கே நீத் தனையாயின் மேற்சமாதி கூடுகைக்குச் சுகாசனத்திலிருந்து ஐம்பொ றிகளோடு கூடிச் சத்தாதி விஷயங்களைக் கவராநிற்கு மனத்தினை அவற்றினைவிட வுள்ளேவாங்கிப் பின்பு அவற்றின் வழிபோகாமல் நெஞ்சிலேவைத்து அவ்விஷயவாசனைகளும் எழாதபடி அடக்கவேண் டும். இதற்குப்பிரமாணம். பிரபுலிங்கலீலை, "இந்தியமோரொன் ருவிட் டிடின் மற்றை யொன்றுசாரு, முந்திய மனம மிழ்ப்ப முற்றும்போ டிணிய பாம்பி, னைந்தலை களினுளொன்றை யரிந்திடின் மற்றொன் ருலஞ், சிந்திடு மிடற ரிந்தாற் றீர்ந்திடு மொருங்கு மாதோ" எ-ம், சிவாநந்தமாலை, "பூதஞ் சுழலும் பொறிபுலனந் தக்கரணம், போதங் கழித்துநாள் போக்காதே, போதச்-சிறையா நிறைவகலச் சின்மயனே யத்தே, நிறையா நிறைவாகி நில்" எ-ம் வரும் மற்றும் வருவனவற்ரு ற்காண்க. சஞ்சலமற்றகண்டபூரணமாய்ச்சித்தந் ததாகாரமாவதன்றே சமாதியோகம் உஞ்சலை யொத்தலைவதுதன் சுபாவமாகி யொருக்ஷணத் திற் பலவுலகாயுதிக்குமிந்த நெஞ்சகம் வத்துவிலசையா நிவாததீபநிலை யடைவதெங்ஙனெனின்? மீண்டுமீண்டுஞ் சித்தத்தைச்சற்றுமசையாத வண்ணம் தனக்குட்படுத்தி அடக்கக்கடவது; அங்ஙனமடங்காது அசைந்து ஒருபொருளைப்பற்றுமாயின்,பற்று முதிர்ந்து நிச்சயிப்பதற்கு முன் விவேகத்தால் உடனுடனழித்து முன்பற்றி நின்றநிலையே பற் றிநிற்கக்கடவாய்: அப்பொழுது பேய்போன் றுழலாநிற்கு மனமிறந்தி டும். இ-ம், தேவிகாலோத்தரம், "பற்றினுற் சலிக்கு முள்ளம் பற்ரு மற் பண்ணிக்கொள்க, நிற்றலின் றெனினுந் தத்வ நிலையினி னிறுத் திக் கொண்டாற், பெற்றன மென்று பேணிப் பின்னைப்பே ராமற்

காக்கும்,நற்றவ ரன்றி யிந்த வுலகினி னல்லார் யாரே'' எ-ம், ஞானவாசிட்டம், ''எங்கே யெங்கே மனமோடி யிளையோரென்ன வீழ்ந்தழுந்து, மங்கே யங்கே நின்றெழுப்பி யகண்டவறிவி லடைவிப்பாய், சங்கே தமதா யிவ்வாறு சாதித்துளமாமதகரியை, வெங்கேதமறத் தளைத்தெல்லா விசாரத்தாலும் வீடணைவாம்'' எ-ம் மற்றும் வருவனவற்றுற்காண்க. குரங்கினம் போன்றசித்தமாயினும் ஒருகால் தனது வசப்பட்டுத்தத்துவத்தினின்று பின்னசையிற் பாதகமின்றேயெனின்? அசைவொழியாதசித்தம் தெய்வகதிபால் யாதொருகாலத்து அசைவொழிந்தடங்குமாயின் பின்னர் அசையாதபடி அதன்கண் அசைவு பிறப்பித்தற்குரியன எவையேனும் அவற்றையறிவினது வீரப்பாட்டால் அக்கணமே நீக்கித்திடசித்தம் பண்ணுவதே புருஷார்த்த ஸபலமாம். இ-ம், அருட்பிரகாசம்,''கடைதரு தீப்புகை கால்வருத்தங்கொடுகைநெகிழ்ந்து, விடினவிந் தாக்க வொணுத்துய ரெய்தலின் வெம்பொறிவாய், படர்தரு சித்த மொருகா லடங்கிற் பிணைப்படாத், தடைசெயல் வேண்டும் படர்ந்தா லெவர்பின் றடுப்பவரே'' எ-ம், ஞா-ம், ''இப்பிறவிமயக்கமெனு மாழித்தேர் சங்கற்ப மென்னுமச்சைச், யசப்பமுறத்தடைசெய்தாலோடாது மனவச்சுச்சிறிதசைந்தாற், றுப்புறவார் தடுத்தாலுந் தடைபடாதறிவு வலிசூக்கஞக, மெய்ப்புருட வருத்தங்கடைக்கொண்டே தடைசெய்யவேண்டுமென்றே'' எ-ம் வரும் மற்றும் வருவனவற்றுற்காண்க.

சித்தசலன மற்றவிடத்துக் கேவலாவஸ்தைவந்து பொருந்துமேயெனின்? விகற்பவுணர்வாகிய சித்தசலன மற்றிருந்துள்ள அவ்விடத்தில் அறியாமையாகிய கேவலமும்வந்து பொருந்தாமல் தனது சுபாவவறிவோடுங்கூடி இரவும்பகலும் இடைவிடாது சாதகஞ் செய்வாயாகில் அங்ஙனம் உனக்குமேலாகிய பரம்பொருளே தோன்றும்; இ-ம்

திருமந்திரம், "பொங்கு மிருணீக்கும் புண்ணியக் கூத்தனை, யெங்கு மாய் நின்றாடு மேகம்பக் கூத்தனைக், சங்குல் பகலினுங் காணாத கூத் தனை, யிங்கெ னிடமாக யான் கண்டவாறே" எ-ம், சிவஞான சித்தி யார், "அறியாமையறிவகற்றி யறிவினுள்ளே யறிவுதனை யருளினு லறியாதே யறிந்து, குறியாதே குறித்தந்தக் காணங்க ளோடுங் கூடா தே வாடாதே குழைந்திருப்பை யாகிற், பிறியாத சிவன்றானே பிறிந்து தோன்றிப் பிரபஞ்ச பேதமெலாந் தானுய்த் தோன்றி, நெறியாலே யவையெல்லாமல்லவாகி நின்றென் றுந்தோன்றிடுவ னிராதாரனுயே" எ-ம், மோகவதைப்பரணி "ஒழித்தே யுள்ள முணர்வடைய வொ ழியா வொருவன் வருமளவும், விழித்தே யுறங்கும் விளங்கிழையீர் மேவுங் கபாடந் திறமினோ" எ-ம் மற்றும் வருவனவற்றாற்காண்க.

இந்த நிஷ்டையினும் முத்தி வேறாயிருக்குமோவெனின்! அதற் குக்கூறல்; — அங்ஙனம்சுத்தாவஸ்தையிற்றோன்றிய பாத்துடன்காண் பானும், காட்சியும் இன்றி வேறறக்கலந்து நிற்றும் அச்சிறப்பினையு டைய நிஷ்டையே அத்துவிதமாகிய முத்தியெனப்படும். இ-ம் பிரபு லிங்கலீலை, "ஞேய ஞானஞா திருவெனு மிவைபல நிற்க, மாயின் வேறறு முத்தி யன்றதுசக மாமென், றேயு மாறிது வ்துவெனுஞ் சுட்டிலா வியல்பை, மாயை மாறிய தேவிபா லருளினன் வள்ளல்" எ-ம், சிவாநந்தமாலை, "மித்தையுடற் கட்டறுத்து மெய்யருளாய் மெய் யொழிக்குங், தத்துவமுங் கேவலமுஞ் சார்வகற்றிச் சுத்தத், தனியாகித் தானும் போய்த் தற்பரமாய் விட்டாற், செனியா னிது சத்தியம்" எ-ம், நெஞ்சொடுமகிழ்தல், "நீரொடுதெண் ணுலிவிண்டு நீரான வாறே போலுமொடுபே ரில்லானோ டொன்றிணுய் நெஞ்சமே" எ-ம் வரும் மற்றும் வருவன வற்றாற்காண்க.

இந்நிலையினின் றுணர்ந்து சிறிது நினைப்புற்ற வாக்கினுற் சிறிது சூசகமாயாவது புகலொணுதோ வெனின்? அதற்குத்தரம்; இந்நிலை ஆத்மாவின் தற்போதத்தைக் கெடுத்துச் சிவத்தோடு இரண்டறக்கலப் பிக்குமாதலால் நிஷ்டை பலவாகக் கூறும் எவர்கட்கும் விரோதமு மின்று: அன்றியும், காண்பானும், காட்சியும் இறந்து அத்துவிதமா கிய பாசுகாதீதநிலையை இவ்வண்ணமிருந்ததென்று இங்ஙனங்கூறு வது எங்ஙனம்? அந்நிலை வேதாதீதமாதலின் தற்போத நிஷ்டையில் பேதமன்றி அவ்விழப்பில் எம்மதஸ்தர்கள் விரோதமு முண்டாகாது என்பதற்குப் பிரமாணம்- சிவாநந்தமாலை, "நாலாய நற்பதமு நல்ல வவுத்திரியு, மாலாய தந்திரமு மந்திரமு—மேலாய, சிற்போத வுண்மை த்தெரிசனமு மெல்லாமுன் றற்போத நட்டமெழத்தான்" எ-ம், வீரா கமம், "வேத வாகமமுந் தீக்கை விதிகளுஞ் சரியை யாதி, மேதகு பாத நான்கு மிகுபத முத்தி நான்குந், தீதின்மா ணவக மற்றுஞ் செப் பிய வனைத்து முன்றற் போதநீ ருக நாதன் புந்திசெய் தமைத்தவா மே" எ-ம் வரும் மற்றும் வருவனவற்ருற்காண்க. அத்துவிதநிலைவச னுதீதம் என்பதற்குப் பிரமாணம்- திருமந்திரம், "முகத்துக்கண் கொண்டு பார்க்கின்ற மூடர்கா, ளகத்துக்கண் கொண்டு பார்ப்பதே யாநந்த, மகட்குத் தாய்தன் மணாளனே டாடிய,சுகத்தைச் சொல்லென் ருற் சொல்லுமா றெங்ஙனே." எ-ம், தேவாரம், "மைப்படிந்த கண் ணளுந் தானுங்கச்சி மயானத்தான் வார்சடையான் மாசொன் றில்லா, னெப்புடைய னல்ல னொருவனல்ல னோரூர னல்லனோ ருவமனி ல்லி, யப்படியு மந்நிறமு மவ்வண்ணமு மவனருளே கண்ணுகக் காணி னல்லா, லிப்படிய னிந்நிறத்த னிவ்வண்ணத்த னிவனிறைவ னென் றெழுதிக் காட்டொ ணுதே" எ-ம். பிரமகீதை, "ஒழிவிலாப் பரமயோ கிய ரனுபவமுள்ளவா றுரைத்திடவெனக்கோர், வழிபெறே னெடு

மான் மகேசன்மா முனிவர் வானவருரைத்திட மாட்டார், விழிமி குஞ் சிவனுல் விஞ்சையாஞ் சிவையால் விளம்பவும் படாதது விளம்பு, மொழியெலாம் வந்து மோன பாவத்தே முடியுமந் நிலமதே முடிவு" எ-ம், சிவாநந்தமாலை, "சொல்லுவான் சுட்டுவான் போனசுகா தீதத் தைச், சொல்லுவா யென்றுலென் சொல்லுகேன்-புல்லிவிடா, வண் மைக்குஞ் சேய்மைக்கு மப்பாலா மத்துவித, வுண்மைக்கோ ருத்தர முண்டோ." எ-ம், ஒழுவிலொடுக்கம், "சத்தாதிதத்துவம் போய்த் தானுமெதி ருங்கழன்றுற், சித்தாந்த வேதாந்தச் செம்மையிலே - முத் தி, யநிர்வசன மின்ப மதீதமெனி லாங்கே, பினமிடுதல் கன்மம் பிளாய்." எ-ம் மற்றும்வருவனவற்றுற்காண்க.

தற்போத நிலையில் சிவந்தோன்ருது உலகு தோன்றுவதும், தற் போத மிழந்தநிலையில் சிவந்தோன்றி உலகுதோன்ருததும் எதனுலெ னின்? அதற்குத்தரம்:—தற்போதமுடைய பெத்தர்க்கு உலகமேயன் றிச் சிவந்தோன்ருததுபோலப் பேரருளினைநீங்காது தற்போத சூநிய மானவிடத்துச் சிவமேயன்றி உலகந் தோன்ருது; அச்சிவமன்றி வேறோர்பொருள் பரமார்த்தமாக வின்மையால் (சிவம் சர்வாத்மசொ ரூபம் என்றபடி) இ-ம் பிரமகீதை, "தன்னில்வேறிலா மையிறபர முத் தியிற் றனதுபுத்தியினுலே, யன்னியங்களாய்த் தோற்றுமா பாசர்க் கும் பரபதம றிகின்றுன், முன்ன மெப்படி மூடமாந் தசையிற் றன் மோகத்தா லெலாம்பெத்த, மென்ன வுற்றனன் முத்தியு மப்பரிசிருக் குமதியல்பேயாம்" எ-ம், சிவப்பிரகாசம், "அகம்புற மென விரண்டா லருச்சனை புரியு மிந்தச், சகந்தனி லிரண்டு மின்றித் தமோமயமாகி யெல்லா, நிகழ்ந்திட மகிழ்ந்து வாழு நீர்மை யார் போல ஞாநந், திகழ்ந் தகம் புறமெனுத செம்மையோர் நன்மை யோரே." எ-ம், சிவாநந்தமா லை "நின்செயலற் றெப்போது நம்முடனே நிற்றநிலை, யுன்செயலற்

ஶ்ருதியிட வுற்றக்கேள்- ளென்சுவடங், கொன்றமற வொன்றாகி யொத்துடனுன் பந்தத்தி, னின்றதுபோன் முத்தியிலு நில்" எ-ம் வரும் மற்றும்வருவனவற்றாற்காண்க.

ஆயின், சிவம் சர்வான்ம சொரூபமெனப் பாவிக்கலாமே யெனின் ? அதற்குத்தரம்;—உள, இல என்பனவெல்லாப் பொருள் களும் சிவமேயென வெண்ணுமிடத்து அதுவும் நின் போதமாதலின் உண்மையன்று: எவ்விதத்தேனும் நின் போதம் எழாம லடக்குதலே உண்மை நிஷ்டையாம்: நாநாவிதமாகி யெழும் ஆத்மபோத மியாவு மடங்குக வென்றபடி. இ-ம்—சிவாநந்தமாலை, "பற்றிலிழப் பாயகலும் பார்க்கிலிவ னுண்டாகு, முற்றணரில் வேறாத மொன்றமெனின்- முற்றும், பிரியாப் பொருள் பிரியும் பேசுமுறைக், குறியாக் குறியாங் குறி" அன்றியும், "கண்ட வறிவு கடமே யெனிலதமங், கண்டழித் துக் காணாமை காணுமது- கொண்டுணரின், மத்திமமே யந்த வகுப் பொன்றுங் காணாத, துத்தமமா மென்றே யுணர்" எ-ம், ஒழிவிலொ டுக்கம், "கட்டியநாண் விட்டாலுங் கந்தகலாக் கன்றுகளைத், தட்டிப் புறப்படுத்துந் தன்மைபோ- லொட்டொழித்து, நின்றாற்போ னீசிவ மாய் நில்லென்று நீக்கமறத், தொன்றாக்கி லொன் றிரண்டாகும்." "குரங்கை நினையா திருமென்று கூறத், திரும்பி யதுவே தியானம்- வருங்கதைபோ, னீசிவமாய் நில்லென்றா னீங்கியதுவா நினைந்து, மாய்வையபது வன்றோ மலம்." எ-ம், மற்றும் வருவனவற்றாற்காண்க.

பாவனைக்கதீதமாகிய உண்மை நிஷ்டையாது? எந்நூலுக்குஞ் சம்மதமானது யாது என்னின்? உன்னுடைய நினைவிறந்து நின்ற விடமே: அஃதொருசற்றண்டேனும் அதுவேபாவனையென்ற சொல்லப்படும்: எல்லாநூல்களினது துணிவும் இதுவே. இ-ம், சிவப்பி

ரகாசம், "பாவிக்கின் மனுதி வேண்டும்பயனில்லை கரண நீத்துப், பாவிப்பனென்னி லென்னைபழுதுள பாவகத்தாற், பாவிக்க வொண்ணுனென்று பாவிப்பனென்னி னீயென், பாவிக்க வேண்டா வாண்டபரனருள் பற்றி ஞோர்க்கே". எ-ம், ஒழிவிலொடுக்கம், "குறங்குகுத்திக் கொண்டு குரோக்கைகத்திக் கூட்டை, மறந்தழைத்தாற் றூக்கம் வருமோ-வெறுங்கெடுவீர், தன்னை யழித்தெழுந்த சச்சிதா நந்தத்தை, யுன்னி லொழித் துவிடாதே" எ-ம் வரும் மற்றும் வருவன வற்றுற் காண்க.

சகலகரணங்களுமிறந்த சுத்தாவஸ்தைக்கும், கேவலாவஸ்தைக்கும் பேதமின்மையின், சுத்தாவஸ்தையெனப் பெயர் வரக்காரணமென்னையோ வெனின் ? அதற்குத்தரம்;—சகலகரணங்களும், ஆத்மபோதமும் அடங்கின விடத்துத் தோன்றுகிற்கும் சுத்தாவஸ்தையும் உயிர்கட்குச்சககசமாயுள்ள கேவலாவஸ்தையென்றே எண்ணப்படினும் அக்கேவலத்திற்குண்டாகிய பேரிருளொன்று மின்மையின் இது சுத்தாவஸ்த்தை யென்னும் பேருடைத்து இ-ம், கந்தாலங்காரம், "வரையற் றவுணர் சிரமற்று வாரிதி வற்றற்செற்று, புரையற்ற வேலவன் போதித்தவா பஞ்சபூதமுமற், றுரையற் றுணர்வற் றுடலற் றுயிரற் றுபாயமற்றுக், கரையற் றிருளற் றெனதற் றிருக்குமக் காட்சியதே" எ-ம், மோகவதைப்பரணி, "யாதுமா யறிவிறந்த விருளொன் றுமிலதே, யாதுமா யறிவிறந்த வொளியொன் று முளதே" எ-ம் வரும்மற்றும் வருவனவற்றுற் காண்க.

இதுகாறுங் கூறிவந்தவுண்மை நிஷ்டையிலிருந்தும் துவிதபாவனை தோன்றுமாகில் அஃதொழிந்து முன்னிலை கூடுதற்குமேலும் ஒருபாய நிஷ்டைகூறல்;—கூறிய சகசநிஷ்டை பதியாவிடில் அங்ங

னந் தோன்றிய நினைவு அநேகபாவனைகளைப்பற்றி மயங்காமல் எல்லாப்பாவனைகளுந் தன்னுள் அடங்குவதாகிய ஏகபாவனையைப் பற்றி நின்று அப்பாவனை முதிர்ந்து மற்றொருபாவனையுந் தோன்றாதவிடத்து அதனையும் மெள்ளமெள்ள நீக்கவே முற்கூறியவுண்மை நிஷ்டைகைகூடும். அதனையு நீக்கவே என்றது, மேற்கூறுவனவாகிய உபாய நிஷ்டைகளுக்கு மொக்குமெனக்கொள்க. இ-ம். சிவதருமோத்தரம், "நீங்கின ரிந்த வுண்மை நிலையினை நெஞ்சந் தன்னிற், றாங்குக சகளந் தன்னைச் சங்கரன் றன்னை யுன்னி, நீங்குக சகளந் தன்னை முன்னையி னாரிலை யினீக்கும், தாங்தக திரிபிற் பின்னுஞ் சகளமா தரிக்கை சூழ்ந்தே" எ-ம; திருக்களிற்றுப்படியார்-"சார்புணர்ந்து சார்பு கெடவொழுகி னென்றமையாற், சார்புணர்வு தானே தியானமுமாஞ்-சார்பு, கெடவொழுகி னல்ல சமாதியுமாங் கேதப், படவருவ தில்லைவினைப் பற்று" எ-ம் மற்றும்வருவன வற்றாற்காண்க.

எல்லாப்பாவனைகளுந் தன்னுளடங்கும் அந்த ஏகபாவனை யாதென்னின்? அதற்குத்தாங் கூறல்;—பிருதிவியாதி அஷ்டமூர்த்தமும், அவற்றிற்குப் பரமாகியுள்ளனவும், பின்னும் வாக்குமனத்திற் கெட்டுவனவும், எட்டாதனவுமாய் விரிந்து நிற்பது ஒருசோதியேயவே றொரு பொருளுமில்லை யென்று பாவனை பண்ணுவாய். இ-ம். திருமந்திரம், "தானே கடன்மலை யாதியு மாய்நிற்குந், தானே திசையொடு தேவரு மாய்நிற்குந், தானே யுடலுயிர் தத்துவ மாய்நிற்கும், தானே யுலகிற் றலைவனு மாமே" எ-ம். 'எங்குந் திருமேனி யெங்குஞ் சிவசத்தி, யெங்குஞ் சிதம்பர மெங்குந் திருநட்ட, மெங்குஞ் சிவமா யிருத்தலா லெங்கெங்கு, தங்குஞ் சிவனருட் டனவிளை யாட்டே" எ-ம, தேவாம், "அருந்தவர்க டொழுதேத்து மப்பன் றன்னை யமரர்கடம் பெருமானையரனை மூவா, மருந்தமரர்க் கருள்புரிந்த மைந்தன் றன்னை மறி

கடலுங் குலவரையு மண்ணும் விண்ணுந், திருந்தொளிய தாரகையுந் திசைக ளெட்டுந் திரிசுடர்க ளோரிரண்டும் பிறவுமாய, பெருந்தகையைப் பெரும்பற்றப் புலியூ ரானைப் பேசாத நாளெல்லாம் பிறவா நாளே.'' எ-ம்-திருவாய்மொழி, "ஏகமூர்த்தி யிருமூர்த்தி மூன்று மூர்த்தி பலமூர்த்தி, யாகியைந்து பூதமா யிரண்டு சுடரா யருவாகி, நாகமேறி நடுக்கடலுட் டுயின்ற நாராயணனேயுன், ஞாசமுற்று மகத்தடக்கி யாவி யல்லன் மாய்த்ததே'' எ-ம், சிவஞானதீபம் "அத்துவா வடிவாமெம் மிறைமுடிதான் கலைக-லாந்தாகுஞ் சாந்திமுத லானநான் குரமாம், வித்தைமுதன் மூன்றிரண்டாம் பிரதிட்டாதி யுந்தி-வியன் பாத நிவிர்த்தியதா மிளிர்துவக்கக் கரங்கள், வைத்தபுவ னங்கண்மயிர் மந்திரங்க ளெய்த்தோர்-வளந்திகழும் பதங்களருந் தசையாகு மதித்த தத்துவங்கள் சுக்கிலமோ டத்திநிண மூளை-சத்திகடா நேத்திரமூவைந்தாமித் தகையே'' "அநுக்கிரகஞ் சதாசிவன்றா னதைத்தா லுளத்தி-லருமறைப்புச் சிந்தையினில் விந்துவினான் மகேசன், றனித்த மனத் துருத்திரன்றான் மகாரத்தா லழித்துந் துழாய் முடியோன் புத்தியினின் றுகாரத்தா லளிக்கும், பணிப்பருமை னகாரத்தா லகங்காரம் பொருந்திப்-படைத்திடுவ னோங்காரப் படிவமுமா மதனு, லனைத்துலகு மிலிங்கமய மாமெவையு மிதுவே-யாச்சியளித் தழித்துமறைத் தநுக்கிரகஞ் செயுமே'' எ-ம், திருவம்மானை, "பார்த்தவிட மெல்லாம் பரமேசா னம்மானை, பாரால மிங்நாளும் பாழ் பட்டே னம்மானை'' எ-ம், நெஞ்சொடு மகிழ்தல் "பார்த்தவிடந் தோறும் பரந்துபரஞ் செஞ்ஞான்றுங், கோத்திருந்த பாழ்தனிலே குடியிருந்தாய் நெஞ்சமே'' எ-ம், பிரமகீதை "இன்னதென்மற் றன்னிடைக் காணத்தன்னை யெப்பொருளினுங்காணு, மந்நிலையடைந்தா லவன்பிரமத்தை யடையும் வேறொன்றினாலடையான், றன்னையு மோங்காரத்தையு மரணி

யாக்கியத் தத்தவஞான, வங்கியைத் தியானமதனம் விட்டெழுப்பு மதியினுர்வன்பவஞ்சேரார்'' எ-ம், வாசிட்டம் ''கரையறு பரமாகாசங் கதித்தறப் பெருத்தகண்டம், புரையறுமதன் கீழெல்லையற்ற விண் பொற்றுட்கஞ்ச, நிரையின் முடிவிறிக்கு நீண்டறவுயர்ந்த தோள்க, ளுரையுயர் நானாலோகமொளி கொளாயுதங்களாமே'' அன்றியும், ''எண்ணில் கோடிபிரமாண்ட மிதயத்தொரு பாலிளைப்பாறும், வண்ண வொளிசேர்பர விசும்பின் பாராபார வடிவிதுவாங், கண்ணன் பிரமன் சிவன் மகவான் முதல்வான வரார் கவின்பெறு மிவ்வண்ணல் வடிவிலு ரோம நிரைபாகு மிந்தவனைத்துயிரும்'' அன்றியும், ''விவிதாரம்பம் புரிவன வாயுலசாம பொறியின் வினைக் கபிருய்த், தவிரா விச்சை முதற்பலவாஞ் சத்தியவன் மேனியிற்றங்த, மவிராநின்ற விவன் பரமதேவென் றறிந்தாரருச்சிப்போர், செவிதாஞ்சின் மாத்திரமாதேனுபவித்திகழான்மா'' எ-ம் மற்றும் வருவனவற்றுற் காண்க.

அஷ்டமூர்த்தமும் சிவமேயென்று வேதாசிகள் கூறினும் உலகின்கண் வரைந்து நீக்குவனவாகிய தீயனவற்றையும் அங்ஙனம் காணுதல் கூடுமோ வென்பாரைப்பற்றி மேற்கூறல்:—ஜகத்துக்கு பாதான காரணமாகிய மாயை நித்திய பூரண நிமித்தகாரணமாகிய சிவத்தினிடத்திலே நின்று மகிர்வசநியமாகத் தோன்றி அதனையே கலந்து கொண்டிருத்தலால் அச்சிவத்திற்கு அம்மாயையை அந்நியமென்று சொல்லார் அறிவுடையோராதலின் மாயையினுண்டாகிய புவநகோடிகளின் ஒவ்வொருபதார்த்தங்களை இது நன்று, இது தீது என்று கூறுதல் கூடாது; அவையுஞ் சிவமே யாதலின். அஃதெங்ஙனமெனின்? மாயையைச் சிவத்திற்குப் பேதமென்றும், அபேதமென்றுங் கூறுவாருளராயினும் முத்திதசையில் அனைவர்க்கும் அபேத மென்பதே

திண்ணம்; அஃதெப்படியென்னில்? பேதமென்று காண்பார்க்குஞ் சுத்தசித்தாகிய வஸ்து பூரணனாகையால் வேறொரு மாயை உண்டாயினும் அவனிடத்துநின்று மகிர்வசநியமாய்த் தோன்றி அவனையே கூடி நிற்பதல்லது அந்நியமாய்த் தோன்றுதற்கும், நிற்றற்கும் இடம் இன்மையாலும், உப்பளத்தில், கனலில், பரிசநவேதியாதியில் கூடிய திருணாதிகள் தத்தந்தன்மை கெட்டு அவற்றினது தன்மையாய் விளங்குதல்போல மாயையுஞ் சிவமேயாய் விளங்காநிற்ப தாதலினாலும் அச்சிவத்தின் கண்ணே தோன்றாநிற்கிற ஓசையாதி விஷயங்களை இதுநன்று இது தீதென்று பற்றுதல், விடுதல் கூடாது: கூடுமேல் பூரண நிஷ்டையுங் கூடாது. இஃதன்றியும், ஒரொரு காலதேசங்களில் நிருமலபாவனை பற்றித் தீயனவற்றையும் நல்லனவெனக் காணாநிற்கிற அபரிச்சின்ன நிஷ்டைகளுங் கூடாது: காலதேசங்களும், அவைகளிற் காணப்படுகிற பொருள்களும் மாயையாதலின். இஃதன்றியும், நன்மை தீமைகளாய் விளங்காநிற்கும் புவந போகங்கள் தம்மதீநமாகிய தநுகரணங்களை யடைவது ஒழிந்து நிரவயவனாகிய ஆத்மாவைப் பற்றாமையாலும், ஒருவன் தனக்கு அந்நியமாகப் பற்றிய சரீரத்தினும் இகழப்படுபொருள் வேறின்மையாலும், ஈசுவர கற்பனையாகிய ஒருவகைப் பொருளிலே பேதந் தோன்றுதல் சீவகற்பனை யாதலினாலும் கற்பனாரகிதமாகிய பூரணநிஷ்டைக்கு அஃதில்லையென்றதெனக் கொள்க.

மாயாப்பிரபஞ்சமெல்லாஞ் சிவத்திற் றோன்றி யொடுங்குதலின் அம்மாயையும் சிவத்திற்கு அந்நியமாகாது என்பதற்குப் பிரமாணம்: தேவிகாலோத்தரம், "புறனகங் கீழ்மேல் பக்கம் புணர்வதோர் பொருளுமில்லை, திறனுடை யுருவமெல்லாந் தானாகித் தேக மின்று,

யறன்முறை யடங்கு ஞான யோகினு லறியப்பட்ட, விறன் மலி ஞானானந்தமேன்மையால் விளங்காநிற்கும்'' அன்றியும், "கன்மபலமே துமிலை சுபாவமே காணுங்காற், றன்மையுல குயிரில்லை தோன்று வதெலாஞ்சத்து, நன்மையினைத் தோன்றுவித்துப் பற்றிலதாய் நணு கரிய, தென்னவறிந் தானுலத மிலதாகிச் சுத்தனுமாம்.'' எ-ம், பிரம கீதை, "எப்பொருளு மாயையினு லெனச்சிலவ ரியம்புவர்கண், மெய்ப்பரமன் றனையொழிய வேறொருமா யையுமில்லை, யொப்பரிய பரனொழிய வொருமாயை யுண்டாகி, லப்பரமன் றன்பெருமைக் கதுநேரேயழிவன்றோ.'' அன்றியும், "ஒழிந்ததொரு பொருளில்லை யுள்ள தெல்லா மவனேமுன், கழிந்தபொருண் மேலும்வாக் கடவபொருடானுமவன், மொழிந்ததனி பலவிச்சை யவிச்சை யெனுமுற்றுமவ, னிழிந்தபிறப் பறவேறோர் வழியில்லை யிவனொழிய.'' எ-ம், வாசிட்டம், "அயனொடு மால்சங்கரனுஞ் சதாசிவனு மிந்திரனு மருக்கன்றானும், வியனிலுப சாந்தராம் வேலையினி லுபாதியெலாம் விட்டுநீங்கிப், பயனில்சக மென்கின்ற பற்றகன்று சின்மயமாம் பரமரூப, முயர்விகற்ப மிலாவடிவா யெங்கு நிறைசிவமாகி யொன்றாய்நிற்கும்.'' அன்றியும், "நனிமெய்யா மாயையில தென்றிவ் வாறு நாடுவாய் ஞானியாய் ஞானம்பெற்றாற், றனிசெயு மீதுளமாயை யறிதியன்றே துகளிலா நற்போதந்தோன்று மட்டும், பனிமாயை யில்லையென வென்சொல்லாலே பழுதிலா வுறுதியுறப் பற்றிநிற்பாய், புனிதமுறு பிரமமே யெல்லா மென்று புந்தியிற்கண் டோர்முத்தி பொருந்தினோரே.'' எ-ம், சிவானுபூதி விளக்கம், "பதிபசுபாசப் பரப்பறிந்து பார்க்கப், பதிபசு பாசப் பரப்பா யிருந்ததே'' அன்றியும், "பார்த்தே னுலகப் பரப்பெல்லாம் பார்த்தளவிற், பேய்த்தேர்போ லில்லையாப் போறிவே கண்டனமே.'' எ-ம், திருவம்மானை, மெய்யான தொன்றுமே மெய்யான

தம்மானே, மெய்யன்றி மற்றெல்லா மித்தைகா ணம்மானே.'' எ-ம் வரும் மற்றும்வருவனவற்றுற்காண்க.

பிரபஞ்சமெல்லாஞ் சிவமேயாதலின் இப்பிரபஞ்சத்தின் கண்ணேதோன்றிய பொருள்களில் யாதொன்றையும் இது நன்று, இது தீதென்று பற்றுதல், விடுதல் கூடாதென்பதற்குப் பிரமாணம். திருக்கடைக்காப்பு, ''குற்றநீ குணங்கணீ கூட லால வாயிலாய், சுற்றநீ பிரானுநீ தொடர்ந்தி லங்க சோதிநீ, கற்றநூற் கருத்துநீ யருத்த மின்ப மென்றிவை, முற்றுநீ புகழ்ந்துமுன் னுரைப்ப தென் முகம் மனே.'' தத்துவராயர், ''நிகழ்கின்ற வெல்லாமு நின்மலமே யானு, லிகழ்கின்ற வேறுதா னியாதோ-புகழ்பின்றி, நாடப் படாவெங்க ளையனார் சீர்பாதஞ், சூடப் படாதார்தஞ் சொல்.'' எ-ம், பகவற்கீதை ''நன்றே ஞான வருமறைபோ னன்னுயர்நா யிறைச்சி தனைத், தின்றேயுழலு மவனியானை யாவென் றிந்தத் திறத்தெல்லா, மன்றே யொன்னு தாமென்னு தறிவாய் நின்ற வெனையெங்கு, மொன்றே யாகக்காண்பானிவ் வுடம்போ டிருந்தே யுடம்பறுப்பான்.'' எ-ம், பிரமகீதை, ''தீதெனும் பொருள்க ணன்றெனும் பொருள்கள் செய்யலா வனை செயப்படாத, வேதமா மூடல மிந்தியம் பிராண னிசைமனம் புத்தியாங்காரங், தீதுறு காமங் கோபமே முதலாந் தியன சாந்திதாந் திகளே, யாதியா நலங்க ளடையவுந் தானே யாகியே தோன்றுமெய் யருளால்.'' எ-ம், அருட்பி-ம், ''தெளியும் புழுவு மலமும் பொதியூ ழலுமிமல, வொளியின் வடிவென மீவேவேத மோதுத லோர்ந்துமுண்மை, தெளியும் பரிசில னுப்பச்சிவ மன்றிது வென்னவொன்றை, யெளியொன் றினைப்புகழ் வோனையு ஞானிய னப்படுமே.'' எ-ம், நெஞ்சொடுமகிழ்தல், ''உள்ளும் புறம்பு மூவட்டாத வானந்தக், கள்ளருந்தி நின்ற களிப்பென்கொ னெஞ்சமே'' எ-ம் வரும்மற்றும் வருவனவற்றுற்காண்க

இந்நிஷ்டைக்கண் யான், பிறர் என்னும் விகற்பங்களே தோன்றுமாயின், அவற்றினுலுறும் பயனியாவை? அவை நீங்க எவ்வுபாயஞ் செயற்பாலதெனின்? அதற்கு உத்தரங் கூறல்:—இங்ஙனங் கூறிய நிஷ்டைக்கணின்றும் யான், பிறரென்னும் விகற்பங்கள் தோன்றுழிச் சுகதுக்க, இராகத்துவேஷ மென்னும் இருவகைத் துவந்துவங்களுங் கூடவே தோன்ற நிற்கும்; அவ்விகற்பங்கள் தோன்றாதபடி எல்லா வுயிர்கட்குஞ் சுதந்திரமின்மை தேர்ந்து உன்னையும், பிறரையுங் காணுமலே நிற்பாய்; அந்நிலை நிற்கவே, சுகாதி துவந்துவங்களுந் தோன்ருவனவாய்ப் பூரணநிஷ்டையும் கைகூடுமென்பதாயிற்று. அஃதெங்ஙனமெனின்? எல்லாச் சீவர்க்குந் தநுகரணங்களைக் கூடாதவிடத்து அறிவு உதியாமையால் அவர்கள் தாமே அவற்றினைக் கூடுகைக்குச் சத்தியில்லாமையினுலும், அவைகள் உயிர்களைக் கூடாதவிடத்துப் பிரேரகம் இன்மையவாகிய சடமாதலாலும் தாமே கூடாதவற்றினைக் கூட்டி உயிர்க்கறிவை விளக்குவான் சிவனே. நானும், பிறருஞ் சுதந்திரரல்ல மென்றும் ஒருவன் சுகதுக்கங்கள் தோன்றின விடத்தெல்லாந் தன்னையும், பிறரையுங் காணுமற் சிவனையே கண்டுநிற்கவே அச்சிவன்மீது இவனுக்குப் பிரியாப் பிரியங்கள் தோன்றுவதின்மையால் பூரணநிஷ்டை கூடுமென்றதெனக்கொள்க. இ-ம், சிவநெறிப் பிரகாசம், "தன்மைமுன் னிலைபடர்க்கை மூன்றுவிதத் தாலே சாருமுயிர்க் கறிவிப்பனிறைவனதிற் றன்மை, தொன்மையதா ஞானத்தைத் தடுத்திடுமாணவத்தைத் துரந்தெவையு முள்ளபடி தோற்றுவித்த லுளத்தே, நன்மையுடன் றீமையினை யவரவரா லறிய நல்குவது முன்னிலையா நரக சொர்க்க மாதிப், பன்மையதாம் பரலோக பாவபுண்ணியத்தின் பலமதனை நூலினு லுணர்த்திடுகை படர்க்கை" எ-ம், சிவஞான தீபம்

'சத்தமுதல் விடயத்தைப் பகுத்தறித லவித்தை தக்கதொழிற் படுத் திடுத லீசர்தொழின் ஞான, மொத்தது சா தாக்கியமாஞ் சத்திநசை யுற வே யுருசிப்பித் திடுதல்சிவந் தற்செயல் பண்ணுவதாந், தத்துவநா லென்பதுவுஞ் சடமெனவிட் டகன்றே தானறிவா காமலறி யாமை யுமா காம, லத்தனுணர்த் திடவுணரு மறிவுயிரென் றருளா லறிந்தெ வையு மிறைசெயலென் றுன்செயல்விட் டகலே'' எ-ம், உண்மை விளக்கம், "அக்கரங்கட் செல்லா மகரவுயிர் நின்றூற்போன், மிக்க வுயிர்க் குயிராய் மேவினு-மெக்கண்ணு, நில்லா விடத்துயிர்க்கு நில்லா தறிவென்று, நல்லா சமமோது நாடு'' எ-ம் வருவனவற்றுற்காண்க.

சகல துவந்துவங்களும் எதுபற்றி வருவது? அது நீங்கத்தக்க வுபாயமியாது என்னின்? அதற் குத்தரம்—உடலை முன்னிட்டே சர்வ வனர்த்தமும் விளைவதாதலால் அவ்வுடற்காவலைக் கைவிடல் வேண்டுமென்று கூறல்:—அனைத்துயிர்க்கும் சம்சாரதசைக் கண்ணு ண்டாகிய சராசர தேகங்களும், அவற்றினைப்பற்றி வருகிற சுகதுக்க போகமும், அத்தேகங்களினது நீக்கமும், உணர்வைப்பற்றி வருகிற மயக்கமும், தெளிவும் ஊழின் வலித்தன்மையாதிகளாலே கூட்டிச் சிவனே ஐந்தொழில்களையும் பண்ணுகிற்கிற அதிகாரியாதலின் யா தொன்றன்கண்ணும் யான், பிறர் அதிகாரியென்குதலையும், யான் இந்த வுடலைக் காக்கின்றேனென்னு மபிமானத்தையும் பற்றறக் கை விட்டுச் சுதந்திரனுகிய பரனையே ஒழியாது நோக்குவாம். உடற் காவல் கைவிடவே, அதன்கட் பற்றிவரு மிருவகைத் துவந்துவமுங் கூடவே நீங்குமென்பதர்யிற்று. இ-ம்-திருப்பாட்டு, தேனைக் காவல் கொண்டு விண்ட கொன்றைச் செழுந்தாராய், வானைக் காவல்கொண் டுநின்றூ ரறியா நெறியானே, யானைக் காவி லரனே பரனே யண்ணு மலையானே, பூனைக் காவல் கைவிட் டுன்னை யுவப்பா ருணர்வாரே.''

எ-ம், குகை நமசிவாயர் பாடல், "ஐயா மரப்பாவை யாடுவது சூத்திரிகன், கைவாசி யோபாவை கற்றதோ—வெய்யவினை, யென்னிச்சை யோவருணை யீசா படைத்தளிக்கு, முன்னிச்சை யன்றோ வுரை." அன்றியும், "நீயே படைத்தவுட னீகாப்பை காவென்ன, நாயேனுக் கென்பொறுப்பு நாயகனே—யாயுமறைச், சீர்கேட்குஞ் சோணகிரிச் சிமானே வைத்தவினை, நீர்கேட்க மோமரங்க ணின்று." எ-ம், சிவபோகசாரம், "அன்றே யனாதி யமைத்தபடி யல்லாதொன், றின்றே புதிதா யிசையுமோ-வென்றுஞ், சலியா தியற்றுவான் றன்னையே நோக்கி, மெலியா திருந்து விடு." எ-ம், உப்பை, "கண்ணுழையாக் காட்டிற் கடுமுண் மரத்துக்கு, முண்ணும் படித்தண்ணீ ரூட்டுவா—ரெண்ணு, நமக்கும் படியளப்பார் நாரியோர் பாகர், தமக்குத் தொழி லேது தான்." எ-ம், உறுவை, "சண்டப்பைக் குள்ளுயிர்தன் றுயருந் தத் தானருந்து, மண்டத் துயிர்பிழைப்ப தாச்சரிய - மண்டி, யலைகின்ற வன்னு யானிடத்தி லுண்மை, நிலைகண்டு நீயறிந்து நில்." எ-ம் மற்றும் வருவனவற்றாற் காண்க.

ஊழின்வழியால் வரும் இன்ப துன்பங்களைத் தம் வல்லமையால் யாவரொருவரேனும் அநுபவியாது நீக்கிக்கொளல் தகாதோவெனின்? அது தகாதென் றுத்தரங் கூறல்:—மகத்துவமாகிய பூரணத்தையும், நிர்மலனுகையால் சுதந்திரத்தையும், முழுதுணர்தலையும் உடைய பரமேசுவரன் பல்லுயிர்களது வினைகளையும், அதற்கேற்ற தநுவாதிகளையும் ஏககாலத்து உணர்ந்து ஊட்டுமாயின், அவ்வினைப் பயன்களை யநுபவியாது நீக்குவது யாவராலாவது? எவராலு மாகாதென்பது திண்ணம்! அஃதெங்ஙனமெனின்? அனைத்துயிர்க்குத் தத்தம் உபாயதந்திரத்தால் துன்பத்தைநீக்கி இன்பத்தைக் கூடவேண்டுமென்பது துணிவாதலின், பகவான் உணர்ந்து கூட்டாநிற்கும் இன்பதுன்

பங்களை ஒருவன் பற்றுதல், விடுதல்செய்வான் நினைத்தல் பழுது. அங்ஙனமன்று: எல்லா வினைகளுஞ் சிவனே கூட்டுகின்றானே அவ னை யறியாமல்வரும் இன்பதுன்பங்கள் நீங்கவேண்டாவோவெனின்? அவ்வஸ்துவுக்குச் சர்வக்ஞத்துவமும் கருத்திருத்வமும் உண்டென் பது கூடாதாய்விடும். அங்ஙன முண்டாயினும் அவ்வஸ்து அறிந்து கூட்டாநிற்கும் இன்பத்தைக் கைபற்றித் துன்பத்தை உபாயத்தால் நீக்கி விடுவேனென்னில் ? அவ்வஸ்து பூரணனாகையால் அது நீங் குதற் கிடமேயில்லை: அங்ஙனமாயினும் அவ்வஸ்துவையன்றி எழுவ கைத் தோற்றத்தும் ஒவ்வொரு சீவர்களால்வரும் இடையூறுகளை என் னுபாயத்தினாலே நீக்கிக்கொள்வேனென்னில் ? எல்லா வுயிர்களையுங் கன்மத்தளவில் இயக்குஞ் சுதந்திரன் சிவனே யாதலின், அவனையன் றி உனக்கும், பிறர்க்கும் இயந்ததல் கூடாது. இவ்வாறு சுதந்திர ஹீனராகிய உன்னையும், பிறரையும் சுதந்திரராகப் பாவித்தல் சிவ தூஷண மாதலின் ஜநநமரணங்களை ஒருக்காலும் நீக்குதல்கூடாது. ஆதலால் யாதோரிடத்தும் சிவத்தையே கண்டு யான் பிறரென்று காண்குதலை யொழிந்து எதுவரினும் எடுத்த வுடற்கு அடைத்த பொ றியளவே வந்து முடியாநிற்குமென்று தமது மனோவாக்குக் காயங் கள் அசையாமல் அடங்கிநிற்பர் மெய்யுணர்வுடையோர் என்றதெனக் க்கொள்க. இ-ம் திருமந்திரம், "செத்திலென் சீவிலென் செஞ்சாந் தணிகிலென், மத்தகத்தே யுளி நாட்டி மறிக்கிலென், வித்தக னந்தி விதிவழி யல்லது, தத்துவ ஞானிக டன்மை குன்றாரே." எ-ம், சிவ ஞாநதீபம், "சித்தமுறு நினைவுரைக டொழில் பொய் வாய்மை தீமை நலம் விருப்பு வெறுப் பின்பதுன்பம், வைத்தபசிப் பிகழ்ச்சி புகழ்தரு மந்தான மடிமுயற்சி ப்பெறுழவு வெறுவு மெலலா, மதத்னறிந் உளவி லவ ரவர்க்கு நாளு மருங்கனவு நனவினுநின் றளிப்பதோரார், தத்த மறி வானுகருங் கருத்த ராகித் தடுமாறி யுளமெலிந்து தளர்வாரந்தோ"

அன்றியும், "உடலிலிரு வினையுதவு மிதமகிதப் பயனு லுளவாகு மின்பதுன்ப முணவொழியா துயிர்க்கு, நடலைமரு ளறிவினுட னுமருந்திலதுவே நமன்றூத ருத்துவதா நணுகிடுமேல் வினையுஞ், சடமுடலம் வினைநுகரா தறிந்துயிர்தா னருந்தா தலைவனவ னவளதுவா நிலைமையினு லுயிர்கட், கிடமுடனின் றருத்துவனென் றுணர்ந்தருளா லருந்தி யிறைபணியா மெதிர்வினையு மெரிசேர்வித் தாமே." எ-ம், வரும் மற்றும் வருவனவற்றுற்காண்க.

யான் பிறர் என்னும் பாவனை நீங்குதற்கு அவதியுண்டோ, இன்றேவெனின்? அதற்கு உத்தரம்;—ஒருவனுக்கு முத்தியடைய எண்ணம் வருங்கால் தன்னிடத்துண்டாகிய யான், பிறர் என்னும் மித்தியாபாவனை முயற்சியால் நீங்காநிற்கும்: அஃதன்றி மற்றொன்றனுலும் அப்பாவனை நீங்கிச்சிவபாவனை தோன்றுது. அஃதெங்ஙனமெனில்? ஈசுவரன் முழுதொருங்குணர்ந்தோனுதலின், யாவரொருவர் முத்தியடையுங்காலமும் அவனுன் மதிக்கப்படும். அங்ஙனம் அவன் நியமித்தகாலத்தன்றி ஒருவர்க்கும் இடையே யான், எனதென்னும் பாவனை நீங்கி முத்திகூடுதல் கூடுமோவெனின்? கூடாது; ஆயின் இவ்வுபாய நிஷ்டை கூறியது யார்க்கெனின்? திருமலனுகிய பகவான் எல்லாவுயிர்களது பருவமும் ஒருங்கே நியமித்த அதற்கேற்ப வேதாதிநூல்களும் அன்றே கூறியதாதலின் முத்தியடையும் பருவமுடையோர்க்கு ஈசுவரன் விதித்த விதிமார்க்கத்தினராய் நட்புற்று நடந்து வந்தவராது மனத்தின் கண்ணே பொய்மை நீங்கிமெய்மை தோன்றுகவென்னும் ஈசுவரனேக்கப்படி கூடுவதாகிய அவ்விழைவு தோன்றுதலின் அன்னோர்க்குஇத்திறநூல்கள்சம்மதமாய் இவைகளிற் கூறியபடியே முயற்சியுண்டாகாநிற்கும். இஃது இன்னும் பிறத்தற்குரியோர்க்கு யான், பிறர் என்னும் மித்தியாபாவனை நீங்குதற்குரிய முய

ர்சியுண்டாகாமையால் பிறப்புநீங்குவது இல்லையாதலின் முத்திக்கு யான்பிறர் என்னும் பாவனையைக் கெடுப்பதாகிய முயற்சியே நிமித்த மெனக்கொள்க. இ-ம்-பட்டணத்துப்பிள்ளைபாடல் "உழப்பின் வாரா வுறுதிக ளுளவோ, கழப்பின் வாராக் கையற வுளவோ." அன்றியும், 'நினையா மெலியா நிறையழியா வாளா, புனைவார்க்குந் தொன்றை பொதுவோ-வினைவீரு, மெச்சியே காண வியன்றில்லை யானருளைப் பிச்சியே நாளைப் பெறும்.' எ-ம், குகைநமசிவாயர், "சும்மா இடைக் குமோ சோணு சலன் பாத,மம்மால் விரிஞ்ச னறிகிலார்-நம்மா, விரு ந்தகதை சொன்னக்கா லென்னுது நெஞ்சே, பொருந்த நினையாத போ து." எ-ம், பிரமகீதை, 'உலத்த லின்றி யொழி வற்றபொரு ளுண்மை யதுவாஞ், சலித்த லின்றிய தவத்தி னவர் தங்க ணெதிரே, திலத்தி லெண்ணெ யரணிக்கன றதிக்க ணிகழ் நெய், திலத்தி னீரென நிகழ் ந்து வெளி யாகி நிலையாம்.'' எ-ம், வாசிட்டம்-"சநமஞ்சினர்க் கவரு டை முயற்சியே சரணுந், திருமு மிங்கிவ னெனினுஞ் சிறுமைதான் சிதையி, லநக மாயுலகெங்குமாம் விசால முண்டாகு, மன னுறத்தன துயர்ச்சிதான் காண்புற வருமால்'' எ-ம், பகவற்கீதை, "இவ்வகைய குணமூன்றினியற்கைத்தா யாராலுஞ், செய்வகைய தல்லவென் மா யையினுற்றிகைப்பொழிந்நிங், குய்வகைய தரிதெவர்க்கு மென்னையே பெப்பொழுது, மெய்வகையோடடைகின்ற மனமிலரேல் வேல்வேந் தே." என்னையே பெப்பொழுது மெயவகையோடடைகின்ற மனமி லரேல்'' என்றதால், வ ்ம ு முளரேல், என்மாயை அவர்பாற் செல் லாதென்பது ஈசுவராக்ஞையாம்; ஆனதால், பொய்மை நீங்கி மெய்மை தோன்றுகவென்னும் ஈசுவராஞைக்கப்படி என்றதற்குப் பிரமாண மிதுவாம்; மற்றும் வருவனவற்றூற்காண்க.

இப்பாவனுநிஷ்டையின் சிறப்பும், பயனும் யாவையென்னில் அதற்குத்தரம் மேற்கூறல்:— இஙஙனங் கூறிய பாவனுநிஷ்டை ம

யோகமெனப்படும்; இஃதே அகண்டாகார சுத்த சைதந்நிய சிவத்தை அருச்சித்தது. இந்நிலை கைவரவே உண்மைநிஷ்டையும் எளிதிற் கிடைக்கும். இந்நிஷ்டையே மகாயோகம் என்பதற்குப் பிரமாணம். திருப்புகழ், "ஐந்து பூதமும் + பெறுவேனோ." எ-ம், வாசிட்டம், "பாசமின்றி + கிரியையுமே," எ-ம், அமுதசாரம், "யோகத் தபாவமெ னும் யோகமது கைகூடி, னேகப் பொருளதனை னெய்தியிடு—மேக மதுவா மிதுவன்றெ னுவகண்ட மான, வதுவாகை மாயோக மாம்." எ-ம் வரும் மற்றும் வருவனவற்றுற்காண்க. இந்நிஷ்டையே சிவபூ ஜையும் என்பதற்குப் பிரமாணம்—பிர, கீதை. "எப்பொருள்களுந் தானாகி யிலங்கிடு மறிவா மீச, னப்படி விளங்குகின்ற தறிதலேயவன் றனக்கு, மெய்ப்படு பூசை வேறோர் செயலினு லன்று மெய்யே, யிப் படி ஞாநந் தன்னு விறைஞ்சிடப் படுவா னீசன்" அன்றியும், "ஆன தனைத்தன்னுற் றுனே நுகருந் தன்மையது, ஆன மாகு ஞாதாதி யொழிந்தே யுள்ள வறிவதனுற், றுனேயாகக் கண்டிடுதல் சத்தா ன்றோ" "அறிவுசம + மின்பம்" எ-ம், சிவாநந்தமாலை, "எங்குஞ் சிவா லயமா மெங்குஞ் சிவமாகு, மெங்குஞ் சிவனடிமை யெங்குமாய்ப்-பங்கறவே, நிற்றல் சிவபூசை நின்றநிலை யாய்நிறைவிற், பற்றொழிதல் பூசா பலம்." எ-ம் மற்றும்வருவனவற்றுற்காண்க.

இதுகாறும் பூரணபாவனுநிஷ்டை கூறப்பட்டது; இப்பூரண பாவனை கூடாதார்க்கு மேல் ஓர் குறிப்புப் பாவனை யுண்டோ வெ னின்? அதற்கு உத்தரம்:—கூறியவந்த பூரண பாவனைக் கண் மனம் ல்லாதுழி உன்னை யாளும்பொருட்டுக் கொண்டருளிய குருவடிவத் தை இதயத்துள்ளேதியானஞ்செய்துபிரணவாட்சரத்தையுச்சரிப்பாய்

பூரணனாகிய சிவனொருவனுக்கு அநுக்கிரகஞ் செய்யுமிடத்துக் கொள்ளுந் திருமேனி குருவடிவேயாதலாலும், மற்றொரு குறிப்பு வடிவங்களும் அவனருளாற் பெறப்படுவவாதலாலும், இங்ஙனம் குருவடிவே குறிப்புருவமா மெனப்பட்டது. குருத்தியாகஞ் செய்தற்குப் பிரமாணம் - திருமந்திரம், "குருவே சிவமெனக் கூறினனந்தி, குருவே சிவமென் பதுகுறித் தோரார், குருவே சிவமாகிக் கோனுமாய் நிற்குங், குருவே யுரையுணர் வற்றதோர் கோவே." அன்றியும், 'கருடனுருவங் கருது மளவிற், பருவிடந் தீர்ந்து பயங்கெடு மாபோற், குருவி னுருவங் குறிக்கொண்டு நோக்கத், திரிமலந் தீர்ந்து சிவனவனாமே." எ-ம், சிவாநுபூதிவிளக்கம், "சீருருவங் கொண்டருளுந் தேசிகன் செம்மேனிபோ, லோருருவங் கொண்டங் குணரா துணர்த்தினனே" எ-ம், அமுதசாரம், "உள்ளத்தி னின்று மொளித்தான் பரன்குரவன், கள்ளந் தனைத்தவிர்த்துக் காட்டினான்-வள்ள, லருவான கோலமோ வக்கோலங் காட்டுங், குருவான கோலமோ கூறு." எ-ம் வரும்; மற்றும் வருவனவற்றாற் காண்க. பிரணவ முச்சரித்தற்குப் பிரமாணம் - திருமந்திரம், "ஓமென்னு மோங்காரத் துள்ளே யொரு மொழி,:யோமென்னு மோங்காரத் துள்ளே யுருவரு, வோமென்னு மோங்கார மொண்முத்தி சித்தியே" எ-ம், திருவாசகம், "உய்ய வென்னுள்ளத்து ளோங்கார மாய்நின்ற, மெய்யா விமலா விடைப் பாகா." எ-ம், பிரமகீதை, "தீமரந் + திடவுடம்பில் வெளியாம்." எ-ம் வரும்; மற்றும் வருவனவற்றாற்காண்க.

இன்னும், பேதபாவனை யொழித்துப் பஞ்சாட்சரி, அஷ்டாட்சரி முதலிய மந்திரங்களாயினும் உன்மநத்திற் கிட்டமாயின வொன்றை ஏகாக்கிர சித்தத்தோடு உள்ளத்தினுள்ளே உச்சரிக்கக்கடவாய். இம் மந்திர நிஷ்டையினும் மநம் நில்லாவிடில் அம்மநம் நிர்மலமாய் நிலைத்தற்பொருட்டு வாயு தாரணை முதலியவற்றால் யோக மாதிய தவங்களை யாயினுஞ் செய்யக்கடவாய்; அத்தன்மையுங் கூடா விடத்து

அயன் அரி யரன்என்னும் திரிமூர்த்திகளும், அம்மூர்த்திகளது வேஷங்களும், யாமும், எமது வேஷங்களும் பிறிதன்றெனக் கொள்க. இங்ஙனம் எல்லாமும் யாம், எமது என்றமையால் சிருட்டியாதி கிருத்தியங்களைப் பண்ணு மூர்த்திகளாயும், அம்மூர்த்திகட்கெல்லாங் காரணமாயும் நிற்பது ஒருசிவமே யென்றதெனக் கொள்க. "படைத்தளித்தழிப்பமும் மூர்த்திகளாயினை" என்றபடி. இங்ஙனங்கூறிய முத்தேவர்களுள்ளும், அவரவர் வேடங்களுள்ளும் எந்த வடிவத்தை நீ சிவமென்று துணிந்தாய் அந்தவடிவத்தையே நாடோறுஞ் சத்திய பக்தியால் அன்போடு மனவாக்குக்காயங்களை அர்ப்பணஞ்செய்து வழிபடக்கடவாய். சத்தியபத்தி = உலகர் சான்றொழிந்து தேவதை சான்றாக வழிபடுமிடத்துத் தநுவாதிகளை யர்ப்பித்துத் தலைநிற்றல்— இ-ம், சிவஞான சித்தியார், "மநமது நினைய வாக்கு வழுத்தமந் திரங்கள் சொல்ல, வினமலர் கையிற் கொண்டிங் கிச்சித்த தெய்வம் போற்றிச், சினமுத லகற்றி வாழுஞ் செயலற மானல் யார்க்கு, முனமொரு தெய்வ மெங்குஞ் செயற்குமுன் னிலையா மன்றே" எ-ம், வரும்; மற்றும் வருவனவற்றாற் காண்க.

யோகமேனும், மோக்ஷமேனும், அன்பேனும் ஓர் சாதநங்கொண்டே யடைய வேண்டு மென்ப தென்னை? மற்றொன்றால் யாவருமடைதல் தகாதோ வெனின்? அதற்கு உத்தரம்:— ஓரிடத்தாயினும் நெய்யின்றி யாகம் முடிந்து பலப்படுமாயின் கரும யாகம், தவ யாகம், மந்திர யாகம், பாவனா யாகம், ஞான யாகம் என்றிங்ஙனங்கூறிய ஐவகை யாகமும் அன்பின்றி ஒருவனுக்கு முடியும். இதனால், போகமோக்ஷத்திற்கெல்லாம் ஆதரவே காரணமென்பதாயிற்று. இ-ம், திருவள்ளுவர், "அன்பிற்கு முண்டோ வடைக்குந்தா ழார்வலர், புன்கணீர் பூச றரும்," எ-ம், திருமந்திரம், "அன்பு சிவமிரண் டென்ப ரறிவிலா, ரன்பே சிவமாவ தாரு மறிகில, ரன்பே சிவமாவ தாரு மறிந்தபி, னன்பே சிவமா யமர்ந் திருப்பாரே," "என்பே

விறகா விறைச்சி யறுத்திட்டுப், பொன்போ லெரியிற் பொரிய வறுப் பினு, மன்போ டுருகி யகங்குழைந் தார்க்கன்றி, யென்போன் மணி யினை யெய்தவொண் ணாதே." எ-ம், தேவாரம், "நெக்கு நெக்கு நினைபவர் நெஞ்சுளே, புக்கு நிற்கும்பொன் னார்சடைப் புண்ணியன், பொக்க மிக்கவர் பூவுநீ ருங்கண்டு, நக்கு நிற்ப னவர்தமை நாணியே." எ-ம், திருவாய்மொழி. "அமரர் தொழப்படுவானை யனைத்துல குக்கும் பிரானை, யமர மநத்தினுள் யோகு புணர்ந்தவன் தன்னோடொன் றாக, வமரத் துணியவல் லார்க ளொழிய வல்லாதவ ரெல்லா, மமர நினைந்தெழுந் தாடி யலர்த்துவ தேசுரு மம்மே." எ-ம், சிவதரு மோத்தரம், "ஆதரவே பரமான வறமதாகு மாதிநடு வந்தமிவற் றனைத்துமாகு, மாதரவற் றவரீகை யறம தாகா வாதலினு லாதரவே மூலமாகு, மாதரவே பிரகிருதி யான்மா வீச னெனும் பொருளு மறி விக்கும் மமலன்றானு, மாதரவே யடைவிக்கு மாத லாலே யனைத்தி னுக்கு மாதரவே மூல மாகும்" எ-ம், அநுபவ சாரம், "அன்பி லாத நல் லறங்களு மைவகை வேள்வியும் பிணமேயா, மன்பில் வாய்மையுந் தானமு மொழுக்கமும் விரதமும் பிணமேயாந், துன்பின் ஞானமுந் துகளிலெச் சமயமுஞ் சொல்விடிற் பிணமேயா, மன்பி லாதிய வறம் பொரு ளின்பம்வீ டனைத்திற்கு முயிருண்டோ." எ-ம், சொரூபா நந்த நிலயம், "அன்ப தொன்றுமற றருஞ்சிவ மொன்றுமென் றறி பவ ரறிவில்லா, ரன்ப தேசிவ மாயிருந் தமையறிந் தவரிறை யருள் பெற்றார், துன்ப வன்பவந் துவங்களில் வீடெனச் சொல்விடு மலை யெல்லா, மன்ப தாமமு தினைமுழுந் திடவுண வயலவ ருரைதானே." எ-ம், மெய்ஞ்ஞான விளக்கம், "தூமமது வெங்குளது வங்கனல தாமா றேமமுற வேயிறைவ னாருமவர் பாலுந், தாமமைவி லாதுருகு தண் மைய ருளத்தே, யாமிறைவ னாரிய தாளுமென வோரே." எ-ம், மெய்ஞ்ஞான நிலயம், "முழுதுந் தன்னையே தழுவிட நழுவிடு மூலமா மிறைவந்து, பழுதொன் றின்றிய பத்திநல் வலையினிற் படுமெனு

மதுகண்டா, லெழுது கல்வியு மிலங்குநற் றவங்களும் யோகஞா நமு மெங்கே, யழிவொன் றின்றிய வன்பினன் பெருமையை யறையவு முடியாதே" எ-ம், திருக் களிற்றுப் படியார், "அன்பேயென் னன்பேயென் றன்பா லழுதரற்றி, யன்பேயன் பாக வறிவழியு—மன்பன்றித், தீர்த்தந் தியாநஞ் சிவார்ச்சனைகள் செய்யுமது, சாத்தும் பழமன்றே தான்." எ-ம், சிவாநந்த மாலை, "சீரார் பதினெண் புராணஞ் செழுமறைநூ, லாராத வாகமங்கற் ருய்ந்தறிந்து - நேராகச், சங்கரன் றுளிணைக்கீ ழன்பிலனேற் சண்டாள, னங்கையினிற் பாகீ ரதி." எ-ம், வரும்; மற்றும் வருவனவற்றுற் காண்க.

அவ்வன்பின்றிய விடத்து நெஞ்சு நல்வழிவர அதற்கேதேனு முணர்த்தவேண்டுவ தின்றோ வெனின்? அதற்குக்கூறல்:—எல்லாச் சிறப்பினையுமுடைய சிவத்திற்கு அன்பு செய்யாது குற்றத்தினை விளைப்பதாகிய ஐம்புல விஷயங்களை இச்சித்து உன்னுடைய நெஞ்சுஞ் செல்லுமாயின், அதனை நோக்கி நித்தியாநந்தத்தினை நீத்துச் சிறிதாய் அழிதருஞ் சத்தாதி விஷயத்தைக் கருதாநிற்கும் நெஞ்சமே! நீ எனக்குத் துணையாகக் கடவாயோ? அல்லை யென்று வலியுறுத்திச் சாம பேத தாநதண்ட உபாய வாயிலாக அறிவுறுத்துவாயாக. இ-ம்-போத ரத்நாகரம், "காயநீர்க் குமிழி யதிலுறு மின்பங் கானலிற் புனலிது தனக்கிங், காயவத்துயர மளவிலை யதுநீ யாய்வுறு மையினழிந் தற்றுய், நீயினிக் கவலை மயல்களைத் தவிர்ந்து நெஞ்சமே வந்தெனக் குடன்பட், டாயவச் சொருபற் கன்பதே புரியி லரியதே தார்நமக் கெதிரே." எ-ம், தத்துவ ராயர், "நின்பெற்றி தன்னை நினைக்கவுண் டோநெஞ்ச மேநிறையப், பொன்பெற்று வைத்தும் பொதிந்து கொளாய்புன் குரம்பையிலே, தன்பெற்றி தன்னைத் தருந்தம்பி ரான் வந்து சார்ந்திருப்ப, வென்பெற்று நீயிந்தி யஞ்சொன்ன வாசெய் திளைக்கின்றதே." எ-ம், மூல சித்தி, "அன்பிலா நெஞ்ச மரும்பிணி யெனவு மளவிலாப் பகைநமக் கெனவுந், துன்பமார் சோக மோகமே

முதலாந் துயரெலாம் விளைநிலை மெனவும், மின்பவீ டெய்தா திடற் கிடை யூரு மிருளுமென் றியம்புவர் பெரியோர், துன்பிலா விறைவர்க் கன்பிலா நெஞ்சே துணையலை துணையலை யெனக்கே." எ-ம், அநுபவ சாரம், "புலையுறு செயலாற் புலனுறும்போகப் புகலரும் விடத்தையே நுகர்தற்,கலமரு கவலைக் கடலுளே தலைகி ழாகவே விழுந்தழி நெஞ்சே, கலைகளி னுணர்வுக் கரியநற் சொருபன் கழல்களை நினைந்துநைந் துருகி, யெலையறு மன்பா மமுதினை விரும்பா தேதுகொண் டென் செய்தாய் கெடுவாய்." எ-ம், வரும்; மற்றும் வருவனவற்றுற் காண்க.

பின்னுஞ், சத்தாதி விடயங்களால் குற்றமே யென்று மநதுக்கு வலியுறுத்திக் கூறல்வேண்டு மென:—அசுணப்புள், யானை, விட்டில், மீன், வண்டு என்பன வைந்தும், சத்தாதி விஷயங்களில் - வளை யாய்த் தூண்டிலி னுள்ளிரை விழுங்கும் பன்மீன்போலவும், மின் னுபுவிளக்கத்து விட்டிற்போலவு, மாசையாம் பரிசத்தியானை போ லவு, மோசையின் விளிந்த புள்ளுப் போலவும், வீசிய மணத்தின் வண்டுபோலவும், ஓரொன்றுலே கேடடையாநிற்கும். எமக்கு ஐம்புல னுலும் கேடுவருமாயின், அவற்றினை நீக்காவிடத்து எங்ஙனம் உய்கு வம் நெஞ்சமே நீ இதனைச் சற்றுராய்வாயாக. இ-ம் - ஒழிவி லொடுக் கம், " நாயலகை நெய்விரும்பி நக்குவது நஞ்சிட்ட, பாயசமு மெய்ப் பரிசம் பாவைமிகச் - சாயனீர், வேட்கை யசுணமிபம் விட்டின்மீன் வண்டிவையின், சாக்கியைக்கண் டார்துறவா தார்." எனவரும்; மற்றும் வருவனவற்றுற் காண்க.

மநதிற்கு வநிதையர் விஷயத்தால் வரும் கேட்டையும் வற் புறுத்திக் கூறவேண்டா வோவெனின்? அதற்குக் கூறல் :—வநிதைய ரிடத்து ஐம்புல நுகர்ச்சியும் உளவாமாதலின், அவரது போகத்தை நீ விரும்பிற் கேடென்பதற்கு ஓரையம் என்னை நெஞ்சமே! இ-ம்-

திருவள்ளுவர், "கண்டுகேட் டுண்டுயிர்த் துற்றறியு மைம்புலனு, மொண்டொடிக் கண்ணே யுள." எ-ம், சிவதருமோத்தரம், "குட்ட வுடல் கொடுக்குமிதங் கூடியழற் கொடியிடையா, ரிட்டமுமிம் முறையெனுக விளையவர்தம்பருவம்போற், குட்டமழற் கூடுதலுங் கொழுநனுக்கொப் பெனக்கொள்க, தொட்டதவக் கிந்திரியஞ் சொற்பொருளுந் துணிவாரே" "புரிந்தவர்க டீவினையைப் பொரு வரியா னடிக்கன்பு, பிரிந்தவர்கள் வனிதையரைப் பெறற்கரிய பேரென்றே, இருந்தவர்க ணடந்தவர்க ளிழுக்காய குழிவழக்கே, எரிந் தவர்கள் கிடந்தெரிவாய் நிரயத்து மிளைப்புறவே" எ-ம், வாசிட் டம், "பைந்தொடி," "மேவுதற்கரி," "மாமடஞ்" எ-ம், நீதி சாரம், "ஊரூரெனும் வநத்தி னுள்வேற்கண் மாதரெனுங், கூரூர் விடமுட் குழாமுண்டு—சீரூர், விரத்தினவ ராகிவிவேகத் தொடுஞ் சோ, டிரத்தணியா தேகலெவ னோ." எ-ம், வரும் மற்றும் வருவன வற்றுற் காண்க.

அருந்தல், பொருந்தல் இரண்டனுள், பொருந்தலாலுறு மனர்த் தம் கூறிப் போந்தபடி யமைவுறலாயிற்று: அருந்தலால் யாது அநர்த்தம் நற்சுவைகளோடுகூடிய வுணவுகளை மனம் விழைதலாகாவோ எனின்? அதற்குக் கூறல்:—ஒருவனது மிகுந்த பசிக்குப் பாலும், சர்க்கரையும், முக்கனிகளுங் கூட்டி யருந்தினும், அஃதன்றி உப்பற்ற நீர்க்கூழும், காடியும், மற்றுமுள்ள சாக மூல பலாதிகளும் அருந்தினும் உத ராக்கினி அவியாநிற்கும்: எது புசிப்பினும் உதரத்தைப் பொருந்தித் தனது தன்மைகெட்டு மலத்தன்மை யொன்றே அடையாநிற்கும், ஆதலால், பசிக்கு உதவினதன்றிக், கைத்தல், கார்த்தல், புளித்தல், துவர்த்தல், உவர்த்தல், தித்தித்தல் என்கின்ற அறுசுவைகளைத்தேடி ஓடேல் நெஞ்சமே: இ-ம்- தத்துவராயர், "பண்டைப் படியே நமக்களிக் கின்ற பரஞ்சுடரைக், கண்டைக் கனியை யமுதைக்கை விட்டுக் கவலைநெஞ்சே, தொண்டைக்கு மேலுறுஞ் சோற்றுச் சுவடுந்

துடியிடையார், கெண்டைத் துணைவிழியு முன்னி யென்னைக் கெடுத் தனையே." எனவரும் மற்றும் வருவனவற்றுற் காண்க.

மேல், அமைவு யாதோ வெனின்? அதற்குக் கூறல் ;—எவ னுக்கும் இன்பதுன்பங்க ளெல்லாம் ஊழின்வழியே அடைதலால் வெறுக்கப்பட்ட துன்பமும் உனக்கு இயல்பாய் வருதல்போலவிஷய சுகமும் நீ விரும்பாவிடினும் அமைத்தபடியே வந்துகூடும்; அவற் றினை அவாவுதல் ஒழிவாய் நெஞ்சமே. இ-ம்- திருவள்ளுவர், "வகுத் தான் வகுத்த வகையல்லாற் கோடி, தொகுத்தார்க்குந் துய்த்த லரிது." எம், குகை நமசிவாயர், "வையமுழு தும்படைத்து வாழு மருணகிரி, யைய னமைத்த படியல்லாம—னையமந, நூறு யிரம் விதமாய் நொந்தாலு மெள்ளளவு, மேறு ததிற்குறையா தே." என் றும் வரும் மற்றும் வருவனவற்றுற் காண்க.

இங்ஙனங்,கூறிய வுபாயங்க ளனைத்தையும் நெறியாகப் பற்றிச் சென்று செயற்பாலது யாதெனின்? முற்கூறிய உண்மை நிஷ்டை யினையே, கூடல் வேண்டு மென்று பலஸகிதம் வற்புறுத்தல் ;— இங் ஙனம், பாவனையாதியாகச் சொல்லிப் போந்த நானுவுபாயங்களானும் மநத்தை ஒருவழிப்படுத்திச் சென்று முற்கூறிய பாவனாதீத நிஷ்டை யைப் பொருந்திநின்று பேராநந்தம் பெறக்கடவாய். பாவனையாதியான நிட்டைக ளொவ்வொன்றில் அநேகவிதங்க ளடங்கிநிற்றலானும்,பின் னு முபாயங்கள் பலவாக நூல்களிற் சொல்லப்படுமெதனுனும் நானு வுபாயங்க ளெனக்கூறப்பட்டது. இ-ம்- தத்துவராயர், "இம்மற் றிரையானவுடம் பையெடுத் திதுகாரணமாக விரவும்பகலு மெளி வந் தனசெய் திதனு லமையாதே, மம்மர்க் கிடனுய் நடனு டியபொய் வாழ்வைக் கருதாதே மறையிற் றுறையிற் பொறையிற் றுறவி னிறை விற்குறைவற்றே, யெம்மைக்கு நமக் குறவா மவர்வே றலர்நாமல தென்றே யாதொன் றினும்யா வரொடும் பணியற் றெல்லா வழியா னுந்,தம்மைப் பெறுவா ரினைவாருறவே தாலோ தாலேலோ தனிநா

யகனேயெனையா ளுடையாய் தாலே தாலேலோ." எனவரும் மற்றும் வருவனவற்றுற் காண்க.

அவ்வுண்மை நிட்டை சாதிப்போர்க்கு மனோவிருத்திக ளொழிந் தாற் போதாதோ,வாக்குத்தொழிலும் அடங்கவேண்டுமோ வெனின்? வாக்கின்வியாபார மற்பமாயினு முள்ளளவில் மநநினைவு மடங்காதாத லின் அவசியம் வாக்கு மௌநம் அந்நிஷ்டைக்குப் பரம சகாயமா மெனக் கூறல்;—ஒருவன் உண்மை நிஷ்டை சாதிக்குமிடத்து அவ னுக்கெல்லா வுபாதிகளு மடங்கி நிஸ்தரங்க சமுத்திரம் போல இவ் விடத்திருக்கின்ற தென்று உண்ணினைவு சற்றே உண்டாமாயினும், அது சகச நிஷ்டை யன்று என்று சுருதியாதிகள் கூறுநிற்குமாயின் அந்நினைவெழாம லடக்குவ தன்றி அது தடித்துப் புறநிலையாய்மன திகளோடு கூடி அவத்தை யடைந்து ஐம்புலன்களையுங் கவர்ந்து, வாக்கும், தொழிலுமாகிய கன்மேந்திரியங்களும் பிரேரகப்படுமாயின், அந்நிஷ்டை யாதாய் முடியும்? நினைவெழின் மெய்நிட்டை நீங்கு மென்ற வதனால், மனோ லயஞ்செய்து சகச நிட்டை கூடுபவர்க்கு வாக்கும்,தொழிலும் அசைவற வடங்குதலே நியம மெனப்பட்டது. இ - ம் - திரு வாய் மொழி, "உள்ளமுரைசெய லுள்ளவிம் மூன்றையு, முள்ளிக் கெடுத்திறை யுள்ளி லொடுங்கே." எ-ம், ஔவையார், "ஓடி யுழன்றிந்தவுடம்பை யொறுதேநீ, பாடிமிடற்றைப்புண் படுத்தாதே— கேடுபிறக், கும்மால் விளையாதே யொன்றுடனுந் தாக்காதே, சும் மாவே காணுஞ் சுகம்."

இவ்வகை வாக்கு,தொழில்யாவும் விடுத்து மனோ லயஞ்செய்து சகச நிஷ்டைகூடிய ஞாநிகள் பெருமை, ஒருமை, சுபாவங்கள் யா வையோ வெனின்? அதற்குக் கூறல்;—இங்ஙனங் கூறிய உண்மை நிஷ்டைவந்து பரமாநந்தம் பெற்றுள்ள ஞாநிகளாயினோர் பின்பு ஓாடல், பாடல்களைச் செய்தார்களாயினும், அத்தொழில்க ளெல் லாம் ஆநந்த லீலையாய் முடியும். அவரது செயற்பாடு ஒருவரால் நிச்ச

யித்துக் கூறுதல் கூடாது ஆடினும், பாடினும் என்ற வும்மையால் அவை நியத மன்றெனப்பட்டது. இ-ம்- அஞ்ஞவதைப் பரணி, "தெளியு முளத்தார் சிலவர் தெளிப்பார் சிலவர் களிப்பார் சிலவர் திகைப்பார், அளியுமுளத்தோ டழுது சிரிப்பா ரவர்கள் செயற் பாட றியவொ ணாதே." எ-ம், மோக வதைப் பரணி, "அல்ல தங்கவர் பெருமையை யருமறை மொழிய, வல்ல தன்றரன் முகுந்தனும் பிரமனு மாட்டார்." எ-ம் வரும் மற்றும் வருவற்றாற் காண்க.

அந்நிஷ்டை யுடைய ஞாநிகள் உலகத் தோற்றத்தைக் கருதாராதலின் சராசரங்களிடத்துக் கருணையாதி செய்ய விரும்பாரோ வெனின்? அதற்குக் கூறல்;—உயர்ந்த கருணையே வடிவாகவுடைய பரம்பொருளுடனேகூடி யிரண்டறக் கலந்துள்ள முத்த சுபாவ நிட்டர்களும் இத்தசைக்க ணுண்டாகிய சராசரங்களிடத் தெல்லாம் அருளை நீக்கார். அஃதெங்ஙனமெனின்? ஆரூட ஞாநிகள் விதி நிடேதங் கடந்து வேண்டிய செய்வாராதலின், உயிர்கட்கிதஞ் செய்யவேண்டு மென்னும் விதியினையும் பற்றுதல், விடுதல் இல்லை யென்னில்? அது கூடாது. அன்னோர் உயிர்கட் கிதஞ்செய்தலே இயல்பு. அஃதியாதா லெனில்? இரும்புக்குச் சுடுந்தன்மை யின்மையாயினும் கனலோடு கூடியவிடத்து அதனது சுடுந்தன்மையைத் தான்பற்றி நின்றது போல வஸ்துவுக்குப் பேருளே சொரூபமாதலின் அவ்வஸ்துவினோ டிரண்டறக் கலந்து நின்றோரும் இத்தசைக்கண் எல்லா வுயிர்களிடத் திதஞ் செய்யும் இதாகிதங்க ளெல்லாம் மாயா வுருவத்திற்கே யொழிய நித்திய விபுவாய ஆன்மாக்கட் கில்லை யெனும் உண்மை யறிந்துளோராயினும், அவ்வுணர்வு பெத்தத்திற் றமக்கில்லை போலும் மற்றைய வுயிர்கட்கும் அஃதின்மையால் அவற்றினது வருத்தத்தை நோக்கி அருளினை நீங்காரென்பதே துணிவு. நின்றோரும், என்ற வும்மையால் முத்திபெற முயல்வோர்க்கு அருளே தலையாக வேண்டப்படு மென்பதூஉம் அருளில்லோர் சீவன்முத்தரன் றென்பதூஉங் காட்டிற்றெ

னக் கொள்க. இ-ம் - பட்டணத்துப் பிள்ளையார்,” மகவெனப் பல்லுயி ரனைத்தும் பார்க்கும்.” எ - ம், பகவற் கீதை, “இருவகையுயி எ - ம், ஞானவாசிட்டம், உள்ளுணர்வி” எ - ம், திரு வள்ளுவர், “அறிவின ஞருவ துண்டோ பிறிதினேய், தந்நோய்போற் போற்ருக் கடை” எ - ம், சித்தாந்த கரணம், “ஐயைந்துருவு மருளா னுயிர்க்காய, வைய னருளிங் கடைந்தோரும் — வெய்ய, தடையு மலரா ல்யம்போன் றருளே, யுடையா ரனைத்துயர்பா லும்” எ-ம், ஞான சாகரம், “மருளுறு மெவையு நூறி மயக்கறத் தெளிந்து ளோர்க்கு, மருளறத் துறக்க லாகா வயலொரு பொருளு மில்லாத், தெருளுறு முறைமை யாலுஞ் சிவமெவ ருளமு மன்னு, மருளினை யறித லாலு மவர்தொழி லருள றந்தான்.” எ - ம் வரும் மற்றும் வருவனவற்ருற் காண்க.

துவிதாத்துவிதவிவேக முற்றும்.



சிவமயம்.

# ஷட் தர்சந ஸார தரிசக பத்திரம்.

| விஷயம். | பூர்வ மீமாம்சை. | உத்தர மீமாம்சை. வேதாந்தம். | நியாயம். | வைசேஷிகம் | சாங்கியம். | யோகம். |
|---|---|---|---|---|---|---|
| ஜகத்து. | சொரூபத்தால் அநாதி அநந்தம்பிரவாகரூபம், சம்யோக வியோக முடையது. | நாமரூபக்கிரியாத்மகம், மாயாபரிணமம், சேதநவிவர்த்தம். | பரமாணுவிஞ லாரம்பிக்கப்பட்ட சம்யோக வியோகஜந்ய ஆகிருதி விசேஷம். | நியாயமதப்படி. | பிரக்ருதிபரிணமத்ரயோவிம்சதி தத்வாத்மகம். | சாங்கிய ரீதிப்படி. |
| ஜகத்காரணம். | ஜீவாதிருஷ்டம், பரமாணு. | அபிந்நமித்தோபாதாந வீசுவரன். | பரமாணு, ஈசுவராதி - கூ. | நியாயரீதிப்படி. | திரிகுணத்மகப்பிரகிருதி. | கருமாநுசாரப்பிரகிருதி, தந்நியாமக வீசுவரன். |
| ஈசுவரன். | ,, | மாயாவிசிட்ட சேதநம். | நித்தியவிச்சாஞாநதிகுணமுடைய விபு கர்த்தாவிசேஷன். | ,, | ,, | கிலேச கரும விபாக வாசய அஸம்பத்த புருஷ விசேஷன். |

| | | | | | | |
|---|---|---|---|---|---|---|
| ஜீவன். | ஜடசேதனு த்மக விபு, நாநா, கர்த்தா, போக்தா. | அவித்தியா விசிட்ட சேதநம் | ஞானுதி சது ர்த்தச குண வான், கர்த் தா, போக்தா ஜடவிபு,நாநா. | ,, | அசங்கசேத ந விபு, நாநா, போக்தா. | அசங்கசேதந விபு, நாநா, கர்த்தா, போ க்தா. |
| பந்தவேது. | நிஷித்த கரு மம். | அவித்தை. | அஞ்ஞாநம். | ,, | அவிவேகம். | அவிவேகம். |
| பந்தம். | நரகாதி துக்க சம்பந்தம். | அவித்யா தத் காரியம். | உக-துக்கம். | ,, | அத்யாத்மிகா தித்ரிவித துக் கம். | பிரகிருதி புரு ஷ ஸம்யோக ஜந்ய அவித் தையாதி பஞ்சக் கிலே சம். |
| மோக்ஷம். | சுவர்க்கப் பிராபத்தி. | அவித்யா தத் காரிய நிவிர் த்தி பூர்வக பரமாநந்தப் பிரமப் பிராப் த்தி. | உக-துக்க த் வம்சம். | ,, | அத்யாத்மிகா தி த்ரிவித துக்கத் துவம்சம். | பிரகிருதிபு ருஷ ஸம் யோகாபாவ பூர்வக அவித் யாதி பஞ்சக் கிலேச நிவ ர்த்தி. |
| மோக்ஷ சாதநம். | வேத விகித கர்மம். | பிரமான்மை க்ய ஞாநம். | இதரபிந்நான் ம ஞாநம். | ,, | பிரகிருதி புருஷ விவே கம். | நிர்விகற்ப சமாதி பூர்வக விவேகம். |

| | | | | | | |
|---|---|---|---|---|---|---|
| அதிகாரி. | கரும பலாசக்தன். | மலவிக்ஷேப தோஷ ரகித சதுஷ்டய சாதந சம்பந்நன். | துக்க சிஞ்ஞாசுகுதர்க்கி. | ,, | சம்சித்தவிரக்தன். | விக்ஷிப்த சித்தவான். |
| பிரகடகர்த்தா ஆசாரியர். | ஜைமிநி. | வேதவியாஸர் | கௌதமர். | கணாதர் | கபிலர். | பதஞ்சலி. |
| பிரதாந காண்டம். | கரும காண்டம் | ஞாந காண்டம் | ஞாந காண்டம் | ஞாந காண்டம் | ஞாந காண்டம் | உபாசனா காண்டம். |
| வாதம். | ஆரம்பவாதம் | விவர்த்த வாதம். | ஆரம்பவாதம் | ஆரம்பவாதம். | பரிணாம வாதம். | பரிணாம வாதம். |
| ஆத்ம பரிமாண சங்கியை. | விபு, நாநா | விபு, ஏகம். | விபு, நாநா. | விபு, நாநா. | விபு, நாநா. | விபு, நாநா |
| பிரமாணம் | ஷட். | ஷட். | பிரத்யக்ஷ, அநுமாந, உபமாந, சப்தம்-ச | பிரத்யக்ஷ, அநுமாநம்-உ. | பிரத்யக்ஷ அநுமாந, சப்த-ங | பிரத்யக்ஷ, அநுமாந, சப்த-ங. |
| கியாதி. | அக்யாதி. | அநிர்வசநீய. | அந்யதா. | அந்யதா. | அக்கியாதி. | அக்கியாதி. |
| சத்தை | ஜீவஜ[illegible]த் பரமார்த்தசத்தை | பரமார்த்த ரூபாத்ம சத்தை, வியாவகாரிக, பிராதிபாசிகஜகத்சத்தை. | ஜீவசகத் பரமார்த்தசத்தை | நியாயரீதி. | நியாயரீதி. | நியாயரீதி. |

| உபயோகம் | சித்தசுத்தி. | தத்வஞாந பூர்வகமோக்ஷம். | மநநம். | மநநம். | துவம்பதார்த்த சோதநம். | சித்தைகாக்கிரியம். |
|---|---|---|---|---|---|---|

ஷட் தர்சந ஸார தரிசக பத்திரம்

முற்றிற்று.



உ

ஷடாதார சக்கராதி முறைமையால் சதுர்ணோபாசனை செய்யும் விதங் குறிப்பித்தல்.

| | ஆதாரங்களின் நாமம் நிறம். | | யந்திரரூப சக்கரம், தளம், அட்சரவகைகள். | | சக்தி சக்கர வகைகள். |
|---|---|---|---|---|---|
| 6 | ஆக்ஞை. படிகநிறம். | 3 | | யகாரம். | கிரியா சக்தி. |
| 5 | விசுத்தி. மேகநிறம். | 16 | சிவயும். | வகாரம். | ஞான சக்தி. |
| 4 | அநாகதம் படிகநிறம். | 12 | யையும். | சிகாரம். | இச்சா சக்தி. |
| 3 | மணிபூரகம். மரகதநிறம். | 10 | ஸ்ரீயும். | மகாரம். | |
| 2 | சுவாதிஷ்டானம். செம்பொன்னிறம். | 6 | ஐயும். | நகாரம். | |
| 1 | மூலாதாரம். மாணிக்கநிறம். | 4 | | | |

உ

சிவமயம்.

# * திருப் போரூர்ச் சந்நதி முறை.



சாரம்.

அருட்கட றதும்பிக் கவுட்செவிச் சார லருவிபாய்ந் தெழிற்ரு மசலம், விருப்புற மருப்பிற் கடகமொன் றெடுத்து வீறுகிம் புரியெனத் தரிப்போய், சுருப்பினந் தொடருங் கதுப்பினர் மயக்கிற் றுளேந்துரு தெனையினி தளிப்பாய், பொருப்பன புயத்தோய் மயிற்பரி யுகைத்தோய் போரிவா ழாறுமா முகனே. (க)

அறிவுதன் னினைவிற் கலந்துறு போதி லரும்பர முயிர்சக முளவாம், பிறிவிலவ் வறிவந் நினைவினை யகன்ருற் பேதாபே தங்களொன் றின்றி, நெறியுறத் தானே தன்னிடத் திருக்கு நிச்சய மென்றெனக் கிசைத்தான், பொறிமறு மார்பன் மருகவே ளெனயாள் போரிவா ழாறுமா முகனே. (உ)

---

* குருலிங்கசங்கமந் தொடங்கித் துவிதாத்துவித விவேக பரியந்தமான சோபாநங்களால் சித்தந் தெளியும்; அதனுல், ஈசுராநுக்கிரகமுண்டாம்; பின், அவ்வீசுரனே விகித குருவா யெழுந்தருளி யநுக்கிரகிப்பர்; அவ்வநுக்கிரகத்தால் அநர்த்த நிவிர்த்தி ஆநந்தப் பிராப்தி ரூபமான "மூக்தி" கரதல மணியென வெளிதின் வெளியாம்; ஆனதால், அந்நெறியை நன்கு விளக்குவதாய் ஸ்ரீ திருப் போரூர். சிதம்பரசுவாமிகள் திருவண்ணுமலேயில் ஸ்ரீ அருணுசலேசன் ஆக்ஞையால் தமது அந்திய தசையில் தனதிடம் வந்த ஓர் மாதுக்குக் கூறிய சகல வேதாகமசார வுபதேசம் இது.

நினைவறி வெனவிவ் விரண்டினை விரித்து நிகழ்த்துறுஞ் சுருதியீண்டிவற்றி, னினைவிரண் டாகும் பரனினை வெனவு நிலவுறு முயிர்நினைவெனவும், புனைபர நினைவு சகமுயிர் நினைவு புரிந்ததைப் பிடிக்குமென்றிசைத்தான், புனையரும் பாரஞ் சொரிதரு நெய்தற் போரிவாழாறுமா முகனே. (௩)

பரனது முகத்திற் குலகுபொய் சீவன் படிற்றுளக் கினுக்கதுமெய்மை, திரமுறு சாக்ஷி தானெனச் சீவன் றெரிந்திடிற் பரன்மநமிவற்காம், விரவிய சகமப் போதுபொய் யாகி விளங்குறு மென்றெனக் கிசைத்தான, புரமெரி செய்தோ னுவந்துபெற் றெடுத்தபோரிவா ழாறுமா முகனே. (௪)

அறிவினை நோக்கி லுயிர்வய மாகு மகமநஞ் சகத்தையவ் வுயிர்தான், பிறிபட நோக்கின் மநத்தினின் வயமாம் பிறப்புமீ திதன்வயப்படாது, நெறியுறு மறிவின் மிகப்பரி சிக்கி னினைப்பருங் கதியுமீதென்றூன், பொறிமயி லேறுஞ் சேவக னெனையாள் போரிவா ழாறுமாமுகனே. (௫)

எதொரு நினைவிங் கெழுமது மநமீ தெனதென வருமிதன்மூலந், தீதறு மூல வகங்கர மீதியா னென்றெழுஞ் செப்புமிங் கிவைக்கு, மூதிரு ளவித்தை மூலமீ தகன்றூன் மொய்யறி வெனவெனக் கிசைத்தான், போதக மார்க்கும் புகன்றமெய்க் குரவன் போரிவாழாறுமா முகனே. (௬)

சச்சிதா நந்த மெனும்பெயர் மூன்றிற் றழுவுமா வரணமூன்றிவைதா, நிச்சய வறிவாற் சமாதிஞா நத்தா னிகழ்வுறு சகசஞா நத்தா, லச்சமின் றகலு மிவற்றினை யறியென் றருட்கட னிறைத்தெனையளித்தான், பொய்ச்சழக் ககன்ற மநத்தினூர் நினைக்கும் போரிவாழாறுமா முகனே. (௭)

சுருதியின் றுணிவா னினைவுகொண் டுலகந் துச்சமென் றுணர்த லிச் சயமாங், கருதுறு நினைவை யடக்கியிவ் வுலகங் கானலென் றுணர்ந்திடல் சமாதி, யிருவகை யாய்முன் னுரைத்தவை யின்றி யிலங்கறி வுருவமா யிருத்தல், பொருவறு சகச ஞானமென் றிசைத் தான் போரிவா ழாறுமா முகனே. (அ)

நிச்சய ஞானஞ் சமாதிஞா னங்க ணிராசையார் மனத்தினிற் கலங் கா, தெச்சமென் றிருக்குமாசையார் மனத்தி லிரண்டுஞா னங்களும் கல ங்கு, நச்சுதல் வெகுளி யின்றிய சகச ஞானிக ணசையுளர் போலப், பொய்ச்சகத் துறினுங் கலங்குறு ரென்றான் போரிவா ழாறுமா மு கனே. (கூ)

சித்தொரு நான்கிற் பிரமங்கூ டத்தன் செப்புமா யாரகி தங்கண், மத்தமி லீச னுயிர்கடா மாயா சகிதங்கள் வழுத்து மிவ்வீசன், சத் தெனுந் தன்னை மறப்பிலா மையினுற் றகுகதி தேடிலன் சிவன், பொ ய்த்தலில் வீடு தேடுமென் றிசைத்தான் போரிவா ழாறுமா முகனே.()

ஓதுரு நாம மியானென தசுத்த முயர்ந்துள சுத்தவா தனைக, ளாதிய திரோத மனுக்கிரகித்தா லாக்கைவாக் கியக்கவா தனைக,ளேத மில் காக்ஷி காண்பவ னென்ற விவற்றுளோர் வகுப்பினுன் மனத்தின், போதமி னினைவைப் பகுத்தடக் கென்றான் போரிவா ழாறுமா மு கனே. (கக)

கயிலைவா ழரசு தந்தகற் பகமக் கனவர சுரைகொடிக் கனிநா, லியல்புறு கற்புக் கன்னிமா ரிருவ ரிருமருங் குறைவட மேரு, வயி லுடன் மயிலுங் கோழியுமாடு மழகுடன் படைத்தமெய்க் கடவுள், புயலினஞ் சூழ்ந்து பொழிதரு நீதிப் போரிவா ழாறுமா முகனே.(கஉ)

தடவரைப் பிறந்த நதியராச் சென்று தண்கடற் படமுடி மீது,
சுடர் விரி யுதய கதிர்மணி விளங்குஞ் சுந்தரப் போரிவே லிறையே,
மடமையின் றடியே னுனதரு ளமிர்த வாரியின் மூழ்கிட நினையாய்,
குடமுநி சிவந்த சடைமுடி யிவர்ந்த குரவணிசரணவாரிசனே. (கரு)

## திருப் போரூர்ச் சந்நிதி முறைச் சாரம் முற்றிற்று.



உ

சிவமயம்.

# சத்திய ஞாந சகஜ தசக விளக்கம்.

## பாயிரம்.

சத்திய நன்ஞாந சகச விளக்கமதைப்
பத்தியினுற் கைக்கொண்டு பார்ப்பவர்கள்—வித்தகமாம்
பேரின்ப நண்ணுவர்கள் நண்ணுர் பிறப்பிறப்பைப்
பாரின்ப மெல்லாம் பழித்து.

அஞ்ஞாநம் போக்கி யருட்கதியே சேர்த்தருளு
மெய்ஞ்ஞாந நற்சகச மெய்ந்நூலு—ளெஞ்ஞான்று
நூற்றிருபத் தொன்ரு நுவல்கவியைத் தம்மநத்தே
போற்றிவைப்பர் நல்லோர் பொதிந்து.

பாயிர முற்றும்.

---

## நூல்.

### க - வது, சிவ சகஜம்.

தந்தையி ருயி றமர்மக வென்னுந் தனித்தனி நாமரூபமுமில், சிந்தையில் துதியில் விருப்பொடு வெறுப்பி னினைப்பினெ டியர்பிறப் பென்னும், விந்தையி லிந்த்ர சாலமாய் விள்ங்கும் வித்தையில் சுத்த நிர்க் குணமாய்ச், சிந்தையி லடங்காச் சுடரொளி யறிவாய்ச் சிந்தையற் றிருப்பது சிவமே. (க)

கற்குண மென்றும் பொற்குண மென்றுங் களங்கமற் றகளங்க மென்றுந், துற்குண மென்றுஞ் சற்குண மென்றுந் தொடர்ந்தெழு பந்தம்வீ டென்று, நிற்குண மென்றுஞ் சகளம தென்று நிறைவென் றுங் குறைவென்று மில்லாச், சிற்குண மென்றுஞ் சுடரொளி யறி வாய்ச் சிந்தையற் றிருப்பது சிவமே. (உ)

தற்பர மென்று மதில்விகற் பிக்குந் தனிமுதற் சீவனீ தென்று, நிற்பர மென்றும் வருதல்போக் கென்று நிகழ்ந்தொளி விளக்குவ தென்று, நற்பர மென்றுஞ் சொற்பர மென்று நடைநொடி பாவனை யில்லாச், சிற்பர மென்றுஞ் சுடரொளி யறிவாய்ச் சிந்தையற் றிருப் பது சிவமே. (௩)

சத்தசத் தில்லாத் தீங்கதீங் கில்லாச் சாக்ஷியாய் நிறைந்தொரு சமனாய், வித்தகத் தில்லா வித்ததாய முதாய் விகிர்தியா யகிர்திக ளென்னும், பத்தசத்தில்லா துறுமகம் வாக்குப் பகருதற்கொருவடி வில்லாச், சித்தசித் தில்லாச் சுடரொளி யறிவாய்ச் சிந்தையற் றிரு ப்பது சிவமே. (௪)

பாவரு பழமாய் விளங்கிடப் படமிப் பாவனை யாவினு மறிகில், தேவரு பழமா யமரர்மற் றவர்க டேடருஞ் சச்சிதா நந்த, மேவரு பழமா யந்நியப் பகுப்பின் மெய்பொய்யென் றொருவிகற் பழமில், சீவரு பழமாய்ச் சுடரொளி யறிவாய்ச் சிந்தையற் றிருப்பது சிவமே.

சொற்ககந் தன்னில் வருணபிந் நமுமாய் ஸோகமாய் விளங்குமிந் திரன்றன், விற்கனப் பொற்க னுருமறைந் திடில விகசிதம் பிரபை வீசுருவாய், நிற்கன வட்டத் துச்சிவீற் றிருக்கு நிறைநிலா நீகர்குளிர் ச்சியதாய்ச், சிற்கன வடிவாய்ச் சுடரொளி யறிவாய்ச் சிந்தையற் றிருப்பது சிவமே. (௬)

சத்தமா சுரபே தங்கள்சத் தாதி சமட்டியோ டியர்வியட் டியெனு, நித்தமாய் விளக்குங் கண்டுகொண் டிருக்கு நிமிடமச் செயல்பிறிந் திலதாங், குற்றமாப் பார்க்குங் குறிப்பதற் கில்லை குணங்குறிக் குள்ளிடா தென்றுஞ், சித்தமாஞ் சாக்ஷிச் சுடரொளி யறிவாய்ச் சிந்தையற் றிருப்பது சிவமே. (எ)

தினக்குறிப் பளவில் விகற்பமாய் வரும்போந் திநகர னுதியாஞ் சுடர்போன், றினக்குறிப் பிவையென் றுள்பட வறிதா யிச்சையோ டநிச்சைமற் றிச்சை, மநக்குறிப் பிவையற் றகிலமாய் விளங்கு மாகிறந் தகண்டபே ரொளியாய்ச், சினக்குறிப் பில்லாச் சுடரொளி யறிவாய்ச் சிந்தையற் றிருப்பது சிவமே. (அ)

விதைப்பதற் கணுகா வித்திலா முதலாம் விருக்ஷமாய்ப் பணைத்தற வோங்கு, மதைப்பது மணுமா லொக்கநீள் கால மதுநனு நினைப்பினி லணுகா, விதைப்பதுக் குவமென் றிடுக்குவ தாரிங் கிழுப்பதார் பரிப்பதா ரிசைக்கிற், சிதைப்பதற் கணுகாச் சுடரொளி யறிவாய்ச் சிந்தையற் றிருப்பது சிவமே. (கூ)

மகத்தினுக் கரிய மகத்துமா யடங்கா மணிக்கட லகந்தநீள் கோடியகத்தினுக் கரிய வகமுமாய் நீங்கா வந்தரக் ககநவட் டமுமாய், முகத்தினுக் கரிய முகமுமா யமல மூர்த்தியாய்க் கீர்த்திசே ருணர்வாய்ச், செகத்தினுக் கரிய சுடரொளி யறிவாய்ச் சிந்தையற் றிருப்பது சிவமே. (க0)

தன்மயந் தனக்கா தாரமு மிலதாந் தற்கவா தனைமருங் குதற்கில், பின்மயந் தனைவிட் டயலிருப் பிடமில் பிணிபல சேட்டைநல் குரவி, லென்மயந் தடத்த மெனக்குநான் சரண மென்றிடல் விருத்தியா வதுமில், சின்மயந் தனியாய்ச் சுடரொளி யறிவாய்ச் சிந்தையற் றிருப்பது சிவமே. (கக)

கூ-வது சிவ சகஜ முற்றும்.

---

## உ - வது, சொரூப சகஜம்.

எல்லையற் றசல நீளமற் றருவ மெண்டிசை விளக்குஞ்சித் துரு வா, யல்லையற் றறிதற் காமென லற்றே யகம்புற நோக்கம தற்றிங், கெல்லையற் ளுழிவற் றோர்மயல் களுமற் ளுப்பனை யிடுதலு மற் றுத், தொல்லையற் றென்றுஞ் சர்வசாட் சியதாய்த் தொய்தமற் றறி வதே சொரூபம். (க)

மாத்தற மிகுந்து வீசுபொன் னுருவாய் மைம்மலப் போதமுங் கரைந்து, பாத்தற விரிந்து கல்லுரை யாணி பதம்பிரிப் பவைகளுக் குடைந்து, நீத்தற விருந்து நிமலசீ தளமாய் நிமிர்ந்தடர் பெருக்கறப் பெருகித், தோத்தர விறந்து சர்வசாட் சியதாய்த் தொய்தமற் றறிவ தே சொரூபம். (உ)

நம்பதங் கடந்து நானெனும் போத நன்மகா வாக்கியங் கடந்து, வொம்பதங் கடந்தோ ராறுபல் லவத்தை யோடுற வென்பதுங் கடந் து, தம்பதந் தனித்த தத்துவ மாமத் தாம்பிரிப் பவைபல கடந்து, தொ ம்பதங் கடந்து சர்வசாட் சியதாய்த் தொய்தமற் றறிவதே சொரூபம்.

எம்மத முணர்கின் மதம்படின் விகற்ப மெண்ணறு மதமெனல் கடந்து, சம்மத விளைவில் ஷண்மதங் கடந்து சழக்குறும் வழக்கறக் கடந்து, மும்மத மலிந முனியவை கடந்து மூனமமுங் கொளிவெ ளி கடந்து, தொம்மத விடைவில் சர்வசாட் சியதாய்த் தொய்தமற் றறிவதே சொரூபம். (ஈ)

பந்தமுங் கடந்து சமரச சுகுணப் பாவமிப் பாவமுங் கடந்தே, யந்தமுங் கடந்தங் கநந்தமுங் கடந்தே யத்தொய்தா தொய்தமுங் கட ந்து, நந்தமுங் கடந்து சொல்லரு முப்பாழ் நயப்படு நாட்டமுங் கட ந்து, தொந்தமுங் கடந்து சர்வசாட் சியதாய்த் தொய்தமற் றறிவதே சொரூபம். (ரு)

மாய்விலா தெங்கு மானதாய் நீடி மாநதி சங்கைநீ ராடி, யோய் விலா தங்கங் கதுக்கது வாகி யொழிந்தொழி யாமையில் லறிவா,யாய் விலா வங்கத் தாய்வதா முறப்பா யமலமாய் நிமலநீள் விழியாய்த், தோய்விலா தென்றுஞ் சர்வசாட் சியதாய்த் தொய்தமற் றறிவதே சொரூபம். (௬)

வகுக்குமைந் தொழிற்கும் பிரமனே யாதி வருஞ்சதா சிவமுத லியராற், பகுக்குமைந் தொழிற்கு முரியசத் திகளும் பஞ்சகங் களு மவர்க் கருண, ருகுக்குமைந் தொழிற்கு முயிர்த்துணை யளவி லூகசித் தென்பக லவனுய்த், தொகுக்குமைந் தொழிற்குஞ் சர்வசாட் சிய தாய்க் தொய்தமற் றறிவதே சொரூபம். (எ)

விடுத்திடும் பொருட்கும் விடுத்திடாப் பொருட்கும் விடுத்துமே விடாதுறும் பொருட்கு, மடுத்துறும் பொருட்கு மடுத்துறாப் பொரு ட்கு மடுத்துமே யடாதுறும் பொருட்கும், மெடுத்துறும் பொருட்கு மெடாதுறும் பொருட்கு மெடுத்துமே யெடாதவப் பொருட்குந், தொ டுத்துறும் பொருட்குஞ் சர்வசாட் சியதாய்த் தொய்தமற் றறிவதே சொரூபம். (அ)

சிக்கிலா தென்றுந் தொடர்ச்சிகள் கடந்து சிவபா வனைத்துகள் கடந்து, பிக்கிலா தென்றும் பிணிப்பவை கடந்து பிணக்குட னிணக் கமுங் கடந்து, திக்கிலா தென்றுந் திசையறக் கடந்து திருக்கிலா தொ ருங்குடன் கடந்து, தொக்கிலா தென்றுஞ் சர்வசாட் சியதாய்த் தொ ய்தமற் றறிவதே சொரூபம். (௯)

மங்குல மெழுந்து வளிவசத் துலவி வருமயிற் சுருளென விண் ணிற், றங்குல மொழிந்து வளிவசத் துறும்விண் டனியிருப்படை ந்துகண் டிலபோ, லங்குலங் கெழுந்து தங்கது நினைப்பி லெழுந் தது விதையவந் தரத்திற், றெங்குலங் கொதிந்து சர்வசாட் சியதாய்த் தொய்தமற் றறிவதே சொரூபம். (௧௦)

* பண்டருக் கயவி லருமறைக் கயவில் பகர்பல நூல் களுக் கயவி, லண்டருக் கயவிற் றுருவணே யாதி யளவிலாப் பதங்களுக் கயவில், வண்டருக் கயவிற் செவ்வியற் கயவில் வளர்பஞ்ச பூதங்கட் கயவிற், ருெண்டருக் கயவிற் சர்வசாட் சியதாய்த் தொய்தமற் றறிவதே சொரூபம். (கக)

௯-வது, சோருப சகஜம் முற்றிற்று.

---

## ௯ - வது, விவேக சகஜம்.

சோதியி லெழுந்த விருளினைப் போலுஞ் சொல்லிடிற் சுடுமணல் போலு, மாதியி லெழுந்து வருவினே விகற்ப மாய்ந்ததை யறிந்திடிலீலை, நீதியி லெழுந்த வர்க்கமுன் னந்த நித்திய விநோதமாஞ் சித்தின், வீதியி லெழுந்த துலங்கிந்த்ர சாலம் வித்தையென் றறிவதே விவேகம். (க)

மண்ணவ ராதி தருமசிந்தனையான் மருவிய சுவர்க்கநற் பதமும், பண்ணவ ராதி மூவராஞ் சித்தர் பதமனே யாதியாம் பதமுந், திண்ணவ ராகு மன்றிவர் பதமுந் திரமுறு மற்றையர் பதமும், விண்ணவ ராதி பதங்களும் பார்க்கில் வித்தையென் றறிவதே விவேகம். (உ)

பருத்தியா னூலங் நூலினல் வர்ணம் படம்பல விகற்பமாய் விளங்குந், திருத்தியாற் காற்றக் காற்றிஞ லங்கி திலங்கிடு மங்கியில் விசித்ரங், கருத்திஞ லோதி லொன்றதி லநந்தகற்பித நினைப்பவை பேதம், விருத்தியால் வரும்வேற் றுமைகளீ தெல்லாம் வித்தையென் றறிவதே விவேகம். (௩)

* பண்டர் - துட்டர்.

உறுப்பினே டுருவாய்க் காட்டுகோ னலினீ ருலவிட னிரவியி னியலிற், கறுப்பினே டியர்சேப் போடல்வான் மீதிற் கரிபரி மண்படர் மூயலின், மருப்பினே டியர்வெம் பரிமருப் பென்ன மயக்கிவை வருமுறை பலவாய், வெறுப்பினே டியர்பின் விருப்பவை யிரண்டும் வித்தையென் றறிவதே விவேகம். (ச)

பூதமைந் துருவா முலகமு மேனைப் புகல்பல பதார்த்தமு மதத்தின், பேதமும் புந்தி விகற்பமே யதையும் பேணியே யடக்கிடி லறிவிற், பாதமுற் றறிவாய்ப் பூரண சுகமாய்ப் பரமமா யிலங்கிடு மெங்கும், வேதமுற் கலைக ளுட்கிடை யருத்தம் வித்தையென் றறிவதே விவேகம். (ரு)

அவத்தையும் விசுவ ஞதியாந் தூல வாகமுன் மூன்றுமுக் குணமும், பவத்தையிங் கொழிக்குந்தத்பத வீசன் பாலுறுந் தொழில்களு மற்றும், தவத்தையுட் கொள்ளு மறிஞரின் மொழியாற் றன்பயில் வாற்கலை யத்னுல், விவத்தையுத் தியினுற் கற்பித மனைத்தும் வித்தையென் றறிவதே விவேகம். (சு)

சத்தியா ததனு லிருக்கையுஞ் சித்தாற் றிகழவும் பெற்றுநற் சுகமும், நித்தியா நந்தத் துற்றுமிவ் வுலக நேர்சுதந் தரமெனச் சூழும், அத்தியா சத்திற் கதிட்டிய வுருவ மன்றிமுக் காலமு மின்றும், வித்தியா ததினன் விலாசமா மதனுல் வித்தையென் றறிவதே விவேகம்.

மழையெனப் பலவா யண்டவி கற்பம் வகுப்பினுங் காரெனு மாயை, தழைவுறு வானோர் சங்கமி லான்மா தனக்கொரு குறைவு மின் றாகும், பிழைபடு முலகோர் கூற்றெலா மயலாம் பிங்கமி லதுவக மதனுல், விழைவினன் னெஞ்சா லுரமுற வனைத்தும் வித்தையென் றறிவதே விவேகம். (அ)

துருவ சஞ்சார மண்ணலர் வானிற் றண்ணென வழிக்கொளல் காகம், மருவ வெண் ணிறத்தை நிம்பகன் மதுரம் வாய்ப்பவெத் தேவர்முற் றோன்றி, வருவரென் றிடினு மட்டமா சித்தி வயங்கினுஞ் சேரிறும் பூதும், வெருவர லுருது சமர்த்தமா மாயை வித்தையென் றறிவதே விவேகம். (கூ)

புலன்களு மதிற்சேர் பொறிகளும் பிராணன் புந்தியே கரணமோர் நான்குங், குலன்முத லபிமா நஞ்செயு முயிருங் கூடியு வவித்தையே யெழுவாய்; சலமுறு பின்னை வெள்ளநீர் பலத்தைச் சமமுறுந் தத்துவக் கூட்டம், வெலலுறு நெஞ்சா னிரந்தரப் பயில்வால் வித்தையென் றறிவதே விவேகம். (கo)

துன்னுமெப் பொருளுந் தன்னுரு வாகித் துலங்கிடு ஞாநநற் றிடத்தா, லுன்னுமெக் கருத்தா வெக்கர ணங்கொண் டுலையுமெப் போகமெந் நிமித்தம், பன்னுமெப் பலபோக் கியம்விரும் புதலாம் பார்த்திடில் வெறுத்தலு மின்றும், மின்னுமெய்ச் சொரூப சுககந மாகும் வித்தையென் றறிவதே விவேகம். (கக)

மூன்றாவது விவேக சகஜம் முற்றிற்று.

---

ச-வது, சமாதி சகஜம்.

பொன்னிலே பூணும் புவியினிற் கடமும் புணரியிற் றாங்கமும் போல, வென்னிலே தோன்றி யழியுமைம் பூத மெச்சரா சரங்களு மெனக்கு, முன்னிலா பின்னு மொன்றிலா பின்னு முடிவிலா வரிய வான் மோநந், தன்னிலே தானே தனையுணர் வதும்போய்த் தானி றந் திருப்பதே சமாதி. (க)

எற்பட விளங்கும் விவேகவஃ நியினு விதயவைம் பூதத்தை யெரித்தே, கிற்பன நடப்ப யாவையு மழித்து நேர்பட நிராமய மாக்கி மற்பெரும் பூதமாயையை மாய்த்து மாயையான் மாவிலே மடித்துத், தற்பரம் பொருளாய்த் தனையுணர் வதும்போய்த் தானிறந் திருப்பதே சமாதி. (உ)

சித்துவி னுருநா னென்றகண் டிதமாய்ச் செகத்தறி யாமையற் றறிவாய், மத்துவ மான மிறந்தபே ரொளியாய் மறப்பொடு நினைப்பவை மாற்றிப், பத்துவன் விடுவா னத்துவா வென்னும் பல்லுயிர் பிரிவறக் காணுந், தத்துவ முடிவாய்த் தனையுணர் வதும்போய்த் தானிறந் திருப்பதே சமாதி. (௩)

சுட்டுத லறவே துரியமுங் கடந்து சூநியா சூநியந் தன்னி, லெட்டுத லறவே யேகமா யொன்று யெங்கணு மகண்டபே ரறிவாய்க், கட்டுத லறவே கடவடி வமும்போய்க் ககநமொத் தசஞ்சல னுயத், தட்டுத லறவே தனையுணர் வதும்போய்த் தானிறந் திருப்பதே சமாதி. (௪)

ஆக்குத லின்றி யழித்திட லின்றி யநித்திய நித்தியமின்றி, நோக்குதலின்றி நோயற வின்றி நொந்தெழும் பந்தமற் றின்றிப், போக்குத லின்றி வரவிதென் றின்றிப் பொய்ப்பொருட் போதமற் றின்றித், தாக்குத லின்றித் தனையுணர் வதும்போய்த் தானிறந் திருப்பதே சமாதி. (௫)

ஊனவ னுக வுயிரவ னுக வுளதில தருவரு வாக, வானவ னுக வளியவ னுக வந்நீர் மண்முத லாக, நானவ னுக நன்மைதீ தாக நடுவடி முடிதிசை யெல்லாந், தானவ னுகத் தனையுணர் வதும்போய்த் தானிறந் திருப்பதே சமாதி. (௬)

மங்குமைம் பூதப் படலமுங் கீறி மாசெனு மிருளறத் துரந்து, பொங்கு பேரொளியாய் நிறைந்தொளி பரப்பிப் போதபூ ரணநிரா மயமா, யெங்குமோ ருருவா யெண்டிசை யண்ட வெண்ணில்பல் கோடிக ளனைத்துந், தங்குமா தாரவாய்த் தனையுணர் வதும்போய்த் தானிறந் திருப்பதே சமாதி. (எ)

ஆணுநான் பெண்ணு னலியுநா னென்ன வான்மதற் சொரூப மாய் விளங்குஞ், சேணுநான் மற்றொன் றற்றசித் தேநான் செகத்து டன் சீவதற் பரமாய்க், காணுநா னென்னக் கண்டுகொண் டிருக்குங் கண்ணுநான் கண்ணிடை யொளிநான், றூணுநா னென்னத் தனை யுணர் வதும்போய்த் தானிறந் திருப்பதே சமாதி. (அ)

துக்கமற் றறிவிற் கண்டதெல் லாம்போய்த் துறந்தறத் துன் னிய வடிவாய், அக்கமற் றறிவற் றழிவிலாப் பரமா யறிந்தவ னறி விறந் தவனாய்ப், பக்கமற் றறிவாய்ப் பரமமா யொன்றாய்ப் பதம்பிறி தின்றிநின் றென்றுந், தக்கமற் றறிவாய்த் தனையுணர் வதும்போய்த் தானிறந் திருப்பதே சமாதி. (கூ)

என்மய னனே யெதிரிலாப் பெருங்கண் ணனைப்பிறி வறிற் பொருளில்லைப், பின்மயந் தானே யென்னிடத் துலகம் பிறந்திறந் தென்னிலே யொடுங்குஞ், சின்மய வடிவாய்ச் சிவமுத லீறாய்ச் சிந்தனைக் குள்ளிடா ததுவே, தன்மயந் தானாய்த் தனையுணர் வதும் போய்த் தானிறந் திருப்பதே சமாதி. (க0)

கண்ணிலாக் காட்சி காண்பதொன் றில்லைக் காதலாற் கேட்ப தொன் றில்லை, விண்ணிலா விடயற் றில்லையா தலினல் விண்ணினு நொய்யவான் வடிவாய்ப், பண்ணிலாப் பொருளாய்ப் பழமறை முடிவாய்ப் பகலிர வொன்றுமில் லாமற், றண்ணிலா நிறைவாய்த் தனையுணர் வதும்போய்த் தானிறந் திருப்பதே சமாதி. (கக)

சு-வது சமாதி சகஜம் முற்றிற்று.

---

## ரு-வது பிரஹ்ம சகஜம்.

சீரொளி யாகிச் சிற்சுகக் கடலாய்ச் சித்தசித் திரண்டற நீண்ட, பாரொளி யாகிப் பார்முதற் பூதம் பரிதிமுச் சுடர்களு மதுபோ, யேரொளி யாகி யெதிரிறந் தொன்று யேகமா யெல்லையொன்றில்லாப் பேரொளியாகி யகண்டபூ ரணமாய்ப் பேச்சிறந் திருப்பதே பிரஹ்மம். (க)

கண்டிரா தறிவி லொன்றுமிங் கில்லைக் காறலை யறிவின்மற் றில்லை,விண்டிரா தெவைக்கு முள்ளுறை வடிவாய் விளங்குசின் மாத்திர மதனிற், பண்டிரா மாயை யென்றொரு பொரு ளாய்ப் பகர்தலி யான் பார்க்கிலங் கிலையாற், பெண்டிரா ணலியற் றகண்டபூ ரணமாய்ப்பேச்சிறந் திருப்பதே பிரஹ்மம். (உ)

ஏசருஞ் சுருதி யாகமப் பிரிவா லெண்ணிவிண் டறிவதற் கனுகாத்,தேசரும் பொருளா யிருந்தயா மென்றுந் தெளிவறிந் ததிலிருந் தாறி,மாசருஞ் சுடராய் நிறைந்தபே ருருவாய் மநமுதற் பகுப்பிலா தொன்றாய்ப், பேசரும் பதமா யகண்டபூ ரணமாய்ப் பேச்சிறந் திருப்பதே பிரஹ்மம். (௩)

சுத்தமுற் றசுத்த வாசனைத் தொடர்பைச் சுட்டுநீ றாக்கியான் மாவிற்,சித்தம்வைத் ததுநா னுயிருந் ததனைச் சிக்கறக் கண்டது நீங்கிக், குத்தமுக் குணத்தின் குறியறக் களைந்து குளிர்ச்சியா யறிவகத் தழுந்திப், பெத்தமுத் தனும்போ யகண்ட பூரணமாய்ப் பேச்சிறந்திருப்பதே பிரஹ்மம். (௪)

சீருடனெவைக்குந் தன்மய மதுவாய்ச் செகந்தனை விளக்குசித் தொளியாய்ப்,பாருட னீர்தீ வளிவெளி யொளியாய்ப் பகர்பல நாமரூபமும்போய், வேருடன் பணையாஞ் சுகதமு மொழிவில் வெறுவெளி நிறைந்தசூ நியமாய்ப்,பேருட னூரற் றகண்டபூ ரணமாய்ப் பேச்சிறந் திருப்பதே பிரஹ்மம். (௫)

காணுதல் கேட்கப் படுபவை யென்றுங் களங்கமற் றகளங்க வாகி, நாணுதல் நடத்தல் செய்திட லவற்றி னுனவ னியவ ளென் றுங், கோணுதல் வழங்கல் குறிகளொன் றில்லாக் கோசரத் தொடர் பெனு மவற்றிற், பேணுத லில்லா வகண்டபூ ரணமாய்ப் பேச்சிறந் திருப்பதே பிரஹ்மம்.

(௬)

நாதமற் றதனி லெழுந்தவிந் தற்று நடுமுதற் பக்கமு மற்று, வா தமற் றைம்பூ தப்பிரி வற்று வகுப்பதற் கொருபொரு ளற்றுப், போ தமற் றடுத்த பொறிபுல னற்றுப் பொய்யினே டுயர்மெய்யு மற்றுப், பேதமற் றறிவா யகண்டபூ ரணமாய்ப் பேச்சிறந் திருப்பதே பிரஹ் மம்.

(௭)

அரிதுட னெளிது மதுவிது வென்று மகங்காரப் பகுதியா னெ ன்றுந், திரிதுட னெதிரிட் டுறுந்திரு சியமாந் திரிபுடிச் செயலற மாற் றி, வெரிதுட னிருந்த படியிருந் ததுவாய் வெள்வெளிக் குள்வெளி யாகிப், பெரிதுடன் சிறிதற் றகண்டபூ ரணமாய்ப் பேச்சிறந் திருப்ப தே பிரஹ்மம்.

(௮)

திருக்கறத் தமத்தோற் றடுத்தெழுஞ் சுடராய்த் திரிவித கரண மு மொடுங்கித், தருக்கறப் பரமோ டபரமரய்த் தானுய்த் தடையறத் தனியிருந் தகத்தின், செருக்கற விருப்பே வடிவமா யறிவாய்ச் சேண றப் பாய்ந்தறச் சேனுய்ப், பெருக்கறப் பெருகி யகண்டபூ ரணமாய்ப் பேச்சிறந் திருப்பதே பிரஹ்மம்.

(௯)

கருங்கணுர் மடவார் கலவியிற் றங்கிக் கடைப்படும் பொன்னில த் தாசை, தருங்கணுர் மனக்கோட் டறப்படு மவற்றைத் தாண்டியா ன் மாவினிற்ருனுய்ச், சுருங்கணுர் வின்றிச் சுகசொரு பமுமாய்ச் சுட் டறச் சுருதியின்முடிவாய்ப், பெருங்கணு யொன்ரு யகண்டபூ ரண மாய்ப் பேச்சிறந் திருப்பதே பிரஹ்மம்.

(௧௦)

தாயெனத் தேனின் ருசியெனச் சுருதி யொத்துயர் குருப ரன் சோதி, நீயெனத் தெரிய வருபர மார்த்த நிலைதனை நினைதல் சங் கற்ப, மாயெனச் சொன்ன மொழியடிப் பார்க்கின் மலடிசேய் முய லின்கோ டுலகம், பேயெனத் தெளிவோ ரகண்டபூ ரணமாய்ப் பேச் சிறந் திருப்பதே பிரஹ்மம். (கக)

ரு-வது, பிரஹ்ம சகஜ முற்றிற்று.



## சூ-வது, ஆநந்த சகஜம்.

தலையிலா தடின்கீ ழடிநடு வில்லாத் தற்பரவி சும்பதாய்த் தங் கு, நிலையிலா தெங்கும் விகற்பசங் கற்ப நினைவிலா தயலற நிறைந்து, துலையிலா தென்றுஞ் சமீபமற் றிலகுந் துரியமா யளவில் சிற்சுடரா, யலைவிலாக் கடலாய் நிரதிசய வடிவா யசஞ்சல வறிவதா நந்தம். (க)

பின்னிய பஞ்ச கோசபூ தமும்போய்ப் பிரமமாய் நினைவினு னென்னும், பன்னிய வதுவா யதுவெனல் நீங்கிப் பதிப சுபாசமற் றிறந்து, மன்னிய சுடராய்த் தேங்கியெங் கணுமாய் மநமது பற்றுத லொழிந்து, அந்நிய மெனல்போய் நிரதிசய வடிவா யசஞ்சல வறிவதா நந்தம். (உ)

கண்டமு மிறந்து கருவிகள் கரணங் காண்பவன் காட்சிபோ யி றந்து, பிண்டமு மிறந்து பிறப்பிறப் பிறந்துபிரியமப் பிரியமு மிறந் த, விண்டமும் மலத்தின் விளைவது மிறந்து விடயமவ் விடயமு மிற ந்து, அண்டமு மிறந்து நிரதிசய வடிவா யசஞ்சல வறிவதா நந்தம். ()

கொடுக்கும திறந்து வாங்கும திறந்து கோசர வீதியோ டுருவித், தடுக்கும திறந்து நடக்கும திறந்து தங்குமூ ரென்பது மிறந்து, படு க்கும திறந்தே யெழுதன்மற் றிறந்து பங்கிடும் பக்கமற் றிறந்தங், கடு க்கும திறந்து நிரதிசய வடிவா யசஞ்சல வறிவதா நந்தம். (ச)

துச்சமற் றிறந்து வினவிட லிறந்து துகளுறுந் துடிப்பவை யிறந்து, மிச்சமற் றிறந்து விளைவிதி யிறந்து மிகுந்துணர் துரியமு மிறந்து, கொச்சமற் றிறந்து பகைதகை யிறந்து கொழுந்துற வளர்ந்திட லிறந்தே, யச்சமற் றிறந்து நிரதிசய வடிவா யசஞ்சல வறிவதா நந்தம். (௬)

சிவந்தவிர் விறந்து செய்கைசெய் விக்கை சிநம்பல கோட்டிகளிறந்து, பவந்தவிர் விறந்து செகம்பிறி திறந்து பகலிர வென்பது மிறந்து, தவந்தவி ரிறந்து கவடுற விறந்து தனிமையாய்த் தமஞ்சமம் பிறந்தே, யவந்தவி ரிறந்து நிரதிசய வடிவா யசஞ்சல வறிவதா நந்தம். (௬)

சங்கமு மிறந்த சங்கமு மிறந்து சாக்ஷியாய்ச் சாக்ஷிமற் றிறந்து, துங்கமு மிறந்த துங்கமு மிறந்து துதிபல நாமமு மிறந்து, பொங்கமு மிறந்தங் கொடுங்குத லிறந்து போதம போதமு மிறந்தண், ணங்கமு மிறந்து நிரதிசய வடிவா யசஞ்சல வறிவதா நந்தம். (எ)

சொல்லலு மிறந்து சொற்பொரு ளிறந்து சோகமு மசோகமு மிறந்தே, யல்லலுற் றிறந்தங் கிவனவ னீநா னிதுவது வென்பது மிறந்து, கொல்பவன் பொருள்போற் கொல்லலு மிறந்து கொல்பழி யென்பது மிறந்தங், கல்லலு மிறந்து நிரதிசய வடிவா யசஞ்சல வறிவதா நந்தம். (அ)

மச்சர முதன்மாய்ந் துறுநன விறந்து வருகன சுழுத்தியு மிறந்தே, யிச்சையு மிறந்தே யிடும்பைமற் றிறந்தங் கிசைவசை யென்பது மிறந்து, முச்சர மிறந்து பிராணவ மிறந்து முச்சுட ராதிமற் றிறந்தெவ், வச்சர மிறந்து நிரதிசய வடிவா யசஞ்சல வறிவதா நந்தம். (௯)

சுட்டமுவ் விறந்து நங்கண விறந்து சுகமுட னசுகமு மிறந்திங், கிட்டமு மிறந்து வினையெதி ரிறந்தாங் கில்லறந் துறவற மிறந்து, நட்டமு மிலாபா லாபமு மிறந்து நன்மைதீ தென்பது மிறந்தே, யட்டமு மிறந்து நிரதிசய வடிவா யசஞ்சல வறிவதா நந்தம். (௧0)

இகம்பர மிறந்த சித்தசீ வாதி யிலகும திலகிலா திறந்து, தகம் பர மிறந்த தகமிலா திறந்து துணைவரும் பல்லுயி ரிறந்து, சகம்பர மிறந்து விரிதுரி சிறந்து சுருதியோர் சுரர்முத லிறந்தே, யகம்புற மிறந்து நிரதிசய வடிவா யசஞ்சல வறிவதா நந்தம். (கஅ)

சு-வது, ஆநந்த சகஜ முற்றும்.

---

## எ - வது, அமல சகஜம்.

தற்பத முற்ற சந்நதி விளக்காய்த் தண்ணருட் பிரபையாய் நிரம்பிப், புற்புத நித்தம் வந்துறும் போகும் பொலிவெனக் கண்டிலாததுவாய்ச், சிற்பத பாதத் துவம்பயில் பொதுவாய்ச் சீவரா சிகளொடு முதித்தே, யற்புதச் சுத்த நிரஞ்சநக் கடலா யளக்கருஞ் சுடரறி வமலம். (க)

கண்டமன் றகண்ட மன்றதி னடுவிற் கருதரும் பீடம தமர்ந்து, விண்டருஞ் சநக ராதிநால் வர்க்கும் விகசிதம் பொருளற விளக்கித், துண்டகண் டிதமற் றகண்டைக ரசமாய்த் துலங்குசின் மயகுரு வடிவா, யண்டநம் பதமாய் நிரஞ்சநக் கடலா யளக்கருஞ் சுடரறி வமலம்.

உறுதிமற் றளவி லகிலநா னென்னு முடன்முத லனைத்துநா னென்னு, மிறுதிகட் டேமற் றென்னதீ தென்னு மீதிறந் துறுதனு னென்னு, மறதிகட் டிலதா யனைத்துநா னென்னு மநத்துகள் பந்தநா னென்னு, மறுதிவிட் டகன்று நிரஞ்சநக் கடலா யளக்கருஞ் சுடரறி வமலம். (ங)

வருந்துணை யெவைக்கு முயிர்க்குயி ராகி வலமிட மெனச்சுழன் றிலதாய்த், தருந்துணை யாகி யெள்ளினுள் ளெண்ணெய் தங்கிய வாறெனப் பலகாற், பெருந்துணை முடியா முதலென நெடிய பெருங்கணுய்க் குளிர்ந்துள தாறி, யருந்துணை வடிவாய் நிரஞ்சநக் கடலா யளக்கருஞ் சுடரறி வமலம். (ச)

துச்சமற் றிறந்து வினவிட லிறந்து துகளுறுந் துடிப்பவை யிற ந்து, மிச்சமற் றிறந்து விளைவிதி யிறந்து மிகுந்துணர் துரியமு மிற ந்து, கொச்சமற் றிறந்து பகைதகை யிறந்து கொழுந்துற வளர்ந்திட லிறந்தே, யச்சமற் றிறந்து நிரதிசய வடிவா யசஞ்சல வறிவதா நந் தம். (௫)

சிவந்தவிர் விறந்து செய்கைசெய் விக்கை சிநம்பல கோட்டிக ளிறந்து, பவந்தவிர் விறந்து செகம்பிறி திறந்து பகவிர வென்பது மிறந்து, தவந்தவி ரிறந்து கவடற விறந்து தனிமையாய்த் தமஞ்சமம் பிறந்தே, யவந்தவி ரிறந்து நிரதிசய வடிவா யசஞ்சல வறிவதா நந் தம். (௬)

சங்கமு மிறந்த சங்கமு மிறந்து சாக்ஷியாய்ச் சாக்ஷிமற் றிறந்து, துங்கமு மிறந்த துங்கமு மிறந்து துதிபல நாமமு மிறந்து, பொங்கமு மிறந்தங் கொடுங்குத விறந்து போதம போதமு மிறந்தண், ணங்கமு மிறந்து நிரதிசய வடிவா யசஞ்சல வறிவதா நந்தம். (௭)

சொல்லலு மிறந்து சொற்பொரு ளிறந்து சோகமு மசோகமு மிறந்தே, யல்லலுற் றிறந்தங் கிவனவ னீரா னிதுவது வென்பது மிறந்து, கொல்பவன் பொருள்போற் கொல்லலு மிறந்து கொல்பழி யென்பது மிறந்தங், கல்லலு மிறந்து நிரதிசய வடிவா யசஞ்சல வறி வதா நந்தம். (௮)

மச்சர முதன்மாய்ந் துறுநனு விறந்து வருகனு சுழுத்திய மிறந் தே, யிச்சையு மிறந்தே யிடும்பைமற் றிறந்தங் கிசைவசை யென்பது மிறந்து, முச்சர மிறந்து பிரணவ மிறந்து முச்சுட ராதிமற் றிறந்தெ வ், வச்சர மிறந்து நிரதிசய வடிவா யசஞ்சல வறிவதா நந்தம். (௯)

சுட்டமுவ் விறந்து நங்கனு விறந்து சுகமுட னசுகமு மிறந்திங், கிட்டமு மிறந்து வினையெதி ரிறந்தாங் கில்லறந் துறவற மிறந்து, நட்டமு மிலாபா லாபமு மிறந்து நன்மைதீ தென்பது மிறந்தே, யட் டமு மிறந்து நிரதிசய வடிவா யசஞ்சல வறிவதா நந்தம். (௧0)

இகம்பர மிறந்து சித்தசி வாதி யிலகுும திலகிலா திறந்து, தூகம் பர மிறந்த தூகமிலா திறந்து துணைவரும் பல்லுயி ரிறந்து, சுகம்பர மிறந்து விரிதுரி சிறந்து சுருதியோர் சுரர்முத லிறந்தே, யகம்புற மிறந்து நிரதிசய வடிவா யசஞ்சல வறிவதா நந்தம். (கக)

சூ-வது, ஆநந்த சகஜ முற்றும்.

---

எ - வது, அமல சகஜம்.

தற்பத முற்ற சந்தி விளக்காய்த் தண்ணருட் பிரபையாய் நிரம்பிப், புற்புத நித்தம் வந்துறும் போகும் பொலிவெனக் கண்டிலா ததுவாய்ச், சிற்பத பாதத் துவம்பயில் பொதுவாய்ச் சிவரா சிகடொறு முதித்தே, யற்புதச் சுத்த நிரஞ்சநக் கடலா யளக்கருஞ் சுடரறி வமலம். (க)

கண்டமன் றகண்ட மன்றதி னடுவிற் கருதரும் பீடம தமர்ந்து, விண்டருஞ் சநக ராதிநால் வர்க்கும் விகசிதம் பொருளற விளக்கித், துண்டகண் டிதமற் றகண்டைக ரசமாய்த் துலங்குசின் மயகுரு வடிவா, யண்டநம் பதமாய் நிரஞ்சநக் கடலா யளக்கருஞ் சுடரறி வமலம்.

உறுதிமற் றளவி லகிலநா னென்னு முடன்முத லனைத்துநா னென்னு, மிறுதிகட் டைமற் றென்னதீ தென்னு மீதிறந் துறுதனு னென்னு, மறதிகட் டிலதா யனைத்துநா னென்னு மாத்துகள் பந்தநா னென்னு, மறுதிவிட் டகன்று நிரஞ்சநக் கடலா யளக்கருஞ் சுடரறி வமலம். (உ)

வருந்துணை யெவைக்கு முயிர்க்குயி ராகி வலமிட மெனச்சுழன் றிலதாய்த், தருந்துணை யாகி யெள்ளினுள் ளெண்ணெய் தங்கிய வாறெனப் பலகாற், பெருந்துணை முடியா முதலென நெடிய பெருங்கணுய்க் குளிர்ந்துள தாறி, யருந்துணை வடிவாய் நிரஞ்சநக் கடலா யளக்கருஞ் சுடரறி வமலம். (ச)

குத்தமற் றிலதாய் வளம்பட விளங்குங் குறிபடுங் குணகுணி யிலதாய்ச், சுத்தநிர்க் குணமாய்ப் பரிணமிப் பிலதாய்ச் சுதந்தர மென் பதொன் றில்லாச், சித்தமுற் றமைதிற் சாக்ஷியாய் நின் று சிலந்திநூ ஞெருடுக்குதல் போலா, மத்தமற் றிலதாய் நிரஞ்சனக் கடலா யளக்கருஞ் சுடரறி வமலம். (௬)

தங்குற மின்றி யினக்குறிப் பின்றித் தகுந்தகா தென்பது மின்றி, நங்குற வின்றித் தீதுணர் வின்றி நலிந்திட னலிந்திடா தின்றிப், பொங்குற வின்றி வருதிசை யின்றிப் பொறிபுலன் கரணமு மின்றி, யங்குர மின்றி நிரஞ்சனக் கடலா யளக்கருஞ் சுடரறி வமலம்.()

குடங்குதிர் சுவருங் கடல்குள மாறுங் குன்றுடன் பிறங்கன்மண் முதலாங், கடங்களி னிரம்பி யிருக்கும்விண் ணொத்துக் கரசரணங்களா யசைக்கும், படங்களை விளக்கு நடங்குறிப் பிலதாய்ப் பகருஞ் சித்தசத் திசையி, லடங்கலும் மிருந்து நிரஞ்சனக் கடலா யளக்கருஞ் சுடரறி வமலம். (எ)

துஞ்சலுற் பவமென் றுறுவிகற் பிலதாய்த் துயிலுடன் விழிப் பில தாய்க், கொஞ்சமென் மேலு நிரம்பின தென்றே குறித்திடும் விருத்தியு மிலதா, யெஞ்சலென் றடருங் காரிய விகற்ப மெண்ண லெண் ணமையொன் றிலதா, யஞ்சலென் றுயிர்க்கு நிரஞ்சனக் கடலா யளக்கருஞ் சுடரறி வமலம். (அ)

கண்டில ரொருவர் கேட்டதன் றியினிற் கலையதற் கின்னதென் றுணர்வால், விண்டில ரொருவர் சுருதியின் வழியால் விளக்குவ தலதுமற் றில்லை, கொண்டில ரொருவர் கொடுத்தில ரொருவர் கொண்டகோ லம்பல பிரிவி, லண்டில ரொருவர் நிரஞ்சனக் கடலா யளக்கருஞ் சுடரறி வமலம். (௯)

இடைந்தவ ரில்லை யதைத்தவிர்ந் தப்பா லீகபர மிரண்டினுக் குள்ளாய்க், குடைந்தவ ரில்லை திரிவித விருத்தி குவிந்தது நடுநிலை பி சகிக், கடந்தவ ரில்லை சுகமவை யசுகங் களைத்தவிர்ந் திருந்தநின் வசத்தி, லடைந்தவ ரில்லை நிரஞ்சனக் கடலா யளக்கருஞ் சுடரறி வமலம். (௧௦)

மடைக்கல மென்னும் விபரிதப் பகுதி மட்டதி லுருவின தில் லை, கடைக்கல மெவைக்குஞ் சிற்சுவை விசிதங் காமரு பிகட்டுயிர் மூ லம், படைக்கலந் திடைக்கப் படுமுத லனைத்தும் பதினெட்டா யுதங் களுக் கசையா, தடைக்கல மென்னு நிரஞ்சனக் கடலா யளக்கருஞ் சு டரறி வமலம். (௧௧)

எ-வது, அமல சகஜ முற்றிற்று.

---

## அ-வது, சாக்ஷி சகஜம்.

பாராதி நடத்தி வைக்குமைந் தொழிலும் பகலிர வென்றுறும் பரிசு, நாராதி நடத்தி நெளிபணி போலு நயப்பறு தறிநரன்போலுங், காராதி நடத்தி யெழுந்தமின் னலைப்போற் கலந்திருந் துயர்ந்தவெற் பென்னச், சாராதி நடத்தி யெங்கணுஞ் சமமாய்ச் சகசமா யிருப் பதே சாக்ஷி. (௧)

ஒங்குமா பூத மைந்துட னிரவி யொளிமிகு சோமனற் பூமான், றூங்குமா மிவையெண் வடிவமாய் நிரம்பித் தத்துவங் களையற விளக் கி, நீங்குமா மகத்துத் தத்துவ முடிவாய் நிரவய போதமா யென்றுஞ், சாங்கமாய் நிறைந்தே யெங்கணுஞ் சமமாய்ச் சகசமா யிருப்பதே சாக்ஷி. (௨)

நித்தியப் பொற்கண் பிரபைநீ டுருவாய் நிகழ்ந்தற வோங்கிவிண் டகன்று, முத்தியக் கரைகண் டுறும்படி யகில முகமக மிரண்டினும் பொதுவாய், மத்திய கமல நடுவணை யொல்கி மாசற நீடுவா மதியாய்ச், சத்தியக் கடலா மெங்கணுஞ் சமமாய்ச் சகசமா யிருப்பதே சாக்ஷி. (௩)

வஞ்சய பார குடிலகாம் பீர வளமிகு டம்பகர் மிதமு, மஞ்சயத் தரமா மாணியா முருவா யசங்கசஞ் சலரகி தமுமாய்த், தொஞ்சய மில்லா ததோமுக வாறு தோஷம தென் பவை யென்னுஞ், சஞ்சய மில்லா வெங்கணுஞ் சமமாய்ச் சகசமா யிருப்பதே சாக்ஷி. (ச)

பங்கியா தென்றும் பகுத்தவர்க் கறிவாய்ப் பரைசிவ போதமுங் கலந்து, தங்கியா தென்று யறிவதற் கில்லாத் தற்களைச் சுபாவமாய் நிறைந்து, முங்கியா தென்றும் பிசகறப் பிரஞ்ஞை முழுச்சுடர் மேனியாய் நிறைந்து, சங்கியா தென்று மெங்கணுஞ் சமமாய்ச் சகசமா யிருப்பதே சாக்ஷி. (ரு)

காந்தநீள் காந்த முன்னிலூ சியைப்போற் கட்பட நாமரூ பத்தை, யேந்திநீள் கால மசைவறக் கண்டாங் கிருப்பைவிட் டகலில் காட் சியதாய், நீந்திநீள் காலற் றெண்டிசைக் கோத்து நிவாதமாங் தலவிளக் கென்னச்,சாந்திநீள் வடிவா யெங்கணுஞ் சமமாச் சகசமா யிருப்பதே சாக்ஷி. (சு)

இமம்பல கிரணம் விரிவற வோங்கி யிரவிமுன் னிலையொடுங் கிடல்போல், நிமம்பல விகற்ப படலமும் பாந்து நிமிர்ந்தது கரந்துடலடக்கித், தமம்பல விளைய மிகுபுகக் கரணங் தடித்தகக் கரணமுன் னுகர்ந்து, சமம்பல கலனற் றெங்கணுஞ் சமமாய்ச் சகசமா யிருப்பதே சாக்ஷி. (எ)

தங்குவெண் பிறையிற் குறைநிறை களங்கந் தவிர்ந்திட விவை பல விகற்பம், பங்குவெண் டாள முதனவ மணிக்கும் பகர்ந்திடிற் குற்றமுண் டாகி, யெங்கும்வெண் படிகப் பருப்பதம் போல வெப்பொரு ளப்பொரு ளதுவாய்ச், சங்குவெண் சுடரா யெங்கணுஞ் சமமாய்ச் சகசமா யிருப்பதே சாக்ஷி. (அ)

நெஞ்சல மலந்து கனபரி ணும நெடுந்திசை யெண்ணமுற் றேறுய்வி, லுஞ்சல தலைந்து வருதல்போ தலும்போ லுருவருப் பிறந்து

மீண் டணுகா, தஞ்சல திசைந்து சருவமுந் தன்னு ளடக்கிநின் றய லற விரிந்து, சஞ்சல மிறந்தே யெங்கணுஞ் சமமாய்ச் சகசமா யிருப் பதே சாக்ஷி. (கூ)

தாய்கைசற் றின்றி மகவது மகவுந் தயையிரண் டறுந்தயை யல் லத், தூய்கைசற் றின்றி யழைத்தெடுத் தெடுக்கித் துணையெனக் கண் டுயிர் முழுது, மாய்கைசற் றின்றிக் கன்னல்கோ தகற்று மாற்றமற் றடங்கலுஞ் சுவையாய்ச், சாய்கைசற் றின்றி யெங்கணுஞ் சமமாய்ச் சகசமா யிருப்பதே சாக்ஷி. (க0)

கற்குணஞ் செம்பிற் களிம்படர் குணம்போற் கடினமாங் குணங் களுக் குரிய, சொற்குண முணர்தற் குரியவிண் ணுருவாய்ச் சொப் பிர காசசுந் தரமாய், நிற்குண வடிவா யழிவில்சின் மயமாய் நிருவி கற் பசசுக ரசமாய்ச், சற்குண முதலா யெங்கணுஞ் சமமாய்ச் சக சமா யிருப்பதே சாக்ஷி. (கக)

அ-வது, சாக்ஷி சகஜ முற்றிற்று.

---

## கூ-வது, பரம சகஜம்.

இன்னகா ரணமீ தின்னகா ரியமீ தின்னகால் வழியிதிப் படி யென், றன்னகா றலையற் றமலநீள் விழியா யகண்டைக ரசசின்மாத் திரமா, யென்னகா தலினு மேதுவற் றொன்று மேகமா யநேகத்தி னடுவாய்ப், பன்னகா சயனன் றன்றனக் குரிய பகலிர வற்றிடம் பரமே. (க)

சங்கையற் றுணர்வா யவயவ மின்றிச் சைதந்ய வடிவமா யென் றுந், தங்கையற் றுரைக்குந் தமக்கையற் றுறத்துந் தனக்குடன் முறையென லற்று, நங்கையற் றுளபெண் ணுண்குறி யற்றுந் நகை மிகும் பல்லுயிர்க் கிதய, பங்கயத் துறைவண் டாயமர்ந் திருக்கும் பகலிர வற்றிடம் பரமே. (உ)

சங்குபட் டுலைவாய் வேகினுங் கருகாச் சகஜமா முடற்குறி வெண்மை, தங்குபட் டுலகாய் விரியினு மிங்ஙன் றனக்கொரு தீங்கிலை யென்றும், மங்குபட் டுலவி லடலதுங் கோணு மாசிலாப் படிகமாஞ் சோதிப், பங்குபட் டுலவா தறிவரும் பொருளாம் பகலிர வற்றிடம் பரமே. (ரு)

எண்ணருங் கதிரொன் ருய்நடுங் குவதா மெப்படிக் கெதுபொருளதுவாங், கண்ணருங் காக்ஷி காண்பதற் கரிதாங் கரையள விவளதென் றரிதாம்,விண்ணருங் களைய பரமிகும் பூதம் வினவில்லெலாந் தனி லடக்கும், பண்ணருங் கலையிற் பிரிபடா முதலாம் பகலிர வற்றிடம் பரமே. (௪)

எட்டமாப் பகலா மாதவ ரிதயத் தெழுந்தரு ளுதயகற் பகமாங், கிட்டமாப் பகலாங் கூகையொத் தவர்க்குக் கிஞ்சிலும் வெளிப்படா தயலாஞ், சுட்டமாப் பகலாஞ் சுட்டில்வெற் பகமாஞ் சுருதியூடுருவிநின் றறிவாம், பட்டமாப் பகலாங் கலக்குமியா தெனினும் பகலிர வற்றிடம் பரமே. (ரு)

கண்டிதாங் காரங் களையெலாம் விளக்குங் கதிர்மதி யிரண்டிடை நடுவாந், துண்டிதா காரந் துரியவீட் டிருக்குந் துரியமற் றதுர்யமாங் காக்ஷி, விண்டிடா கார மெனக்கொளுங் குறிப்பில் விஞ்சைய விஞ்சைமற் றிலதாம், பண்டிதா காரஞ் சொரூபமாய் நிற்கும் பகலிர வற்றிடம் பரமே. (சு)

தேவினி வின்னந் தேடிட விழந்து தேடிய தேட்டற விழந்து, பூவினி வின்ன தெனுங்குறிப் பிழந்து பூர்விக மபூர்விக மிழந்து, நாவினி வின்ன ருசியென விழந்து நகாதிரை யெனவரு மிழந்து, பாவினி வின்னம் படியென விழந்து பகலிர வற்றிடம் பரமே. (எ)

துடிப்பவை யிழந்து துடிப்பற விழந்து துயருடன் மகிழ்ச்சியு மிழந்து, தடிப்பவை யிழந்து தடித்தில திழந்து தயைமுத லதயை

விட் டிழந்து, நடிப்பவை யிழந்து நடித்தில திழந்து நமக்கெனு மாசை யற் றிழந்து, படிப்பவை யிழந்து கேட்டிட விழந்து பகலிர வற்றி டம் பரமே. (அ)

மோசமுந் தவமாம் வியனினி திழந்து மொழிபல சமுசய மிழ ந்து, நீசமுந் தகிலஞ் சடங்கவை யிழந்து நிமிருதல் குறுகுத லொழி ந்து, நேசமுந் தரிய விந்தைய திழந்து நெடுஞ்சரா சரமென விழந்து, பாசமுந் தவத்தைப் பந்தமு மிழந்து பகலிர வற்றிடம் பரமே. (கூ)

வகைப்பிறி தகன்று வந்தியா மகன்போல் வருஞ்சிறு பழக்கமு மொழிந்து, துகைப்பிறி தகன்று விசும்பிட லொழிந்து தூய்மைய தூ ய்மைய திழந்து, தகைப்பிறி தகன்று மடமைய தகன்று தத்துவத் தொழில்பல விழந்து, பகைப்பிறி தகன்று சத்தநின் மலமாய்ப் பக லிர வற்றிடம் பரமே. (கo)

ஏகமுற் றநேக பாவனை நோக்கி யெழுதுவோ னெழுதிட விழ ந்து, சோகமுற் றடரும் பிரஞ்ஞனுக் குரிய சொற்றிரு வாழ்வென லொழிந்து; மோகமுற் றகில சீவசங் கற்ப மோடிநீள் போகமு மொ ழிந்து, பாகமுற் றகண்ட சுகசொரு பமுமாய்ப் பகலிர வற்றிடம் பரமே. (கக)

கூ-வது, பரம சகஜம் முற்றிற்று.

---

## கo - வது, அகண்ட சகஜம்.

சத்தியா ரோப சலனசக் கரமாஞ் சகளமிச் சகம்பல பொருந் தப், பத்தியா ரோப விகிர்தசத் துகளாய்ப் பலபல தொழில்விசே டத் தின், முத்தியா ரோப வத்துவாய் விளங்கு முன்னிலைச் சுட்டினுண் ணுணர்வா, யத்தியா ரோப மதிலவர் தமக்கு மஃதவ யவமிலா தகண்டம்.

இந்திரி யாதி கரணவேற் றுமைசெய் யிபந்தனை யடக்குமங் குச மாய்த், தந்திரி யாழி னிசைபயில் வீணை தரிப்பவ ருடன் குலா லனைப்போன், மந்திரி யாதிச் சகம்படைக் கின்ற மன்னவன் மருமுகி லலைக்கோ, ரந்தரி யாமி வளியென விளங்கு மஃதவ யவமிலா தகண்டம். (உ)

கொந்துணர்ச் சோலை பல்வகைப் பிரிக்கிற் கொம்பவை முதற்பல விசித்ரஞ், சந்தண மாதி வாசனை விகற்பஞ் சாற்றிலெண் ணரிதென லருந்த, முந்தணர் சூத்ரன் வசியன்க்ஷத் திரியன் முன்னிலைச் சுட்டிவை விளக்கு, மந்தண ராதி வருணமிப் பிரமை யஃதவ யவமிலா தகண்டம். (௩)

கேவலஞ் சகல சுத்தமூன் றவத்தை கேடெனுங் காலமூன் றிலதாம், பூவலஞ் சுழல வரவொடு நோக்கல் போக்கென வந்நிய மிலதாங், காவலன் சரிக்கு மானக ருடனற் கரிபரி தேர்தன மென்னு, மாவலஞ் சுதன்மற் றசித்துரு வாகு மஃதவ யவமிலா தகண்டம். (௪)

பூரணத் தனியாஞ் சுடர்நிறை வெல்லாம் பூண்டகத் தடக்கி நீடுருவக், காரணத் தனியாஞ் சுயந்திருக் கென்றுங் கத்ருவ போத்ருவ முளதாம், வாரணத் தனியாந் துரோட்டியற் பாகன் வாதனை சற்றுமுற் றிலதா, மாரணத் தனியா யெழுந்தரு ளறிவா மஃதவ யவமிலா தகண்டம். (ரு)

நாச்சிர முதலைஞ் சிரமுட னறு நவில்சில சிரங்களு மிலதாம், போச்சிர வென்னும் வரும்பக லென்னும் போதமு மயக்கமு மிலதா, மாச்சிர மைகள்செய் பிரமசா ரியமும் வருமவ தூதமற் றுரைக்கு, மாச்சிர மைந்தி லசங்கதிர் வாண மஃதவ யவமிலாத கண்டம். (சு)

சோதிமத் தியாந்த முடிவில்வீற் றிருக்குஞ் சோடச கலைப்பிர காச, நீதிமத் தியாந்த வடிவமாய் விளங்கு நிகரொன்ற றனக்கிலா தென்றுந், தேதிமத் தியாந்த மாத நீள் வருடந் தென்மடல் மிழக்குமேற்

கென்று, மாதிமத் தியாந்த ரகிதசா காமியா தஃதவ யவமிலா
தகண்டம். (எ)

உலகிலா தென்றுங் கறங்கெனச் சுழன்றிங் குகங்கள்போ லுதித் தொடுங் கிடுதல், இலகிலா தென்றும் வளிகண்ணீர் போல விகசிதஞ் சுருங்கு வதல்ல, விலகிலா தென்றுந் தனிப்பக லவனு யிலக்கில்பா ஞெளியென வயங்கு, மலகிலா தென்று நிறைந்தில குருமா மஃதவ
யவமிலா தகண்டம். (அ)

இழிவிலா தென்றுந் தனியிருப் படைந்தில் விந்திர சாலமா முகிலிற், சழிவிலா தென்றுங் குறிகுணஞ் சுட்டிக் கண்ணெதிர் கண்டவ ராரிங், கொழிவிலா தென்று மொருசலிப் பிலதா மோய்வற வொன்றின்மாய் விலதா, மழிவிலா தென்றுங் குறைவொடு நிறைவி
லஃதவ யவமிலா தகண்டம். (கூ)

விசைந்திலா தென்றும் விண்ணினு நட்பம் விகாரரூ ருவங் கடங் களுக்கு, ளிசைந்திடா தென்று மிதிலமர்ந் திருக்கு மிடிபவ கோடிமா ருதமும், பிசைந்திடா தென்றும் விண்ணவ ராதி பிரமரு மறிந்திலா ரின்ன, மசைந்திலா தென்று நிறம்பிறர்க் கரிதா மஃதவ
யவமிலா தகண்டம். (௧௦)

திணிந்திடுஞ் சுயசித் தவைகளுக் கடையாத் திரிவித கர்த்தரு மிரங்கிப், பணிந்திடும் பதனன் னளிர்தைய கமல பங்கயச் சிறப் பணி பதத்திற், றணிந்திடு முடிவி லுலகெலா முண்டு தன்வயத் தாயவித் தனிமை, யணிந்திடும் பிறப்பே வடிவமாய் நிற்கு மஃதவ யவமிலா தகண்டம்.

அவை=கல்விச் சங்கம். பிறப்பு=நெருக்கம்.

௧௦-வது, அகண்ட சகஜ முற்றும்.

---

இந்திரி யாதி கரணவேற் றுமைசெய் யிபந்தனை யடக்குமங் குச மாய்த், தந்திரி யாழி னிசைபயில் வீணை தரிப்பவ ருடன் குலா லனை ப்போன், மந்திரி யாதிச் சகம்படைக் கின்ற மன்னவன் மருமுகி லலைக்கோ, ரந்தரி யாமி வளியென விளங்கு மஃதவ யவமிலா தகண் டம். (உ)

கொந்துணர்ச் சோலை பல்வகைப் பிரிக்கிற் கொம்பவை முதற் பல விசித்ரஞ், சந்தண மாதி வாசனை விகற்பஞ் சாற்றிலெண் ணரி தென வருந்த, முந்தணர் சூத்ரன் வசியன்க்ஷத் திரியன் முன்னிலைச் சுட்டிவை விளக்கு, மந்தண ராதி வருணமிப் பிரமை யஃதவ யவ மிலா தகண்டம். (ங)

கேவலஞ் சகல சுத்தமூன் றவத்தை கேடெனுங் காலமூன் றில தாம், பூவலஞ் சுழல வரவொடு நோக்கல் போக்கென வந்நிய மில தாங், காவலன் சரிக்கு மானக ருடனற் கரிபரி தேர்தன மென்னு, மாவலஞ் சுதன்மற் றசித்துரு வாகு மஃதவ யவமிலா தகண்டம். (ச)

பூரணத் தனியாஞ் சுடர்நிறை வெல்லாம் பூண்டகத் தடக்கி நீடுருவக், காரணத் தனியாஞ் சுயந்திருக் கென்றுங் கத்ருவ போத் ருவ முளதாம், வாரணத் தனியாந் துரோட்டியற் பாகன் வாதனை சற்றுமுற் றிலதா, மாரணத் தனியா யெழுந்தரு ளறிவா மஃதவ யவமிலா தகண்டம். (ரு)

நாச்சிர முதலைஞ் சிரமுட னாறு நவில்சில சிரங்களு மிலதாம், போச்சிர வென்னும் வரும்பக லென்னும் போதமு மயக்கமு மிலதா, மாச்சிர மைகள்செய் பிரமசா ரியமும் வருமவ தூதமற் றுரைக்கு, மாச்சிர மைந்தி லசங்கநிர் வாண மஃதவ யவமிலாத கண்டம். (சு)

சோதிமத் தியாந்த முடிவில்வீற் றிருக்குஞ் சோடச கலைப்பிர காச, நீதிமத் தியாந்த வடிவமாய் விளங்கு நிகரென்ற றனக்கிலா தெ ன்றுந், தேதிமத் தியாந்த மாத நீள் வருடந் தென்மடல் இழக்குமேற்

கென்று, மாதிமத் தியாந்த ரகிதசா சாமியா தஃதவ யவமிலா தகண்டம். (எ)

உலகிலா தென்றுங் கறங்கெனச் சுழன்றிங் குகங்கள்போ லுதித் தொடுங் கிடுதல், இலகிலா தென்றும் வளிகண்ணீர் போல விகசிதஞ் சுருங்கு வதல்ல, விலகிலா தென்றுந் தனிப்பக லவனு யிலக்கில்பா னொளியென வயங்கு, மல்கிலா தென்று நிறைந்தில குறுமா மஃதவ யவமிலா தகண்டம். (அ)

இழிவிலா தென்றுந் தனியிருப் படைந்திவ் விந்திர சாலமா முகிலிற், சழிவிலா தென்றுங் குறிகுணஞ் சுட்டிக் கண்ணெதிர் கண்டவ ராரிங், கொழிவிலா தென்று மொருசலிப் பிலதா மோய்வற வொன்றின்மாய் விலதா, மழிவிலா தென்றுங் குறைவொடு நிறைவி லஃதவ யவமிலா தகண்டம். (கூ)

விசைந்திலா தென்றும் விண்ணினு நுட்பம் விசாரபூ ருவங் கடங் களுக்கு, ளிசைந்திடா தென்று மிதிலமர்ந் திருக்கு மிடிபவ கோடிமா ருதமும், பிசைந்திடா தென்றும் விண்ணவ ராதி பிரமரு மறிந்திலா ரின்ன, மசைந்திலா தென்று நிறம்பிறர்க் கரிதா மஃதவ யவமிலா தகண்டம். (கய)

திணிந்திடுஞ் சுயசித் தவைகளுக் கடையாத் திரிவித கர்த்தரு மிரங்கிப், பணிந்திடும் பதனன் னளிர்தைய கமல பங்கயச் சிறப் பணி பதத்திற், றணிந்திடு முடிவி லுலகெலா முண்டு தன்வயத் தாயவித் தனிமை, யணிந்திடும் பிறப்பே வடிவமாய் நிற்கு மஃதவ யவமிலா தகண்டம்.

அவை=கல்விச் சங்கம். பிறப்பு=நெருக்கம்.

கய-வது, அகண்ட சகஜ முற்றும்.

———

## கக - வது, நாட்ட சகஜம்.

---

தொல்வினை யகந்த வடிவமாஞ் சிருட்டி தோன்றசம் பாவனை நசித்துக், கொல்வினை யகந்த துன்பவே தனைசெய் கோபதா பங்களு நசித்துச், சொல்வினை யகந்தம் விளக்கவா தறுவெஞ் சோகபாவனையற நசித்து, நல்வினை யகந்தந் தீமைபல் நசித்து நானென னசிப்பதே நாட்டம். (க)

சிந்துமைம் பூத காரண நசித்துச் சீவவாங் காரமு நசித்துப், பந்துவ பந்து வென்றிட னசித்துப் பாட்டரு மைந்தரு நசித்துத், தந்துமைப் படம்போற் காண்பன நசித்துத் தாக்ஷியாங் காக்ஷிபோய் நசித்து, நந்துவைக் குடைமைக் குரிமைபல் நசித்து நானென னசிப்பதே நாட்டம். (உ)

பத்துவ பத்துப் படுப்பவன் படுத்தப் படுபொருள் பல்வகை நசித்துச், சத்துவ பத்துச் சகத்தினுக் குரிய சகஜமாம் பிணிப்பென னசித்துச், சித்துவ பத்துச் சித்திடை வடிவாய்ச் சித்தஜின் கரைந்தது னசித்து, நத்துவ பத்துப் பிரிவற நசித்து நானென னசிப்பதே நாட்டம். (ஙு)

வட்டமற் றற்றுக் கோணன்மற் றற்று வஞ்சகப் பொறிவழி யற்று, விட்டமற் றற்றுப் பகைதகை யற்று விளங்குற வணங்குத லற்றுச், சுட்டன்மற் றற்றுச் சுபாவமீ ருகச் சூநியா சூநிய மற்று, நட்டமற் றற்றே யிலாபமு மற்று நானென னசிப்பதே நாட்டம். (ச)

தச்சுர மற்று லெக்ஷிய மற்றுத் தர்க்கவாச் சியங்களு மற்றுக், கச்சுர மற்றுப் பகுதிமற் றற்றுக் காண்பவை யடங்கலு மற்றே, யெச்சுர மற்றெவ் வெதிருறு மச்சற் றெங்குநா னென்பது மற்று, நச்சுர மற்றுத் தவசுர மற்று நானென னசிப்பதே நாட்டம். (ரு)

நேசமோ டுயர்வா லிபழுத லாதி கெடியமெய் வர்க்கமு நசித் துப், பாசமோ டுலவாப் பாசம தென்னும் பாழ்வழித் தொடர்பவை நசித்துக்; காசமோ டுறுமா காசமீ ருகக் கண்ணெதிர்ப் படுமவை நசித்து, நாசமோ டடவின் விநாசமு நசித்து நானென னசிப்பதே நாட்டம். (சு)

எடனை மூன்றி லடங்கலு நசித்தே யெட்டரி தெட்டிட நசித் துக், கூடனைப் பிரிவாய் வருமனைத் தென்னுங் கூறிய கலைபல நசித் துத், தூடனை யசுத்தஞ் சுத்தமு நசித்துத் துதிபா னென்ன னசித்து, நாடனை யில்லா திருப்பதே யடைந்து நானென னசிப்பதே நாட்டம். (எ)

வேதனைத் தானு யரிதனைத் தானுய் வெற்றிநீ ளுருத்திரன் ருனுய், வாதனைத் தானுய்ச் சதாசிவன் ருனுய் வருதுரு வாதியைத் தானுய், நீதனைத் தானுய் நினைப்பினைத் தானுய் நினைப்பற விருப்ப வன் ருனுய், நாதனைத் தானு யறிபவை நசித்து நானென னசிப்பதே நாட்டம். (அ)

இம்மையாய் வருமித் திரிசிய நசித்தே யிணைதிருக் கென்பவை நசித்து, மும்மையா யிருந்த முதலவை நசித்து முடிநடு வடியென னசித்துச், செம்மையா யடரிப் பலவிகா ரத்தின் செருக்கவை நுகர்ந் திட னசித்து, நம்மையா ரென்ன விநவிட னசித்து நானென னசிப்பதே நாட்டம். (கூ)

ஆட்டுத லாட்டப் படுகுத னசித்தே யறிவறி யாமைக னசித் துக், காட்டுதல் காட்டப் படுமவை நசித்துக் கதிபல ரூபமு நசித் துக், கூட்டுதல் கூட்டப் படுகுறி நசித்துக் குருமுதற் சீடனு நசித்து, நாட்டுத னட்டப் படுகுத னசித்து நானென னசிப்பதே நாட்டம். ()

மிஞ்சுணர் வாதி வரும்பரி யாய மிகுந்துறு பௌதிக நசித்துத், தொஞ்சுண ரவத்தைக் கரணமு நசித்துத் தோன்றிட லடங்கலு நசித்தே, யெஞ்சுணர் நசித்துச் சீவனு நசித்தாங் கெழுந்தொடுங் கவைபல நசித்து, நஞ்சுநல் லமுத மென்றிட னசித்து நானென னசிப்பதே நாட்டம். (கக)

கக - வது, நாட்ட சகஜ முற்றும்.

ஆகப் பதிகம் கக - க்குக் கவிகள் - கூ௨க.

சுப மஸ்து.

## குருஸ்துதி.

கார்தருமென் குழன்மலையின் கன்னியிட மருங்கொளிரக் கனக மன்று, ளார்தருநன் னடமியற்று மம்பலவன் றன்னடிய ரகத்துட் டுன்று, மீரிருளை யிரிப்பதற்கா யெடுத்தவடி வெனவுலக மிசைப்ப வொன்றுஞ், சீர்தருபொன் னம்பலவன் செம்மலர்த்தா ணம்மனத் துஞ் சிரத்துஞ் சேர்ப்பாம்.

பரம சற்குருவே நம :



